

# நால்வர் காட்டிய வழி



நஜன்




திருஞான சம்பந்தர்


திருநாவுக்கரசர்


சுந்தரமூர்த்தி சுவாமிகள்




மாணிக்கவாசகர்


மெய்கண்டார்


அருள்நந்தி சிவம்


மறைஞான சம்பந்தர்


உமாபதி சிவம்

பிரதிபா
பிரசுரம்
சென்னை



# ஜய ஹநுமான் அருள் பெற வழி



ஜய ஹநுமான் சஞ்சீவீ மலேயுடன் வால் மேல் நோக்கி பறக்கும் நிலேயில் இருப்பதே சாஸ்திர விதி. நமக்கு ஆரோக்கியம், ஆனந்தம், ஐஸ்வர்யம், அமைதி இவைகளைத் தருபவர் ஜெயஹநுமானே.

இவருடைய படம் மந்திர தந்திர யந்திர சாஸ்திரப்படி கேரள குரு பகவான் அனுக்கிரகத்தால் ஸ்ரீ பஞ்சமுக ஹநுமத் உபாசனையில் ஸித்திபெற்ற மெலட்டூர் ஹநுமான் தாஸ் ஸ்வாமிகளால் வெளியிடப்பட்டுள்ளது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்கள் இதை அனுக்கிரஹித்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| பெரிய படம் | 48 × 35 cm. | விலே ரூ. 6 — 00 |
| சிறிய படம் | 37 × 25 ,, | விலே ரூ 3 — 00 |
| பூஜை புஸ்தகம் | | விலே ரூ. 1 — 00 |

ஸ்திரீ புருஷர் யாவரும் பூஜிக்கலாம். பக்தி சிரத்தை ஆசாரம் வேண்டும். மெலட்டூரிலிருந்து மட்டும் படங்கள் பார்சலில் அனுப்பப்படும் ரூ. 10 M.O. செய்து பெறலாம். 50 படங்களுக்கு குறையாமல் வாங்கினுல் 20% கமிஷன் உண்டு.



மாந்திரீக சம்பந்தமான சகல தோஷங்களும் நிவர்த்தி செய்யப்படும். அன்பர்கள் தங்கள் குறைகளை கோத்திரம் நாம நக்ஷத்திரம் ராசி முழுவிலாசம் மெலட்டூர் விலாசத்திற்கு எழுத வேண்டும்.

**ஸ்வாமி**
**ஹநுமான்தாஸ்**

(ஹநுமத் உபாஸி)
மெலட்டூர் - 614301.
தமிழ்நாடு.

# நால்வர் காட்டிய வழி

## (சைவ சித்தாந்தம்)



ஆசிரியர் :
ஸ்ரீவித்யா ஞான பாஸ்கர
"நஜன்"
(எஸ். நடராஜன்)



—பிரதிபா பிரசுரம்—
துவக்கம் : நவராத்திரி 1973




பிரசுரித்தவர் :
என். லலிதாம்பாள்
பிரதிபா பிரசுரம்
39, ஆடம் தெரு, மயிலாப்பூர், சென்னை-600 004.
Phone : 74720

 [விலை ரூ. 8-00

நால்வர் காட்டிய வழி

முதல் பதிப்பு : பிப்ரவரி 1982.

விலை ரூ. 8-00



பிரதிபா பிரசுரம்
67

---

## பொருளடக்கம்



---

கயப்பாக்கம் ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் கயப்பாக்கத்திலுள்ள அவருடைய இல்லத்தில் நடைபெற்ற சண்டி ஹோமத்தன்று வெளியிடப்பட்டது.

---

அச்சிட்டோர் : லஷ்மிராஜ் பிரிண்டர்ஸ், சென்னை-600 014.

2-6

# காணிக்கை



ஆஸ்திகம் தழைக்கவும், சத் சங்கங்கள் சமயப் பணியை சிறப்பாக நடத்த ஊக்கம் அளித்து வருபவருமான கயப்பாக்கம் ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார், திருப்புகழ் ஞான வேள்வியும் நடத்தி வருகிறுர். எங்களுடைய புத்தக வெளியீடு வேள்விக்கும் அம்பிகை அருளால் அவருடைய உதவி கிடைத்தது. அதன் பயனுக வெளி வந்ததே இந் "நால்வர் காட்டிய வழி".

கயப்பாக்கம் ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் அவர்களுக்கும், அவர் துணைவியார் அமரரான ஸ்ரீமதி மகாலட்சுமி அம்மையார் அவர்கள் நினைவிற்கும் இந் நால்வர் காட்டிய வழி நூலை காணிக்கையாக்குகிறோம்.

பிரதிபா பிரசுரத்தினர்.

# பதிப்பாசிரியர் நன்றி

சைவ சித்தாந்தத்தை விளக்கும் "நால்வர் காட்டிய வழி" பிரதிபாவின் 67வது புத்தகமாக வெளிவருகிறது. 6+7=13, 1+3=4—எண் மிகப் பொருத்தமாகவே அமைந்துள்ளது.

கயப்பாக்கம் ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் எங்களுக்கு கற்பக விருக்ஷமாகக் கிடைத்தார். அவர் ஆஸ்திக விஷயங்கள் எதுவாகட்டும், சத் சங்கங்கள் எதுவாகட்டும் அவைகளுக்கு நிதி உதவியும் ஆதரவும் அளித்து வருகிற வள்ளல். இவர் உதவியால் "நால்வர் காட்டிய வழி" உங்கள் கையில் புத்தகமாக விளங்கு கிறது.

இவர் கயப்பாக்கத்தில் நடத்தும் சண்டி ஹோம வைபவத்தில் இப் புத்தகம் வெளியிடப்படுகிறது இந்நூலை அவருக்கும் இறைவனடி சேர்ந்த அவர் துணைவியார் ஸ்ரீ மகாலட்சுமி அம்மையார் நினைவுக்கும் காணிக்கையாக்குகிறோம்.

இந்நூலுக்கு முகவுரை அளித்திருப்பவர், "சித்தாந்த வித்தகர்" ஸ்ரீ கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள். இவர் நால்வர் சேக்கிழார் திருவுருவங்களைப் பல ஆலயங்களில் ஏற்படுத்தி யும் பல இடங்களில் பன்னிரு திருமுறைக் கோவில்கள் நிறுவியும் பல சமய நூல்களை வெளியிட்டும், சைவ சமயத்திற்கு அருந் தொண்டு ஆற்றியிருக்கிறார்கள். நால்வர் பற்றிய இச் சைவ நூலுக்கு இவரை விட முகவுரை எழுதக்கூடிய பொருத்தமானவர் யார் இருக்கிறார்கள்? இவருக்கு எங்கள் வணக்கம்.

ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் மூலம் கிடைத்த மற்றொரு அன்பர் புலவர் ஸ்ரீ தேமொழியார் அவர்கள். போதிப்பதை விட வாழ்ந்துக் காட்டுவதே சிறந்த போதனை என்பதில் நம்பிக்கையுள்ளவர். திருமந்திரம், திருவாசகம் முதலிய சைவ நூல் கடலிலிருந்து ஆழ் முத்துக்களைத் தேடித் தருபவர். அவர் இந்நூலுக்கு அணிந்துரை எழுதியிருக்கிறார். அவருக்கு எங்கள் வணக்கம்.

சமய குரவர்கள் இருவரும், சந்தான குரவர்கள் இருவரும் பிறந்து வளர்ந்த மண் திருமுனைப்பாடி நாடு என்றழைக்கப்பட்ட தென்னாற்காடு மாவட்டமே. இந்த மாவட்டத்தைச் சேர்ந்த கயப்பாக்கத்தில் இந்நூல் வெளியிடப்படுவது மிக மிகப் பொருத்த மாகும்.

அட்டைப் படத்தை அழகுற அமைத்துக் கொடுத்த ஸ்ரீ சுபா அவர்களுக்கும், நூலை அச்சிட்டுத் தந்த லக்ஷ்மி ராஜ் பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் எங்கள் நன்றி. அருளாசி வழங்கிய மகான்கள் எல்லோருக்கும் எங்கள் நமஸ்காரங்கள்.

மயிலாப்பூர்
1—2—82

என். லலிதாம்பாள்.

2-6

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

**ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீமடம் சமஸ்தானம்**

காஞ்சீபுரம்

முகாம்:

அரியநாயகிபுரம் தேதி: 1—2—82



# ஸ்ரீமுகம்

இந்து சமத்தில் சைவ வழிபாடு முறையில் நால்வர் எனப் போற்றப்படும் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முக்கிய மானவர்கள். இவர்கள் ஒவ்வொருவரும் இறைவனை நேராகக் கண்டு அருள் பெற்றவர்கள். இவர்கள் பாடிய பாடல்களில் பக்தி க்ஷேத்திர வரலாறுகள், இறைவனின் தோத்திரங்கள், சமயக் கருத்துகள் இவை எல்லாம் அடங்கியுள்ளன.

இந்த நால்வர், சைவ சாத்திரங்கள் இயற்றிய சந்தான குரவர் நால்வர், இவர்களுடைய அருளுரைகளை எல்லாம் தொகுத்து 'நால்வர் காட்டிய வழி' என்று ஸ்ரீ நஜன் (எஸ். நடராஜன்) புத்தகம் எழுதியிருப்பது கேட்டு சந்தோஷிக்கிறோம்.

மேன்மேலும் இதேபோல புஸ்தகங்கள் எழுதிக்கொண்டு பகவானுடைய அருளுக்கு பாத்திரமாகும்படி ஆசீர்வதிக்கிறோம்.

நாராயண ஸ்மிருதி.

# ஸத்குரு ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள்
# அருளாசிச் செய்தி

ஸ்கந்தாஸ்ரமம்
சேலம்-14

தேதி: 16—1—82



சைவ சித்தாந்தத்தில் அங்கிங்கென்னுதபடி எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல சிவன் ஒருவனேயே வானுகவும் காற்ருகவும் அனலாகவும் புனலாகவும் புவியாகவும் போற்றி சைவ மதம் தழைத்தோங்கும்படிச் செய்தவர்களில் தமிழகத்தில் முதன்மையானவர்கள் நால்வரேயாவர். சமயக் குரவர்களான இந் நால்வர் தமிழ் வேதம் எனப்படும் தேவாரப் பாடல்களால் சைவ மதம் மேலும் தழைத்தோங்கச் செய்தவர்கள்.

சாஸ்திரங்கள் மூலம் இறையருள் பெற வழியினைக் காட்டியவர்கள் சந்தான குரவர்களாகிய நால்வர். இவர்கள் போதித்த விஷயங்களையும், பக்தியில் பலவித மார்க்கங்களைப் பற்றியும் பதிபசு பாசத்தைப் பற்றியும். சைவ சித்தாந்தம் பற்றிய கையேடு எனப் புகழப் படும்படியாக இந்த "நால்வர் காட்டிய வழி" என்கிற புத்தகத்தை தமிழகத்தில் உள்ள உத்தமர்கள் அனைவருமே போற்றிப் புகழப் பட்டுவரும் ஸ்ரீ வித்யா ஞான பாஸ்கரனுகிய அன்புக் கடலாகிய நஜன் சிவப்பிரஸாதமாகவே உலகில் உள்ள தமிழர்களுக்குக் கொடுக்கிருர்கள்.

நஜன் தனது உடல்நலமின்றி இருந்து வரும்போதும் இந்த நால்வர் காட்டிய வழியெனப்படும் நூலை கொடுப்பதை நினைக்கும் போது நால்வரில் ஒருவரான அப்பர் ஸ்வாமிகள் சொன்ன என் கடன் பணிசெய்து கிடப்பதுவே என்பதையே நஜன் மேலும் சிக்கெனப் பற்றிக்கொண்டு மேலும், மேலும் இப்படிப்பட்ட புத்தகங்களை தமிழுலகத்திற்குக் கொடுத்துக் கொண்டே இருந்துவர நஜன் நீண்ட ஆயுள் ஆரோக்கியத்துடன் த்ருடகாத்திர சரீரத்துடன் இருந்து வரவேண்டுமென ஜகத் ஜனனியான ஸ்ரீ மாதா புவனேசுவரி தேவியின் ஸ்மரண பூர்வகமாக மேலும் மேலும் விசேஷமான ஆசிகளை அனுப்பிக்கொண்டே யிருந்து வருகிருேம்.

சுபம்

ஸ்ரீ ஸ்கந்தாச்ரமம்
சேலம்-14
16—1—82

ஸ்வாமி சாந்தானந்தா.

# மதுரை ஆதீனகர்த்தர் அருளாசி

## ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக

## பரமாச்சார்ய சுவாமிகள்

70, தென் ஆவணிமூல வீதி,
மதுரை-625001. 28—1—82.



எல்லாம் வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

நல்லகதி பெறும் பொருட்டு மானுடம் முதலில் பக்தி வாழ்வில் தோய்தல் வேண்டும். பரமபதம் அடைவதின் பொருளை உய்த்துணர்ந்தாக வேண்டும். மனித வாழ்வு காமக் களியாட்டங்களில் சிக்கி அகங்காரம் என்னும் கொடும் பாறையில் முட்டி மோதி அலமுறாமல் இருக்க இறைவன் சாத்திரங்களை சமயப் பெரியோர்கள் வாயிலாக ஒளிரச் செய்திருக்கிறான். இது சாத்திரங்கள் வந்த வரலாறு.

குரு மரபின் வழியாக அவைகளை இறைவனே நிலை நிறுத்து கிருன். சிவபெருமானை முழுமுதல் தெய்வமாக வழிபட்டு உய்தி பெற்ருேர்களுக்கு சான்று தரும் வகையில் இன்றும் ஆதீனங்கள் செவ்வையாக அருளோச்சி வருவதை தமிழுலகம் நன்கறியும். நாயன்மார்களே சைவ உணர்வைப் பெருக்கி நின்றதில் பெரும் பங்கு வகித்து வந்தவர்கள் என்பது மற்ருெரு உண்மை.

நாயன்மார்களுள் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் நால்வரும் மாந்தரினம் உய்வதற்கு நல்லதோர் நெறியென சிவநெறியைக் காட்டினர். தோத்திரங்களால் இன்சுவை ஏற்றினர். மற்றவர்களும் அந்நெறியில் சென்று ஏற்றம் பெற வேண்டும் என்ற அவாவில், "நான்கு பேர் காட்டிய வழி" 'நஜன்' அவர்களால் விளக்கம் பெற இருப்பதை அறிந்தோம்.

ஏராளமான பக்தி நூல்களை எழுதிக் குவித்துள்ள 'நஜன்' அவர்களுக்கு இந்தப் படைப்பு ஒரு முக்கிய சாதனை. அதன் அருமையே நமக்குப் பெருமையாகும். நாமும் சமய உண்மைகளை விளக்கி 20ம் நூற்ருண்டின் பக்திப் பாசறையாக ஆதீன பீடத்தைப் பயன்படுத்துகிருேம். நான்கு பேர் காட்டிய வழி இந்த மேம்பாட்டை வாசகர்களுக்கும் அடியவர்களுக்கும் பகிர்ந்து அளிக்குமாக.

தொடர்ந்து நமது சமயப் பெருமைகளை "நஜன்" அவர்கள் "பிரதிபா பிரசுரம்" மூலம் விளக்கி சமயத் தொண்டில் பிரகாசித்திடுவார் என்று நம்புகிருேம். சைவ பக்தியும் சைவ நூல் பக்தியும் செழித்து வர இதுவரை வந்த வெளியீடுகளும், இனி வரவிருப்பவையும் உறுதுணையாக நிற்க வேண்டும் என நஜன் அவர்களை வாழ்த்தி ஆசீர்வதிக்கிருேம்.

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்.

---

### ஸ்ரீமத் சாரதானந்த பாரதி சுவாமிகள்

## அருளாசி

சைவ சித்தாந்தம் என்பது மிக உயர்ந்த உன்னத நோக்கம் கொண்ட சமயம் என்று தாயுமானவரே வாயாரப் பாராட்டிப் பாடியிருக்கிருர்.

இத்தகைய சமயத்தை சாஸ்திரத்தாலும், ஸ்தோத்திரங்களாலும் பாடியவர்கள் புகழ்பெற்ற நான்கு பேர்கள். இவர்கள் கையாண்ட வழிகளையும் போதனைகளையும் சுவையோடு படிக்க படிக்க ஆர்வம் ஏற்படும்படி 'நஜன்' எழுதியிருக்கிருர். சைவ சித்தாந்தத்தின் கையேடு என்று இதைக் குறிப்பிடலாம், வாழ்க நஜன். வளர்க அவர் தொண்டு.

முகாம் : கடலூர்
1—2—82

ஸ்ரீமத் சாரதானந்த பாரதி

# முகவுரை

## "சித்தாந்த வித்தகர்"

## கயப்பாக்கம் திரு சோமசுந்தரம் செட்டியார் அவர்கள்.

உ

சிவமயம்



எப்போ தகத்து நினைவார்க்கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

என் மதிப்பிற்குரிய "நஜன்" அவர்கள் எழுதிவரும், "நால்வர் காட்டிய வழி" என்னும் நூலின் ஒரு பகுதியைப் படித்தேன். நூல் கற்றோரும் மற்றோரும் படித்து அறிந்து கொள்ளக் கூடிய வகையில் எழுதப்பெற்றுள்ளது. நூல் ஆசிரியர் அந் நூலில் வடமொழி மேற் கோள்கள், ஆகமங்கள், உபநிடதங்கள் முதலியவற்றிலிருந்து வழங்கப்பெற்றுள்ளது அவருடைய வடமொழிப் புலமையைப் காட்டு கிறது. தமிழிலுள்ள திருமுறைகள், தாயுமானவர் பாடல்கள் முதலியவற்றைக் கூறியுள்ளது அவரது தமிழ்ப் புலமையைத்

தெளிவுபடுத்துகிறது. இவையன்றி வைணவ கிரந்தங்களிலிருந்து அநேக சான்றுகளை அளித்திருப்பது அவருடைய வைணவப் புலமையைக் காட்டுகிறது. இரண்டொரு ஆங்கிலப் பழமொழிகளை ஆண்டிருப்பது இவரது ஆங்கிலப் புலமையைத் தெரிவிக்கின்றது.

இந்நூல் அரிய, எளிய, சீரிய, முறையில் எழுதப் பெற்றுள்ள தால் பலருக்கும் பயன்படும். பொதுமக்களுக்கு இவர்கள் செய்து வரும் தமிழ்த் தொண்டு பாராட்டுதற்குரியது. மேலும், இதுபோன்ற பல நூல்களை எழுதி வெளியிட ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசப் பெருமான் திருவருள் பாலிப்பாளாக!

வாழ்க நஜன் அவர்கள்.

வளர்க அவர் தம் தொண்டுகள்.

சைவமும் தமிழும் தழைத்து இனிது ஓங்குக.

63 காளியம்மன் கோயில் தெரு
விருகம்பாக்கம், சென்னை-92.

கயப்பாக்கம்
சோமசுந்தரம் செட்டியார்

---

## வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள்

புத்தகம் வாங்க விரும்புவர் புத்தக விலையை மணியாடர் செய்யவும். புத்தகம் வி.பி.யில் வரும் போது தபால் செலவு கட்டிப் பெறவும். புத்தகம் பத்திரமாக கிடைக்க இதுவே வழி.

விளக்கங்கள் கேட்டும் சந்தேகங்கள் தெளிவுபடுத்தக் கோரியும் அன்பர்களிடமிருந்து ஏராளமாக கடிதங்கள் வருகின்றன. ஒவ்வொரு மாதமும் கடைசிவாரம் பதில் எழுதி அனுப்பப்படும்.



# அணிந்துரை

வாழ்வியல் புலவர்,
செந்தமிழ் வித்தகர்

தவத்திரு
சொ. ர. தேமொழியார்
அவர்கள்
தொண்டர், அருள் ஞானப்
பொருவெளி,
புக்கத்துறை,
செங்கற்பட்டு மாவட்டம்.

இந்திய சமயம் பலவற்றுள் மிகவும் பழமையானது சைவ சமயம். அது பதி, பசு, பாசம் என்ற முப் பொருள் உண்மையினைத் தெளிவு செய்யும். பாசமாம் பற்றை அறுத்துப் பதியாம் பரம்பொருளை அடைய விழைவது பசுவாகிய ஆன்மா.

பற்ருகிய பாசத்தளையை அறுத்துப் பாரிக்க இறைவன் குருவாக வருவான். பக்குவம் எய்திய ஆன்மாவை ஆட்கொள்வான். அந்த நிலையில் நால்வகை நெறியை உணர்த்துகின்ருன். அந் நெறியை உணர்வால் பற்றி ஒழுகிஞல் பற்றுத் தானே அகலும். அந்நிலையில் துலக்கப் பட்டப் பாத்திரம் அழுக்கன்று ஒளிர்வது போல ஆன்மா திகழும்.

தூய பாத்திரத்தில் வைத்த எந்தப் பண்டமும் கெடாது. நால் வகை நெறியால் உயர்ந்த தூய ஆன்மாவில் அருளாகிய பண் டத்தை வைப்பான். அதுவே இறைவன் அருளும்நிலை.

எந்த நெறியானுலும் இறைவனே அதன் மூலமாவான். அவனை அணுகும் மார்க்கம் நால்வகையாகும். அதை நமக்கு உணர்ந்து ஒழுகிக் காட்டியப் பெரியவர்கள் நால்வர். இந்த நூல் ''நால்வர் காட்டிய வழி'' என்ற தலைப்பில் அமைந்துள்ளது. பல ஆதாரங் களை எடுத்துக் காட்டி ஆசிரியர் விளக்கியுள்ளார். இந்த ஒரு நூலைப் படித்தால் பல நூல்களைப் படித்த பயன் அடையலாம்.

ஆசிரியர் திருவாளர் நஜன் அவர்கள் நல்ல எழுத்தாளர். ஆன்ம உணர்வைத் தூண்டும் உயர்ந்த சிந்தனையைத் தருபவர். அறுபது நூல்களுக்குமேல் எழுதி அரிய பணியாற்றியுள்ளார்; ஆற்றுகின்ருர். ஆற்றுவார். நாலு தொகை; பதினுறு வகை; விரிவு விழைவார் உளத்தளவு அத்தனையும் நால்வர் காட்டிய வழியில் பரக்கக் காணலாம்.

அவர் பணி மேலும் தொடர இறைவன் ஒன்ருய் இருந்தும் உடனுய் இருந்து வேருய் இருந்து அருள் புரியுமாறு வணங்கு கின்றேன்.

புக்கத்துறை,
15—2—82

சொ. ர. தேமொழியார்.

# "அறச்சுடர்" கயப்பாக்கம்

# ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் வாழ்க

தர்மங்கள் 32 என்பர். அவைகள் எல்லாவற்றையும் செய்து அதில் இன்பம் காண்பவர் ஸ்ரீ முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள். இவர் தலைவராகவும் உறுப்பினராகவும் இருந்து நடத்திய ஆலயக் கும்பாபிஷேகங்கள் எண்ணற்றவை.

கயப்பாக்கம் தீர்த்தகிரீஸ்வரர் திரிபுர சுந்தரி ஆதிகேசவப்பெருமாள் ஆலயத்தின் பரம்பரை நிர்வாகஸ்தர் இவர்: அச்சிறுப்பாக்கம் ஆட்சீஸ்வரர் ஆலய இரு கும்பாபிஷேகங்கள் இவர் முன்னிலையில் நடைபெற்றிருக்கின்றன. அச்சிறுபாக்கத்திற்கு மூன்று மைலிலுள்ள பொறையூர் கிராமத்தில் நூதன சிவாலயம் காஞ்சி காமகோடி சுவாமிகள் அவர்கள், திருவலம் சிவானந்த சித்தர் மௌன குரு சுவாமிகள் உத்திரவு அனுக்கிரகம் காரணமாக இவரால் கட்டப்பட்டு இப்போது இரண்டாவது கும்பாபிஷேகம் நடைபெற விருக்கிறது.

மதுராந்தகம் ஏரிகாத்த ராமர் கோவில் டிரஸ்டியாக சமார் 15 ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றியுள்ளார்.

செங்கல்பட்டு ஜில்லா போர்டு உபதலைவர், படாளம் சர்க்கரை ஆலை நிர்வாகக்குழு உறுப்பினர். மதுராந்தம் கூட்டுறவு விற்பனை சங்கம் தலைவர் (சுமார் 30 ஆண்டுகள்) இப்படிப் பல பொறுப்பான பதவிகளை திரு. ரெட்டியார் வகித்துள்ளார்.

இவர் மதுராந்தகம் ஹிந்து உயர்தர ஆரம்ப பள்ளியை 1915 முதல் நிர்வகித்து வருகிறார். (இதற்கு முன் 1904 முதல் இப் பதவியை இவர் தகப்பனார் வகித்து வந்தார்.)

இவருடைய நிதி நன் கொடையால் பல சத் சங்கங்கள் அரும் பணி ஆற்றிவருகின்றன. இவர் செல்லாத தலங்கள் இல்லை என்றே சொல்லலாம். இவர் ஸ்தானம் செய்யாத தீர்த்தம் இல்லை.

இவருடைய துணைவியார் ஸ்ரீமதி மகாலட்சுமி அம்மையார் 1981 ஜனவரி 2ம் தேதி அமரரானார். ஸ்ரீ ரெட்டியார் அறப்பணிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இந்த "அறச்சுடர்" நீடித்து ஒளிவிட்டுப் பிரகாசிக்கப் பிரார்த்திக்கிறோம்.

# ஆசிரியர் முகவுரை

இறைவனிடம் அன்பு செலுத்துவதே பக்தி. பக்தியின் புற இலக்கணம் பணியும் புகழும், அக இலக்கணம் பயனும் போகமும் இப்பக்தியை பலர் பலவிதம் கையாண்டிருக்கிறார்கள். கண்ணப்பரைப்போல பக்தி செலுத்த நம் யாராலும் முடியாது. எப்படி பக்தி செலுத்துவது என்றால் "நான்கு பேர் காட்டிய வழியில் போ" என்கிறார்கள் பெரியோர்.

இந்த நால்வர் யார்? சாமானியப்பட்ட யாரோ நால்வரைக் குறிக்காது. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகரையே குறிக்கும். இவர்கள் பக்தி செலுத்த சில விசேஷ மார்க்கங்களைப் பின்பற்றினாலும் அவர்கள் ஒன்று சேரும் இடம் ஒன்றுதான். இறைவனாகிய பெருங் கருணைக் கடலோடு சேரும் நான்கு பெரும் நதிகளைப் போல்வன இவர்கள் பின்பற்றிய வழிகள். சம்பந்தரைப்போல சிவஞானம் அம்பிகை மூலம் புகட்டப்பட வேண்டும் என்றால் அதற்கு பூர்வ ஜன்ம புண்யம் வேண்டும். அப்பர் பெருமான் அருள் மொழிகளை சொல்லளவில் உணர்தல் மட்டும் போதாது. செய்கையில் பல தொண்டுகளைச் செய்வதே பயன் பெறும் வழியாகும்.

சுந்தரர் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டோடு தொண்டு நெறி முடிந்துவிட வில்லை. அடியார்க்குச் செய்யும் தொண்டினால் தான் தொண்டுநெறி முற்றுப் பெறுகிறது என்பதை விளக்கியுள்ளார். மாணிக்கவாசகர் ஆண்டவனது பெருமை, அடியவரது பெருமை அவர்களுக்குச் செய்யும் தொண்டின் பெருமை முதலியவற்றை உணர்வினால் உணர்ந்து போற்றுவதே ஆண்டவன் விரும்புவது என்பதை விளக்கியிருக்கிறார்.

சைவ சாஸ்திரங்கள் ஞானத்தை விளக்கி அருளியவர்கள் சந்தான குரவர்களாகிய நால்வர், சமய குரவர்கள் காட்டிய வழியில் ஓரளவு மனம் பக்குவம் பட்டிருந்தால் சந்தான குரவர்கள் காட்டிய வழியை புரிந்துக் கொள்வது சிரமமில்லை.

சைவ சித்தாந்தம் என்ற தத்துவம் தமிழ் நாட்டில் தோன்றிய தலை சிறந்த தத்துவக் கொள்கையாகும். இது ஒரு சமயத்தையும் இகழ்வதன்று. "தென்னிந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின்

பெருவினையே சைவ சித்தாந்தம்'' என்று பேரறிஞர் ஜி. யு. போப் கூறியிருக்கிருர்.

இந்த சமயக் குரவர்கள் திருக்குறள் சொற்றெடர்களையும் தூயக் கருத்துகளையும் தங்கள் நூல்களில் கையாண்டுள்ளனர்.

சமய குரவர்களின் நூல்களை வேதங்களின் சாரமான உபநிஷதங்களே என்று கூறலாம். பின் பட்டினத்தடிகளின் பிரபந்தங்களில் தற்காலத்துசைவ சித்தாந்தம் எனும் தத்துவ சாஸ்திரக்கிரமம் முதன் முதலாகத் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டது. இவருக்குப்பின் நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகியோர் சாஸ்திர ரஸத்திற்கு இரண்டாம் இடத்தைக் கொடுத்து பக்தி ரஸத்திற்கு முதல் இடம் கொடுத்தனர். ஆகவே இந்நூலில் நாமும் தோத்திரத்திற்கு முதலிடமும் சாத்திரத்திற்கு அடுத்த இடமும் கொடுத்திருக்கிரேம்.

சாத்திரமும் தோத்திரமும் இரு கண்கள் போன்றவை. 'சாத்திரமும் தோத்திரமும் ஆனுய் நீயே' என்று பக்தர்கள் பாடியுள்ளனர்.

(தோத்திரம்—சொன்னதையே சொல்லும் புகழ்மாலை
சாத்திரம்—அறிவிற்கு உறுதியைத் தருவது)

சைவ சமயம் ஒன்றே ஆன்ம லாபத்தைத் தருவது என்பது தாயுமானவரின் உறுதியான நம்பிக்கை. இதனை அவர் தம் பாடல்களில் பல இடங்களில் கூறியுள்ளார்.

சைவ சமயமே சமயம்
சமயாதீதப் பழம்பொருள்
கைவந்திடவே மன்றுள்வெளி
காட்டும் கருத்தைவிட்டுப்
பொய் வந்துழலும் சமயநெறி
புகுத வேண்டா

என்கிருர்.

சைவம் சைவாகமத்தின் வழி வந்தது. சைவாகமம் வேதத்திற்கு மாருக எழுந்தவை அல்ல. வேதத்தின் விளக்கமாகவே எழுந்தவை.

சைவ சித்தாந்தம் பற்றிய முழு தகவல்களும் தரும் ஒரு தொகுப்பு நூல் சைவத்தைப்பற்றி நன்கறிய உதவும் என்று நினைத்து "நால்வர் காட்டிய வழி'' என்ற இந்நூலை உருவாக்கியுள்ளேன். என் நோக்கம் ஈடேறினுல் எடுத்துக்கொண்ட சிரமம் வீண் போகவில்லை என்று மகிழ்ச்சியுறுவேன்.

இப்படிக்கு,
"நஜன்''
(எஸ். நடராஜன்)

அட்டைப் பட விளக்கம்:

# சமயகுரவர் - சந்தானகுரவர் சில ஒற்றுமைகள்

**திருஞானசம்பந்தர், மெய்கண்டார்** இருவரும் பூர்வ புண்ணிய வசத்தால் மிகச் சிறு வயதிலேயே ஞானம் வர உபதேசிக்கப்பட்டவர்கள். சம்பந்தருக்கு அம்பிகை ஞானத்தையே பாலில் குழைத்து ஊட்டினுள். மெய்கண்டார் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தபோது ஆகாய வழியே சென்றுக்கொண்டிருந்த பரஞ்சோதி முனிவர் இறங்கி வந்து அவருக்கு ஞானத்தை உபதேசித்தார்.

**திருநாவுக்கரசர், அருள்நந்தி சிவம்:** இருவரும் வயதானவர்கள். சிறுவர்களான சம்பந்தருக்கும் மெய்கண்டாருக்கும் மரியாதை செலுத்தியவர்கள். நாவுக்கரசர் சம்பந்தரின் பல்லக்கையே தூக்கினுர். அழிள்நந்திசிவம் மெய்கண்டாரையே தன் குருவாக ஏற்ருர்.

**சுந்தரர், மறைஞான சம்பந்தர்:** இருவருமே யோக மார்க்கத்தை கடைப்பிடித்தவர்கள். மறைஞான சம்பந்தர் எவ்வித நூலும் எழுதவில்லை.

**மாணிக்கவாசகர், உமாபதிசிவம்:** இருவரும் சன்மார்க்கம் என்ற ஞானமார்க்கத்தைப் பின்பற்றியவர்கள். இருவரும் தில்லை நடராஜாவிடம் பேரன்பு பூண்டவர்கள்; தில்லைவாழ் அந்தணர் களில் ஒருவரான உமாபதிசிவம் இந்த அந்தணர்களால் பிரஷ்டம் செய்யப்பட்டபோது நடராஜர் இவர் பாடினுல்தான் கொடியேறும் என்றும் அசரீரியாகச் சொன்னுர். மாணிக்கவாசகர் திருக்கோவை யாரை முதியவராக வந்து எழுதி இறைவன் அங்கீகரித்தார்.

## தம்பதி பூஜை



1981 நவராத்திரியின்போது கும்பகோணம் கோரு சரிகை வியாபாரம் ஸ்ரீ பால்ராம் அவர்களும் அவர் துணைவியாரும் நஜன் தம்பதிகளை உபசரித்து தம்பதி (உமா மகேஸ்வர) பூஜை செய்தனர்.

---

## சண்டி ஹோம விதானம்

சப்த சதி விளக்கத்துடன் 2ம் பதிப்பு விரைவில் வெளிவருகிறது.

விலை ரூ. 12-00.

# நால்வர் காட்டிய வழி! 1

"நாலு பேர் காட்டிய வழியில் போ" — இது நமது முன்னோர்கள் நமக்குக் காட்டிய வழி.

இந்த "நாலு பேர்" யார்? அவர்கள் காட்டிய வழி என்ன? இவர்கள் சமயக் குரவர்கள் நால்வர், சந்தானக் குரவர்கள் நால்வர். முதல் கூறப்பட்ட நால்வர் ஸ்தோத்திரங்கள் இயற்றியவர்கள். பின் கூறப்பட்ட நால்வர் சாஸ்திரங்களை இயற்றியவர்கள்.

இவர்கள் சென்ற நெறி தெய்வ நெறி. தெய்விக நெறியில் செல்ல வேண்டியதே மனிதர் கடமை.

மனம் (சிந்தை) மொழி (சொல்) மெய் (செயல்) இம்மூன்றையும் இறைவன் மனிதனுக்கே கொடுத்திருக்கிறார். சிந்தித்து துணியும் மனம் மனிதருக்கே உண்டு. நாக்கு பிற பிராணிகளுக்கும் உண்டு என்றாலும் பேசும் திறன் மனிதனுக்கே உண்டு.

உடம்பில்லாத உயிர் எதுவுமே இல்லை. ஆனால் நிமிர்ந்தும் வளைந்தும், விழுந்தும் செயல்படும் உடல் அமைப்பு மனித உயிர்க்கு மட்டுமே உண்டு.

இச்சிறப்பு அம்சங்களை மற்ற உயிர் எதற்கும் வழங்காது மனிதனுக்கு மட்டும் வழங்கிய இறைவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டாமா?

எப்படி நன்றி செலுத்துவது? நம் பொன்னையும் பொருளையும் அவன் அபேக்ஷிக்கவில்லை. நம் அன்பை எதிர்பார்க்கிறான். அவர் வழங்கிய மனத்தால் அவரை நினைக்க வேணடும். அவர் கொடுத்த வாக்கால் அவர் புகழைப் பாட வேண்டும். உடலால் அவரை வணங்க வேண்டும்.

மனிதன் இறைவனை நெஞ்சால் நினைத்து, வாயினால் அவன் நாமம் சொல்லி, தலையினால் வணங்கி வழிபடுதலே நாம் செலுத்தும் நன்றியாகும்.

சமய குரவர்களான சம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி மாணிக்க வாசகரான நால்வரும் சந்தானகுரவர்களான மெய்கண்டார், அருள் நந்தி சிவம், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய நால்வரும் சாதி குல வேறுபாடு அற்று வாழ்ந்தவர்கள். இவர்கள் பொருட் பற்றற்று இறைபற்று ஒன்றினையே கொண்டு ஏற்றம் மிக வாழ்ந்த

வர்கள். ஸ்தோத்திரங்கள் கூறி சாத்திரங்களை பின்பற்றி தெய்வீக வாழ்க்கை நடத்த வழி காட்டியவர்கள்.

' நாலும் நமக்கு நாளும் நல்லதே செய்யும் என்பர். நாலும் (நாலடியாரும்) இரண்டும் திருக்குறளும் சொல்லுக்குறுதி என்பது பழமொழி.

இந்த நான்கின் பெருமையை முதலில் உணர்வோம்.

## நான்கின் மகத்துவம்

புமர்த் தா: சத் வார; இமுத நிகமா ப்ரபந்தய:
ப்ரபே தா வா முக் தேர்
விமல தர ஸாலோக்ய முகரா:
முகாந் யாஹோ தாதுச் சிரமித்
விம் ருச் யாத விபுதா:
விது; சிஷ் யான் ஹஸ்தாமலக
முகரான் சங்கர குரோ:||

ஆதிசங்கரருடன் நால்கு சிஷ்யர்கள் காணப்படுவதை இந்த சுலோகம் குறிப்பிடுகிறது.

உலகத்தில் "நாலு பேர் என்ன சொல்வார்களோ' நாலுபேரைக் கேட்டு செய்வதே உசிதம் என்றெல்லாம் வழக்கில் இருந்துவருகிறது. ஏன் நான்கு என்று குறிப்பிட வேண்டும்?"

தக்ஷிணாமூர்த்திக்கு அருகில் நான்கு பேர் காணப்படுகின்றனர். இவர்கள் ஸனகர் ஸனந்தனர், ஸநாதனர் ஸனத் குமாரர். சமய குரவர்கள் நால்வர். (அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர்) சந்தான குரவர்கள் நால்வர். (மெய்கண்டார், அருள்நந்தி சிவம், மறைஞானசிவம், உமாபதிசிவம்).

இப்படி நான்கு ஏன்? தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்ற புருஷார்த்தங்கள் நான்கு. ருக், யஜுஸ் சாம அதர்வணம் என வேதங்கள் நான்கு. முக்தியின் பிரிவுகள் ஸாலோக்யம், ஸாமீப்யம் ஸாரூப்யம், ஸாயுஜ்யம் ஆக நான்கு. பிரும்மாவின் முகம் நான்கு ஆதிசங்கரரின் சிஷ்யர்கள் நால் வரும் இந்த நான்கின் உருவம்தரித்து வந்திருக்கிறார்களோ என்று மேற்கண்ட சுலோகம் குறிப்பிடுகிறது.

வேதத்தில் நான்கு என்ற எண்ணுக்கு விசேஷ மதிப்பு உண்டு.

பிரும்மத்திற்கே நான்காவது (சதுர்த்தம், துரீயம்) என்ற வியவகாரமுண்டு. வேதாந்த விசாரத்தில் இறங்கு முன் விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷுத்வம் என்கிற நான்கு சாதனங்கள் வேண்டும் என்கிறார்கள்.

ஞான மார்க்கத்தில் சிரவணம், மனனம், நிதித்யாஸனம் சமாதி என்ற நான்குபடிகள் உண்டு. ஞானம் வந்த பிறகும் பிரம்மவித்

பிரம்மவித்வான், பிரம்மவித்வரியான், பிரும்மவித்வரிஷ்டன் என்கிறபடி அனுபவதாரதம்மியத்தை வைத்து ஞானிகளும் நான்குவிதமாகிறார்கள்.

சகலசம்சார பந்தத்திற்குக் காரணமான அந்தக்கரணம் என்பது 'நான்' என்று உணரும் போது அகங்காரம், தீர்மானம் செய்யும்போது புத்தி, ஆலோசனை செய்யும் போது மனஸ், ஸம்ஸ்காரங்களுக்கு காரணமாக இருக்கும்போது சித்தம் என்று நான்கு விதமாகச் சொல்லப்படுகிறது.

பகவத் கீதையிலும் பலவித நான்குகள் வருகின்றன.

மந்மநாபவ மத்பக் தோ மத்யா ஜிமாம் நமஸ்குரு என்ற வாக்கியம் 9வது அத்யாயத்திலும் 18வது அத்யாயத்திலும் வருகிறது.

மந்மநா — பக்திப் பெருக்கு
மத்பக்த—கர்மத்தில் பிடிப்பு
மத்யாஜி - உபாசனையே முக்கியம்
மாம் நமஸ்குரு—சேவை செய்வதே புருஷார்த்தம்

நான்கு நான்காக விளங்குபவைகள்

சிவசக்திகள்—அருட்சக்தி, கோபசக்தி, போர்சக்தி புருஷ சக்தி.
சிவகுமாரர்கள்-விநாயகர், வீரபத்திரர் பைரவர். சுப்பிரமண்யர்
சிவபெருமான் ஸிஷ்யர்கள்—சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனாதனர்
சிவபெருமானை அடையும் நெறி—சரியை, கிரியை, யோகம், ஞானம்
வழிபடும் மார்க்கங்கள்—சத்புத்ரமார்க்கம் தாசமார்க்கம். சகமார்க்கம், சன்மார்க்கம்
பெறும் பேறுகள்—சாலோகம், சாமீபம் சாரூபம், சாயுஜ்யம்
வேதங்கள்—ருக், யஜுர், சாமம் அதர்வணம்
உறுதிப் பொருள்கள்—அறம், பொருள், இன்பம், வீடு
பெண்களின் குணம்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு
சொற்கள்—பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச் சொல் உரிச்சொல்
எழுத்துரை—உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய் எழுத்து, ஆய்தயெழுத்து
படைகள்—தேர், யானை, புரவி காலாள்
திசைகள்—கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு
உணவு—தின்னல், கடித்தல் பருகுதல், நக்கல்
ஞானம் பெறவழி—கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிலை நிற்றல்

பாக்கள் — வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.

சந்தான ஆசிரியர்கள் -- மெய்கண்டதேவர், அருணந்தி சிவம், மறைஞான சிவம், உமாபதி சிவம்.

சமயக் குரவர்கள் — சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர்.

நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி.
(நாலடியார், குறள்)

நாலுபேர் சென்ற வழியே செல்
நாலுபேர் சொன்னதைத் தட்டாதே.
— நாட்டு பழமொழிகள்.

## சாதகனின் சாதகங்கள்

சன்மார்க்கம் சகமார்க்கம்
சற்புத்திரமார்க்கம்
தாசமார்க்க மென்னும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நாலவைதாம் ஞானயோகம்
நற்கிரியா சரியை என
நவிற்றுவதும் செய்வர்
சன்மார்க்க முத்திகள் சாலோக்ய
சாமீப்ய சாருய்ய சாயுஜ்யம்
என்று சதுர்விதமாம்
முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கும்
முத்திபதம் என்பர்.

— சிவஞான சித்தியார்.

இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவர். அவருக்கு எதுவும் தேவையில்லை. அவருக்கு சாதனை தேவையில்லை. ஆனால் உயிர்கள் சித்தாகிய கடவுளோடு கூடிய காலத்தில் சித்தாகவும், அசித்தாகிய பாசத்தோடு கூடிய காலத்தில் அசித்தாகவும் இருக்கும் தன்மையுடையதாக இருப்பதால் சாதகனாக இருக்கும் தகுதி உயிர்களுக்கே இருக்கின்றது.

இதற்கு சாதனங்கள் எவை? சரியை, கிரியை, யோகம், ஞானம் இவைகளே சாதனங்கள்.

சரியை - உடலால் தொண்டு செய்தல்.

கிரியை – உடலும் உயிரும் சேர்ந்து தொண்டு செய்தல்.

யோகம் – சரியை கிரியைகளால் உயிர்களுக்கு கிடைத்த அனுபவத்தில் ஆழ்ந்து இருத்தல்.

ஞானம் — இறைவன் வேறு, தான் வேறு என்றில்லாமல் இரண்டறக் கலந்துநிற்கும் (சுத்தாத்துவித) நிலை.
இந்த நான்கும் சாதனை நிலையில் வேறே தவிர, பொருள் நிலையில் ஒன்றே.

இதனை தாயுமானவர்,

விரும்பும் சரியை முதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு, மலர், காய், கனி போல்
அன்றோ பராபரமே

என்று குறிப்பிடுகிறார்.

அரும்பு மலராகி காயாகி கனியாக வேண்டும் என்பதே இயற்கை நியதி இந்த நான்கு நிலையை நமக்குக் காட்டியவர்கள் நமது சமய குரவர்கள்.

சரியை (உடல் தொண்டு) வழிநின்று காட்டியவ. திருநாவுக்கரசர். அவர் கையிலுள்ளது உழவாரப்படை என்ற கருவியே இதற்குச் சான்று. கோவில் பிராகாரங்களில் மண்டிக்கிடந்த புல் பூண்டுகளை இவர் இதன் உதவிகொண்டு அகற்றுவதை முக்கியமானப் பணியாகக் கொண்டிருந்தார்.

கிரியை (உடல் உள்ளம்) வழிநின்று காட்டியவர் ஞான சம்பந்தர். இவர் கையிலுள்ள தாளமே இதற்குச் சான்று. தாளம் தான் உடல். அவைகளைத் தட்டும்போது ஏற்படும் ஒலியே உயிர். தாளம் இல்லையேல் ஓசை உண்டாகாது. ஓசை ஏற்படாது என்றால் தாளம் இருந்துப் பயனில்லை.

யோக நெறி நின்று காட்டியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். யோகிகளுக்கு தண்டம் உண்டு. சுந்தரம் கையிலும் தண்டம் உண்டு.

ஞான நெறி நின்று வாழ்ந்தவர் மாணிக்க வாசகர். அவர் காட்டும் சின்முத்திரையும், அக்ஷமாலையும் ஞானத்தின் சின்னம் தானே.

## மார்க்கங்கள்

சரியையை தாஸமார்க்கம் என்றும்
கிரியை சத்புத்திர மார்க்கம் என்றும்
யோகத்தை சகமார்க்கம் என்றும்
ஞானத்தை சன்மார்க்கம் என்றும்

சொல்வார்கள்.

தாசமார்க்கம் (ஆண்டான் அடிமை உறவு) இறைவன் ஆண்டான். பக்தன் அடிமை இதற்கு அப்பர் உதாரணமாகத் திகழ்கிறார்.

சத்புத்திர மார்க்கம்: இறைவனை தந்தையாகவும் தன்னை அவர் மகனாகவும் கருதி வழிபடுதல். இதற்கு திருஞான சம்பந்தர் உதாரணம்.

சுக மார்க்கம்: இறைவனைத் தோழனாகக் கொண்டு வழிபடல். இதற்கு சுந்தரர் வாழ்வு எடுத்துக் காட்டு.

சன் மார்க்கம். குரு சிஷ்யத் தொடர்பு. தன்னை நாயகியாக பாவித்து இறைவனை நாயகனுக்கி பிரியத்தை வெளியிடுவது. இதற்கு மாணிக்கவாசகர் எடுத்துக் காட்டு.

சரியை கிரியை யோகம் ஞானம் இவைபற்றி இன்னும் சிறிது விரிவாக தெரிந்துக் கொள்வது நல்லது.

பாதம் என்றால் காலுக்கு மட்டும் பெயரில்லை. உடலில் கால் பாகம் ஆன முழங்கால் வரை பாதம்.

இடுப்புப் பகுதி அரை (அரைப் பாகம்.) இதில் கட்டும் நூலுக்கு அரைஞான் என்று பெயர்.

பிரும்ம ஸூத்திரமும் பாதம் பாதமாக பிரிக்கப்பட்டுள்ளது. பாதம் என்று பிரித்தால் அது நான்கு பாதமாகத்தான் இருக்கும் நட்சத்திரங்கள் ஒவ்வொன்றும் நான்கு பாதங்கள் கொண்டது. நான்கு பாதம் இருந்தால்தான் நன்றாக நிற்க முடியும்.

ஒவ்வொரு சிவாகமத்திலும் நான்கு பாதம். இதுவே சரியை கிரியை யோகம் ஞானம். இவைகளுக்கு தத்துவார்த்தமான அர்த்தம் உண்டு.

சரியை அவரவர்கள் அனுஷ்டானம் வைத்துக் கொண்டு தீக்ஷை பெற்று நல்ல ஒழுக்கத்துடன் அனுஷ்டானங்களைச் செய்வது.

கிரியை—இறைவனை பாஹ்யமாகவும் ஆத்மாவாகவும் பூஜை செய்யும் முறை.

யோகம்—தியானம், மனதை அடக்குதல்.
ஞானம்—ஆத்ம விசாரம், அறிவு விசாரணை.
ஞானம் கிரியாச சர்யாச யோகச்சேத் மகேஸ்வரி.
சதுஷ்பாத—ஸமாக்யாத: மமதர்ம ஸனாதன.
அபிபாஷா—பதிஞானம் ஞானம் இத்யத் தீயதே.
ஷடத்வ சுத்திம் விதினா குர்வதினுக்ரியோச்சதே.
வர்ணாஸ்ரம பிரபுக் தஸ்ய சர்யா சர்யேதி கத்யதே.
மநுகதேன—நிரோத்தம் மார்க்கேண மய்யவத்த சேதஸ:
விருத்யந்தரம்—விரோதய: யோக இத்யபிதீயதே!!

(இதைக் கூறியவர், திருக்கழுக்குன்றம்
சந்திர சேகர குருக்கள்)

இப்படியும் சொல்வதுண்டு :—

இறைவன் திருமேனியை
பாவித்து அன்பு செலுத்துவது சரியை
அர்ச்சாவதார திருமேனியை
ஆகம முறைப்படி வழிபடுவது கிரியை
சூக்ஷ்மமாக இறைவனை
உள்ளத்தில் பாவிப்பது யோகம்
உருவம் கடந்த நிலையில்
இறைவனை அனுபவிப்பது ஞானம்

ஞானத்தில் சரியை அப்பர்
,, கிரியை சம்பந்தர்
,, யோகம் சுந்தரர்
,, ஞானம் மாணிக்கவாசகர்.

சரியை கிரியை யோகம் வாயிலாக ஞானம் பெறுவதையே இது குறிக்கிறது. சரியை கிரியை பக்தருக்கும், யோகம் சித்தருக்கும், ஞானம் இருவருக்கும் பொருந்தும்.

சித்தர் மரபுக்கு ஆக்கம் தேடியவர் இந்நால்வரும். சித்தர் மரபின் உயிர்நாடியான மரணமில்லாப் பெருவாழ்வு நால்வர் பாக்களில் ஆனந்த தாண்டவம் புரிகிறது.

மரணம் எது? மரணமின்மை எது? வாழ்க்கையைத் தீய வழியில் செலுத்துவோரின் ஊன் உயிர் பிரிவு மரணம்.

பரம்பொருளே வாழ்க்கை, வாழ்க்கை வழியென்றுணர்ந்து வாழ்க்கையை நல்வழியில் நடத்துபவரின் ஊன் உயிரின் பிரிவு மரணமின்மை.

எடுக்கும் ஒவ்வொரு பிறவியும் பரம்பொருள் உண்மை விளக்கத்திற்கு ஒவ்வொரு அளவில் துணைபுரியும்.

தந்தையார் போயினர்
தாயாரும் போயினர்
தாமும் போவார்
கொந்த வேல் கொண்டொரு
கூற்றத்தார் பார்க்கிறார்
கொண்டு போவார்
எந்த நாள் வாழ்வதற்கே
மனம் வைத்தியால்
ஏழை நெஞ்சே
அந்தணரூர் தொழுதுய்யலாமையல்
கொண்டஞ்சல் நெஞ்சே

—திருஞான சம்பந்தர்.

இவர் முதலில் மரணத்தை நினைவூட்டுகிறார் இந்த யம பயத்திற்கு ஆளாகக் கூடாது என்று வழியும் காட்டுகிறார். பரம் வழிபடுவதே அவ்வழி.

''யானேதும் பிறப்பஞ்சேன் இருப்பதனுக்கென் கெடவேன்'' என்கிறார் மாணிக்கவாசகர் மரணத்தை வெறுத்தல் பிறவாமையை விரும்புவது. பிறவாமையே இறவாமை இறவாமையே பிறவாமை.

இக்காய நீக்கி இனியொரு
காயத்தில்
புக்கு பிறவாமல் போகும்
வழி நாடுமின்

— திருமந்திரம்

நால்வர் உள்பட நாயன்மார்கள் இறைவனின் அனுபூதியை முழு அளவில் பெற்றவர்கள். இவர்கள் வாழ்க்கையை ஆராய்ந்து அதில் காணப்படும் சிறப்பியல்புகளைப் பின்பற்றினால் நம் வாழ்வும் வளப்படும் ஆனால் அவர்கள் பெற்ற பேற்றினை நாம் எல்லோரும் இப்பிறப்பிலேயே பெற்றுய்ய முடியும் என்று சொல்ல முடியாது. முற்பிறப்புகளில் எவ்வளவோ பெரும் நற்செய்கைகள் புரிந்து இறையன்பினை வளர்த்து வந்ததின் பயனாக அவர்களுக்கு இவ்வாழ்வில் இறை அருள் கிட்டியது.

முன் பிறப்பில் எஞ்சியிருந்த பிராரப்தம என்ற ஊழ்வினையைக் கரைத்துவிட்டு இறைவனடி சேர்ந்தார்கள். கருவிலே திருவோடு பிறந்த இப்புண்ணியர்களோடு நம்மை ஒப்பிட்டுக் கூற முடியாது.

முற்பிறவிகளில் இவர்கள் பெரும் புண்ணியம் செய்திருந்தனர் என்பதற்கான சான்று அவர்கள் வாழ்க்கை வரலாற்றிலேயே உள்ளது.

சுந்தரரை பகவானே வந்து ஆட்கொள்ள அவர் எத்தகைய புண்ணியத்தை முன் ஜன்மத்தில் செய்திருக்க வேண்டும்? சாதாரண மக்களைப் போல பிறந்து வளர்ந்து திருமணம் செய்துக் கொள்ள முயன்றபோது இறைவன் சுந்தரரைத் தடுத்தாட் கொண்டார்.

சம்பந்தருக்கு அம்பிகையே வந்து பாலூட்டுகிறாள். அத்துடன் ஞானத்தையும் குழைத்து ஊட்டுகிறாள். இது எல்லோருக்கும் கிடைக்கக்கூடிய பேறு? இதைச் சேக்கிழார் ''ஈசர் கழல் முறை புரிந்த முன்னுணர்வு மூளவழத் தொடங்கினார்'' என்கிறார். முன்னை வினைப் பயனாகவே சம்பந்தருக்கு இப்பேறு கிடைத்தது. அழுங் குழந்தைகள் எல்லாவற்றுக்குமா இறைவி பால் ஊட்டுகிறாள்.

''பெரும் கருத்துடன் ஒருவன் வழிபாடு செய்து வருகையில் சில வழிமுறைகளைப் பின்பற்றத் தவறினால் அவனுக்கு நற்கதியுண்டா?'' என்று அர்ஜுனன் கேட்கிறான்.

"நற்பணி செய்பவன் ஒரு
நாளும் துர்க்கதியை அடைவதில்லை"

என்பது கிருஷ்ண பகவான் பதில்.

அவர் மேலும் விளக்குகையில், 'இத்தகைய நற்பணி புரிந்து வரும் அந்த அன்பன் ஏதோ சில குறைபாடுகளினால் மறுபடியும் பிறக்க நேர்ந்தால், நற்குடியில் பிறந்து மேலும் மேலும் நற்பணிகள் புரிந்து இறுதியில் நற்கதியடைகிறான்.

ஆகவே நால்வர் காட்டிய வழியில் முதல்வழி பூர்வ புண்ணியம் செய்திருக்க வேண்டும். இந்த ஜன்மத்திலாவது அந்த புண்ணியத்தை செய்யவேண்டும்.

இதற்கான ஒரே வழி இறைவனிடம் பக்தி செலுத்துவதே. நால்வர் கையாண்ட பக்தி முறைகளைப் பற்றித் தெரிந்துகொள்ளு முன் பக்தியைப் பற்றித் தெரிந்துக் கொள்ள வேண்டும்.

இந்த நான்கு பேர்களும் இறைவனை நினைத்து எப்படி வாழ்வது என்று வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள். இவர்கள் நால்வரும் இறைவன் அவதாரமே. நமக்கு வாழ வழிகாட்டுவதாக இறைவனே இநத அடியார்களாக அவதரித்தார் என்பதை சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

ஃ "உலகில் வருமிருள் நீக்கி
ஒளி விளங்கு கதிர்போல்
பின் மலரு மருள் நீக்கியார்
அவதாரம் செய்தார்"

என்று நாவுக்கரசர் பற்றியும்

ஃ "தாவில் சரா சரங்கள் எல்லாம்
சிவம் பெருக்கும் பிள்ளை
யார் திருவவதாரம் செய்தார்"

என்று சம்பந்தரைப் பற்றியும்

ஃ "தீதகன்று உலகமுய்ய
திருவவதாரம் செய்தார்"

என்று சுந்தரரைப் பற்றியும்

ஃ பொய்மையாம் உலகில் மாயப்
பொங்கிருள் அகல ஞான
தினகரர் உதயம் செய்தார்"

என்று மாணிக்கவாசகர் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்.

## பகவானை எப்படி அனுபவிப்பது?

எப்படியும் அனுபவிக்கலாம். அது அவரவர்களின் மனப் பாங்கு, ஆவல் இவைகளைப்பொருத்தது.

கண்ணனைக்குழந்தையாகவும் காதலனாகவும் நம் முன்னோர்கள் பல படியாக அனுபவித்திருக்கிறார்கள். தங்களைப் பெண்களாக நினைத்துக் கொண்டு ஆழ்வாராதிகள் இறைவனானபுருஷோத்தமனைக் காதலித்திருக்கிறார்கள்.

மேனாட்டு மனத்தத்துவ சாஸ்திரம் மக்களை அச்சுறுத்தி வைக்க கடவுளை மனிதன் கற்பனை செய்தான் என்று கூறுகிறது. நம் நாட்டு தெய்வ வழிபாட்டு முறையை அறியாததால்தான் அவர்கள் அப்படி கூறுகிறார்கள் பாரத நாட்டில் தெய்வங்கள் அச்சத்துக்காக ஏற்படுத்தபட்டவையல்ல. அனுபவிக்கவே நம் முன்னோர்கள் படைத்தார்கள்.

கண்ணன் 'முருகன்' விநாயகர் ஆகிய எந்த தெய்வங்களைக்கண்டு எந்த ஹிந்து பக்தனாவது மிரண்டதுண்டா? (மிரண்டவர், பயந்தவர் எல்லாம் அரக்கர்களே)

எவ்வளவோ பக்தர்கள் பகவானுடன் கொஞ்சியுமிருக்கின்றனர் கோபித்துமிருக்கின்றனர். அதே சமயம் அவனுடைய அகண்டா காரத்தையும், அநாதி தத்துவத்தையும் சொரூபமற்ற தன்மையையும் உணர்ந்தே வந்திருக்கிறார்கள்.

கருங்கண் தோகை
    மயிற்பீலி அணிந்து
கட்டி நன்கு உடுத்த பீதக ஆடை
    அருங்கல உருவின்
    ஆயர் பெருமான்
அவன் ஒருவன் குழலூதின போது
    மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும்
மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும்
    இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே.

குழலூதும் கண்ணனை நம்மவர் போற்றியும் அனுபவித்தும் வணங்கினாற்போல வேறு எந்த சமுதாயமும் தங்கள் தெய்வங்களை வணங்கியதில்லை. நம் வழியே தனி வழியாக இருந்திருக்கிறது.

---

''மரணத்திற்குப் பின்'' (மிருத்யுஞ்ஜயம்) என்ற பிரதிபா புத்தகம் தயாராகி வருகிறது

# பக்தி மார்க்கம் 2

அன்பாழி யானை அனு கென்னும் நா அவன்றன்
பண் பாழித் தோள் பரவி எத்தென்றும் முன்பூழி
காணானைக் காண் என்றும் கண் செவி கேள் என்றும்
பூணாரம் பூண்டான் புகழ். — பொய்கையாழ்வார்

மெய், வாய், கண், மூக்கு எல்லாம் அவன் மீதே நாட்டம் செலுத்துகின்றன. இதுவே பக்தி இன்பமாக மாறும் நிலை.

பக்தி என்றால் என்ன என்ற கேள்விக்கு மகரிஷி சாண்டில்யர் கூறும் பதில்:

பக்தி செய்பவர்கள் அடையும் பேரின்பமும், அதன் பயனும் என்ன? இதற்கும் அவரே பதில் சொல்கிறார்.

"காப்பு என்பதற்கு அவசியமே இராது. பயம் ஒன்று இருந்தால் தானே பாதுகாப்பு என்பதற்கு அவசியம். இறைவனைத் தியானித்த மாத்திரத்தில் நம் கர்ம பந்தம் உன்னை சிந்திப்பவர்களுக்கு முதுமை வராது.

காப் புன்னை உன்னக்கழியும் அருவினைகள்
ஆப்பு உன்னை உன்ன அவிழ்ந் தொழியும்
மூப்பு உன்னை சிந்திப்பார்க் கு இல்லை திருமாலே
உன் அடியை வந்திப்பார் காண்பர் வழி.

## பக்தி என்றால் என்ன?

பக்தியின் லட்சியம் அனுபூதிநிலை. இறைவனின் உருவத்திலும் கல்யாண குணங்களிலும் மனம் ஈடுபட்டு அந்த பேரின்பத்தில் திளைக்க ஆரம்பித்து விட்டால் உள்ளத்திற்கு வேறு எந்த பொருளும் வேண்டியிராது. எல்லா ஆசைகளும் மறந்து பேரின்ப நாட்டமே மிஞ்சும், இதுவே அனுபூதி நிலை.

"பக்தி என்பது அன்பே உருவானது" என்பது பக்தி ஸூத்ர வாக்கியம். அன்பே சிவம் என்றார் திருமூலர். கலியில் கடவுளை அடைவதற்கு பக்தியே சிறந்த வழி.

பக்தி செய்வதற்கு அபார ஞானமும் கலைகளில் திறமையும் சாஸ்திரங்களில் சாமர்த்தியமும் தேவையில்லை. இவ்விதத்தில்தான் பக்தி செய்யலாம் என்ற கட்டுப்பாடும் இல்லை பக்தியை மனத்தால்

செலுத்தலாம், வாயால் பாடலாம், செயலால் காண்பிக்கலாம், தனிமையில கடவுளை நினைத்துப் பரவசமடையலாம் கோஷ்டியில் கூடி நின்று குதூகலமடையலாம். குல, தர்மத்தையும்ஜாதி தர்மத்தையும் தாண்டி அனைவருக்கும் ஒரே வழியைக் காட்டி பக்தியானது கடவுளை வழிபடுவோரை ஒன்றாக இணைகிறது.

''ஸா பரா அனு ரக் திரீச்வரே''
கடவுளிடம் காட்டும் அன்பே பக்தி.

நாரத பக்தி ஸூத் திரத்தில் ''ஸாது அஸ்மின் பரம் பிரேமருவா
அம்ருத ஸ்வருபாச''
என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இறைவனிடம் காட்டப்படும் அதிசயமான அன்புதான் பக்தி. அது அமிர்த ஸ்வருபம் என்று கூறப்படுகிறது.

இலக்கணத்தில் பக்தி' என்ற சொல்லுக்கு 'சேவை' என்று குறிப்பிட்டுள்ளது. பக்தி என்ற சொல் 'பஜ' என்ற வினைச் சொல்லிலிருந்து உண்டாகிறது. ''பஜ ஸேவாயாம். அன்பு சேவையின் பயன் பக்தி சாதனங்களின் கடைசிப்படி.

## பக்தி எதற்காக?

இக்கேள்விக்குப்பதில் அது ஓர் இயற்கைவிதி. இயற்கையைஅனுசரித்துதான் வாழ வேண்டும். வாழ முடியும்.

தாயன்பு எதற்கு? சிநேகிதர்களுடன் நட்பு எதற்கு? கணவன் அல்லது மனைவியுடன் பிரேமை எதற்கு? பெரியோர்களிடம் மதிப்பு எதற்கு? குழந்தைகளிடம் வாத்ஸல்யம் எதற்கு? என்றெல்லாம் யாரும் கேட்பதில்லை. காரண வஸ்துவிடம் செலுத்தும் அன்புக்குத்தான் பக்தி. நம்முடைய மற்ற அன்புகளுக்குக் காரணமும் அதுதான்

இறைவன் இல்லை என்று சொல்பவனும் தன் குழந்தையிடம் அன்பு வைத்திருக்கிறான். இதற்குக் காரணம் அந்த இரு உள்ளங்களிலும் உறையும் ஈஸ்வ ராம்சம் காந்த சக்திபோல் ஒன்றை ஒன்று ஈர்ப்பதுதான். இந்த ஈர்க்கும் ஆகர்ஷண சக்தியால்தான் உலகமே நடைபெறுகிறது. இதுவே அன்பு, இதுவே பக்தி.

பக்தி செலுத்தினால் என்ன கிடைக்கும்? தூய்மை, புனிதம் மனச்சாந்தி இவை நிச்சயம் கிடைக்கிறது.

இறைவன் தரிசனம் கிடைக்க பக்திவேண்டும். பக்தி என்பது அன்பேயாகும். உலகில் எல்லோரும் அன்புள்ளவர்கள் தாம். அன்

பிற்கு விஷயமான பொருளைப் பின்பற்றி அதன் பெயர் மாறுபடு கின்றது. குழந்தைகளிடம் ஏற்படும் அன்பை வாத்ஸல்யம் என்றும். மனைவியிடம் உள்ள அன்பை அனுராகம் என்றும் சொல்கிறோம், இதுபோலவே ஈச்வரனிடம் வைக்கும் அன்பிற்கு பக்தி என்றுபெயர். பகவானிடம் வைக்கும் அன்பு நமக்கு ஸுகத்தைக் கொடுக்கிறது. இத்தகைய அன்பைத்தான் ப்ரஹலாத ஸ்வாமி பரமனிடம் வேண்டு கிறார் அவிவேகிகளுக்கு உலக விஷயங்களில் எந்த மாறாத அன்பு இருக்கிறதோ, அத்தகைய அன்பு எனக்குத் தங்களிடம் இருக்க வேண்டும். அவ்வன்பு எனது மனதைவிட்டு என்றும் அகலக்கூடாது. இதுவே அவர் கோரிய வரம். மமதை (தனது) என்ற மனப்பான் மையை விடுவது எளிது அல்ல. ஆனால் உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் வேறுபாடு இன்றி எனது என்ற அபிமானத்தை வைத்தால் அது அவ்வளவு துன்பத்தை விளைவிக்காது. இது எப்படிக் கைகூடும் என்று கேட்கலாம். எங்கும் நிறைந்துள்ள ஈச்வரனிடம் இந்த மனப்பான்மையை வைத்தால் ஸாத்யமாகும். இது சிரவணம் (கேட்டல்), கீர்த்தனம் (புகழ் பாடுதல்), ஸ்மரணம் (நினைத்தல்), பாதஸேவனம் (அடிபணிதல்), அர்ச்சனம் (வழிபடுதல்), வந்தனம் (வணங்குதல்), தாஸ்யம் (அடிமை செய்தல்), ஸக்யம் (தோழமை பூணுதல்), ஆத்ம நிவேதனம் (தன்னையே அளித்தல்) எனும் ஒன்பது ஸாதனங்களால் கைகூடும்.

வாத்ஸல்யத்தால் ப்ரஹ்லாதனுக்கும், அபயமளித்து விபீஷணனுக்கும், துன்பத்தை அகற்றி கஜேந்திரனுக்கும், உதாரகுணத்தால் த்ரௌபதிக்கும், பாபத்தைப் போக்கி அஹல்யைக்கும், உயர்ந்த பதவியைக் கொடுத்து துருவனுக்கும், பகவான் அனுக்ரஹம் செய்தார், பக்தி ஸ்திரப்படவேண்டுமானால் சமம், தமம் முதலான ஸாதனங்கள் வேண்டும்.

## பக்தியின் லட்சணம்

பக்தியின் லட்சணத்தை ஆதிசங்கரர், சிவானந்தலஹரி சுலோகம் ஒன்றில் வெகு அழகாக வர்ணித்திருக்கிறார்.

அழிஞ்சில் விதை எப்படி தாய்மரத்துடன் ஒட்டிக்கொள்கிறதோ; ஊசி எப்படி காந்தத்தினால் இழுக்கப்படுகிறதோ; பதிவிரதை எப்படித்தன் பதியின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ; கொடி எப்படி மரத்தை தழுவுகிறதோ; நதி எப்படி சமுத்திரத்தில் கலக்கிறதோ அப்படியே இறைவனின் பாதார விந்தங்களில் சதா சர்வ காலமும் மனதை லயித்திருப்பதுதான் பக்தி என்கிறார் ஆதி சங்கரர்.

அழிஞ்சில் : ஏறு அழிஞ்சில் என்று ஒரு மரம் உண்டு. அதன் காய் முற்றியவுடன் பூமியில் விழுந்து உடையும். உடனே உள்ளே இருக்கிற விதைகள் ஏதோ ஓர் ஆகர்ஷண சக்தியால் நகர்ந்து வந்து மறுபடியும் தாய் மரத்துடனேயே ஒட்டிக் கொண்டு விடும். பகவானிடமிருந்து பிரிந்து வந்திருக்கும் நாம் இப்படியே அவன் பக்கமாக நகர்ந்து நகர்ந்து அவனிடம் ஒட்டிக் கொள்ளவேண்டும்.

ஊசியும் காந்தமும் : ஊசி காந்தத்தினுல் இழுக்கப்பட்டு அதனுடன் ஒட்டிக் கொள்கிறது. காந்தத்தில் சேர்ந்த ஊசிக்கும் காந்த (இழுப்பு) சக்தி வந்து விடுகிறது. இதுபோல பக்தனுக்கும் பகவானின் குணங்கள் உண்டாகும்.

பதிவ்ரதை நினைவு : பதிவிரதையின் நினைவு, பேச்சு, காரியம் அனைத்தும் பதியை சுற்றியே இருப்பது போல நம்மனோவாக்கு காரியங்கள் பகவானையே பற்றியிருக்கவேண்டும். பதியை மூல சுலோகத்தில் "விபு" என்கிருர். சர்வ வியாபகன் என்பது இதன் பொருள். இதனுல் பகவானை ஏதோ ஓர் இடத்தில் மட்டும் இல்லாமல் எங்குமாக எல்லாமாக எல்லோருமாக இருப்பதை பாவிக்கவேண்டும் என்று உணர்த்தப்படுகிறது.

கொடி-கொழுகொம்பு : கொழுகொம்பைச் சுற்றியிருக்கும் கொடியை நாம் பிரித்துவிட்டால்கூட அது படாதபாடுபட்டு சிறிது நேரத்தில் மறுபடியும் கொம்பை வளைத்துச் சுற்றிக்கொண்டுவிடும். நம் மனதை ஈஸ்வர ஸ்மரணையிலிருந்து அலைக்கழிக்கிற இடைஞ்சல் எத்தனை வந்தபோதிலும் நம் லட்சியத்தை விடாப்பிடியாக பிடித்திருக்கவேண்டும்.

நதி—கடல் : இது பரம அத்வைதமே, கடல்தான் மேகமாகி மழையாகி பின் நதியாகியிருக்கிறது. இரண்டும் வேறு வேறு அல்ல. ஒரு நதி எந்த மலையுச்சியில் பிறந்தாலும் அலுக்காமல் சளைக்காமல் ஓடிவந்து கடைசியில் கடலில் கலந்து தன் தனிப் பெயரையும், உருவத்தையும் இழந்து கடலாகவே ஆகிவிடுகிறது. கடல் அதை எதிர் கொண்டு அழைத்துக்கொள்கிறது. இப்படியே நாமும் நிஜமான பக்தி செலுத்தினுல் கருணாசமுத்திரமான பகவான் நம்மை முன்னே வந்து ஆட்கொண்டு தானுக்கி விடுவான்.

## பக்தி எதைத்தான் செய்யாது?

இந்த பக்தியால் சாதிக்க முடியாதது எதுவுமேஇல்லை. ஆங்கிலக் கவிஞர் டென்னிஸன்More things are wrought by prayer than this wo rld dreams of என்கிருர். இவ்வுலகம் எதிர்பார்ப்பதை விட எவ்வளவோ காரியங்கள் பிரார்த்தனை (பக்தி) மூலம் சாத்யம் என்கிருர்.

பக்தி மார்க்கம் பக்தர்களின் தாரதம்யத்திற்கு ஏற்றபடி பல வகைப்படும் (இது பின்னர் விரிவாக கூறப்பட்டுள்ளது) இம்மார்க்கத்தை கடைபிடிப்பவர்கள் இரு சாதனங்களைப் பின்பற்றுகிறார்கள். இவை அந்தரங்க தியானம், பகிரங்கத் தியானம்.

மூர்த்தி பூஜை, உத்ஸவம்
வந்தனம் பகவத்சேவை
முதலியன பகிரங்க சாதனம்

ஸ்மரணம், ஜபம், தியானம், சங்கீர்த்தனம் பஜனம் ஆத்மநிவேதனம் முதலியன அந்தரங்க சாதனம்,

## பக்தியின் உருவம்

பக்தியின் உண்மை உருவம் விளக்கமாக நம் புண்ணிய நூல்களில் கூறப்பட்டுள்ளது. உலகப் பொருளிடம் அறியாமையால் நாம் வைக்கும் அன்பை இறைவனிடத்தில் வைத்தால் அந்த அன்பு தான் பக்தி என்று பாகவதத்தில் குந்திதேவி கூறுகிறாள்.

“ராமபக்தி” என்ற கீர்த்தனையில் தியாகராஜ சுவாமிகள் கூறியிருப்பதாவது “பக்தி என்பது அறிவல்ல. அது ஒரு தனி அனுபவம். அதை உணர முடியுமே. ஒழிய சொல்ல முடியாது. பூர்வ புண்ணிய பலனால் தான் அது கிடைக்கும்.

பக்தியின் லட்சணத்தைத் தாயுமானவர் பின்வருமாறு கூறுகிறார்.

உடல் குறைய என்பெல்லாம்
நெக்குருக, விழிநீர்கள்
ஊற்றென வெதும்பியூற்ற
ஊசி காந்தத்தினைக் கண்டணுகல் போலவே
ஒருறவும் உன்னியுனனப்
படபடென நெஞ்சம் புதைத்து உள் நடுங்குற
பாடி ஆடிக் குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பி ஆர்த்தார்த் தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித்துக் கூப்பி
வானே! அவ்வானில் இன்ப
மழையே! மழைத்தாரை
வெள்ளமே! நீடுழிவாழி
என வாழ்த்தி ஏத்தும்

கடன்மடை திறந்தனைய அன்பர்
அன்புக் கெளியை
கன்னெஞ்சனுக் கெளியையோ!
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே!

யாரும் செய்யலாம்

ப்ஹக்திர் அஷ்டவிதா ஹ்யேஷா
யஸ்மின் ம்லேச்சஹோபி வர்த்ததே
ஸவிப்ரேன் முநி: ஸ்ரீமாந்
ஸயதி ஸ ச பண்டித: (கருடபுராணம்)

எட்டுவிதமான பக்தி* எந்த மிலேச்சனிடம் காணப்பட்டாலும் அவனே சிறந்த முனி சிரேஷ்டரும் ஞானியுமாகிறார்.

சாண்டில்ய ரிஷியும் இழிகுலோத்தோர்க்கும் பக்தி செய்ய அதிகார முண்டு என்கிறார்.

சிவானந்தலகரியில் ஆதிசங்கரர் கண்ணப்பரின் பக்தியைக் கண்டு வியக்கிறார்.

'இவர் அணிந்த செருப்பு பரமேஸ்வரனுக்கு பவித்ரமான கூர்ச்சம் போலாயிற்று. அவர் வாயிலிருந்து கொப்புளித்த எச்சல் ஜலமே கங்கை நீருக்கு சமமாயிற்று. இவர்கடித்து ருசி பார்த்த மாமிசமே இறைவனுக்கு உகந்த ஆகாரமாயிற்று. கண்ணப்பன் பக்தி மகிமை என்னே? என்று வியக்கிறார்.

மார்க்கா வர்தித பாதுகா பசு தேரங்
கூஸ்ய கூர்சாயதே
கண்டுஷாம்பு நிஷேசனப் புரரிபோர்
திவ்யாபி ஷேகாயதே
இஞ்சித் பக்ஷித மாம்ச சேஷ கபளம்
நவ்யோப மஹாராயதே
பக்தி: இம் நக ரோத்ய ஹோ
வசை சரோ
பக்தாவதம் ஸாயதே ||

— சிவானந்தலகரி

இது தமிழ்நாட்டு வேடன் கதை.

---

* பின்னர் விளக்கப்பட்டுள்ளது

கங்கைக் கரை வேடனாகிய குகன் ராமனிடன் சொந்தம் கொண்டாடி "அண்ணே!" என்று அழைத்ததைக் கண்டு லக்ஷ்மணன் கோபிக்கிறார் ராமர் தன் தம்பியை அமைதிப்படுத்திக் கூறிய தாவது.

"என்னிடம் வைத்த ஆழ்ந்த அன்பினால் அண்ணே என்று அழைக்கிறான். அதனால் எனக்கும் அவனிடம் அத்யந்த ப்ரியம் உண்டாகிறது. பக்தியற்றவன் அமிர்தத்தைக் கொடுத்தாலும் அதை நான் ஏற்கமாட்டேன்"

இறைவனிடம் அன்பு செலுத்த எல்லா ஜீவன்களுக்கும் உரிமை உண்டு. ஹனுமான், கருடன், ஜாம்பவான், ஜடாயு, கஜேந்திரன் இவர்களைக் குறிப்பிடலாம்.

அன்பைத்தான் இறைவன் எதிர்பார்க்கிறார். ஒரு கவி பின்வருமாறு கூறுகிறார்.

வ்யாதஸ் யா சரணம் த்ருவஸ்ய ச வயோ வித்யா கஜேந்திரஸ்யகா
காஜாதி விதுரஸ்ய யாதவ பதே ருக்ரஸ்ய இம் பௌருஷம்
குப் ஜாயா: கமனீய ரூப மதிகம் கிம் தத் ஸுதாம் ஞேதம்
பக்த்யா துஷ்யதி கேவலம் நச் குணைக் பக்திப் ரியோ மாதவ:

வேடனிடம் என்ன ஆசாரம்?

துருவனுக்கு என்ன வயது?

கஜேந்திரனுக்கு என்ன கல்வி?

விதுரர் என்ன ஜாதி? யாதவ அரசனான உக்ரசேனனுக்கு என்ன பலம். குப்ஜையிடம் என்ன பிரமாதமான அழகு? குசேலரிடம் ஏது பணம்? ஆகவே இறைவனிடம் பக்தி செலுத்த இத்தகையவைகள் தேவையில்லை.

கிருஷ்ணன் மதுராபுரியில் பிரவேசித்தபோது அவரை வரவேற்று அன்போடு உபசரித்த கூனி (குப்ஜை)யின் சௌந்தர்யம் என்ன? விதுரன் அளித்த பழத் தோலை பகவான் உண்பானேன்?

## கடும் தவமும் அவசியமில்லை

பக்தியைக் கொண்டே பகவானைக் கட்டுபடுத்தலாம். கடும் தவங்களும் அவசியமில்லை.

நாரதர் ஒரு சமயம் வைகுண்டம் போகுமுன் பூலோகம் வந்தார். அங்கு ஒரு ரிஷி கடும் தவம் செய்துக் கொண்டிருந்தார். நாரதரைக் கண்டதும் அந்த ரிஷி "நான் பகவானைக் காண கோரத்தவம் செய்கிறேன். அவன் அருள் கிடைக்க எவ்வளவு காலம் ஆகும்? என்று கேட்டுச் சொல்லும்" என்றார்.

சிறிது தூரம் சென்றதும் சாந்திராமன் என்பவன் கஞ்சா குடித்துக் கொண்டிருந்ததைக் கண்டார் ''எங்கே போறிங்க ஸ்வாமி?' என்றான் அவன். ''வைகுண்டம் போகிறேன்'' என்றார் நாரதர் ''அப்படியா? பஜனை, பூஜை, சாதனம் எதுவும் இல்லாமல் என் கஞ்ஜாவினால் நான் வைகுண்டம் வர முடியுமா? என்று உங்கள் சாமியைக் கேளுங்கள்'' என்றான்.

நாரதர் வைகுண்ட நாதனை சந்தித்து இருவருடைய கேள்விகளையும் தெரிவித்தார்.

சாந்திராமன் பெயரைக் கேள்விப் பட்டதும், பகவான் ''நாரதா! அம்மாதிரி பக்தன் யார் இருக்கிறார்கள். நீ ஒரு முனிவரைப் பற்றி கூறினாயே அவர் யார் தெரியவில்லையே?'' என்றார்.

நாரதர் பூலோகத்திற்கு வந்து பகவான்கூறியதைசாந்திராமனிடம் கூற அவன் ஆனந்தக் கூத்தாட ஆரம்பித்து விட்டான். ''ஏ சாந்திராமா! உன் கஞ்ஜாவிற்கு வைகுண்டத்தில் இடம் கிடைத்து விட்டது. இனி நீ ஆனந்தமாக இருக்கலாம்'' என்றான் அவன்.

இத்தகைய உண்மை பக்தியையே பகவான் வேண்டுகிறார்.

இறைவன் எல்லோருக்கும் தாயும் தந்தையுமாக இருக்கிறார். தாய் தந்தையரிடம் அன்பு காட்ட கல்வி கற்க வேண்டுமா?

எழுத்தறிவில்லாத பக்தன் மெய்யன்பினால் உள்ளம் உருகி அம்பிகையைக் கூவியழைக்கும்போது அவள் ஞானத்தை அவனுக்கு அளிக்கிறாள். அருள் ஏற்பட்டு விட்டால் அவனுக்கு எல்லாம் விளங்கி விடும். உண்மை பக்திக்கு ஆர்வம் தவிர வேறு எதுவுமே தேவையில்லை. இதைத்தான் நாரத பக்தி ஸூத்திரம்.

நாஸ் தி தே ஷு ஜாதி வித்யா ரூப
குலத் ஹ ந க்ரியா திப் ஹுத:

என்கிறது.

லௌகிக காரியங்களைச் செய்துக் கொண்டே பக்தராக இருக்கலாம் என்பதற்கு மாணிக்கவாசகர், சேக்கிழார், ராமதாஸர் முதலியவர்களைக் குறிப்பிடலாம்.

## அபேட்சிக்கும் பக்தியும் பிரேம பக்தியும்

ஹைதுகி பக்தி என்றால் ஒன்றைக் கோரி பக்தி செய்வது. துருவனுக்கு முதலில் ஹைதுகி பக்தியே ஏற்பட்டது. துருவன் உத்தானபாத மஹாராஜாவின் மூத்த மனைவியின்பிள்ளை. அரசன் இளைய மனைவியின் மோகத்தில் மூழ்கி இருந்தான். ஒரு நாள் துருவன் தன் தகப்பனார் மடியில் தன் தம்பி (இளையாளின் பிள்ளை) இருப்பதைப் பார்த்து தானும் ஏறி உட்காரப் போனான். அவனுடைய

சிற்றன்னை தடுத்து "என் வயிற்றில் பிறந்திருக்க வேண்டும் அப்படி யில்லாததால் அவர் மடி மீது நீ உட்கார முடியாது" என்று தடுத்து விட்டாள். பிஞ்சு உள்ளத்தில் வேதனை ஏற்பட்டது. அவன் தன் தாயாரிடம் போய் முறையிட்டான். அவள் இந்த ராஜ்யம் வேண்டாம், உனக்கு வேறு ராஜ்யம் கிடைக்கும்]என்று ஏதோ சமாதானம் சொல்லி அனுப்பினுள்.

பகவான் பிரத்யட்சமாகி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார். துருவன் எதை உத்தேசித்துத் தவம் செய்தானே அதை மறந்து விட்டு எம்பெருமானை வாய் விட்டு துதிக்கலானுன். இறைவன் "நீ ராஜ்ய பதவிக்காக தவம் செய்யவில்லையா?" என்று நினை வூட்டினுர், துருவன்.

ஸ்த் ஹா நாப் ஹிலாஷி
தபஸி ஸ்த்ஹிதோ ஹம்
தவாம் ப்ராப்தவான்
தேவ மூநீ ரத்ர குஹ்யம்
காகம் விசிநவந
ஸ ம வாப் ய ரத்நம்
ஸ்வாமிந் க்ருர்த் ஹோஸ்மி
வரம் ந யாசே

—பக்தி ஸு்த்ஹோ,தயம்:

என் ஐயனே! நான் அரச பதவியை விரும்பி தவஞ் செய்யத் தொடங்கியது உண்மையே. ஆனுல் ]முனிகளும் யோகிகளும் கடுந் தவமியற்றியும் காணற்கரிய உம்மை நான் கண்டேன். கிளிஞ்சலைத் தேடிக் கொண்டிருந்த எனக்கு திவ்யரத்னமல்லவா கிடைத்தது. நான் கிருதார்த்தனுனேன். எனக்கு வேறு வரம் வேண்டியதில்லை" எனக்கு பக்தி சாம்ராஜ்யம் வேண்டும் என்ருன்.

இந்த வேறு சாம்ராஜ்யத்தை எப்படிப் பெறுவது? இதற்கு துருவனுக்கு நாரதர் வழி கூறினுர். அவர் யோசனைப்படி ராஜ் யாபே க்ஷ யினுலே யே துருவன் தவம் செய்யத்:துவங்கினுன்.

அப்படி ஏகாக்கர சிந்தையுடன் அவன் தியானித்தது காரணமாக அவன் பக்தி வளர்ந்தது. அப்பக்தி வரவரப் பலப்பட்டு பகவத் குணுனுபவத்தில் அவனை ஈடுபட்டிருக்குமாறு செய்து விட்டபடியால் திருமால் அவனுக்கு பிரத்யக்ஷமாகி அருள் செய்தார்.

இன்னெருு பக்தனுக்கு ஜகன்மாதா பிரசன்னமாகி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டாள். அவன் பக்தி பரவசனுகி.

மாத; இம் வரம் அபாம் யாசே? ஸர்வம் ஸம்பாதிதம்
இதிசத்யம்

யத் த்வச் சரணும் புஜம் அதி குஹ்யம்
திருஷ்டம்!வித்ஹிஹர முரஹராகுஷ்டம் (ஸர்வானந்த
தரங்கிணி)

என்ருன்.

தாயே! பிரம்மா விஷ்ணு ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் வணங்கும் உனது திருவடித் தாமரைகளைக் காணப் பெற்ற பின் வேறென்ன வரத்தை நான் விரும்பப் போகிறேன் என் கோரிக்கைகள் எல்லாம் நிறைவேறி விட்டன.

## யார் பக்தி சிறந்தது?

வாளால் மகவு அரிந்து ஊட்ட
வல்லேன் அல்லேன்: மாது சொன்ன
சூளால் இளமை துறக்க வல்லேன்
அல்லன்: தொண்டு செய்து
நாளாறில் கண் இடந்து அப்ப
வல்லேன் அல்லன்: நான் இனிச்சென்று
ஆளாவது எப்படியோ
திருக் காளத்தி அப்பருக்கே

என்கிருர் பட்டினத்தார். சிறுத் தொண்டர், நீலகண்டர், கண்ணப்பர் இவர்களைப் போல பக்தி செலுத்த முடியவில்லையே என்று அங்கலாய்க்கிருர்.

இம் மூன்று வித பக்தியில் யார் பக்தி உயர்ந்தது?

திருநீலகண்டர் தன் உறுதியில் நிலைத்து நிற்க மனைவி இறைவன் பேரில் ஆணை இட வேண்டியிருந்தது. சிறுத்தொண்டர் பெற்ற மகனையே அரிந்து கறி சமைத்து அளித்த செயலில் 'எதுவும் எனக்கு அரியது அன்று' என்கிற ஆணவம் த்வனிக்கிறது. கண்ணப்பர் ஒருவர் தான் பிறர் தூண்டுதல் இல்லாமல் அயல் அறியா அன்பை இறைவனிடம் செலுத்தினுர். ஆகவே கண்ணப்பர் பக்தியே சிறந்தது.

## வேத வேதாந்தங்களில் பக்தி

த்வம் ஹி ந: பிதா வஸோ த்வம் மாதா—ரிக்வேதம்
(நீயே எங்கட்கு தந்தை நீயே தாய்)
இந்த்ர க்ரதும் ந ஆ பர பிதா புத்ரேப்யோ மயா

(இந்திரனே! ஒரு தந்தை தன் மகனுக்கு அளிப்பது போல எங்களுக்கு ஞானத்தை அளியும்)

பதிம் ந பத்னி: உசதி ருசந்தம் ஸ்ப்ரு சந்தி சவஸாவன் மனீஷா
(பத்னி பதியைத் தழுவுவது போல என் எண்ணங்கள் உன்னைத் தொடுகின்றன)

—ரிக்வேதம்.

யத் அக்னே ஸ்யாம் அஹம் த்வம் வா கா ஸ்யா அஹம் ஸ்யுஷ்டே ஸத்யா இஹ ஆசிஷ:—

(நான் நீயாக இருந்து நீ நானாக இருந்தால் இதற்குள் உன் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்திருப்பேன்.

1. "சிரத்தா பக்தி தியான யோகாத்"--கைவல்ய உபநிஷத்
சிரத்தையாலும் பக்தியாலும் தியானத்தாலும்

2. "யஸ்ய தேவே பரா பக்தி: யதா தேவே ததா குரௌ தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மன:"
**ஸ்வேதாஸ்வதார உபநிஷத்:**

பகவானிடம் பரம பக்தியுடையவனும, பகவானிடம்போல் தனது குருவினிடம் அவ்வளவு பக்தியுடையவனும் எவனோ அத்தகைய மஹாத்மாவுக்கு, கூறப்படாத பொருள்களும் விளங்குகின்றன.

3. 'கஸ்மாத் அஞ்ஞான ப்ராபல்யம் இதி பக்தி: ஞான வைராக்ய வாஸன அபவாத்ச"

—திரிமஹாநாராயண உபநிஷத்:

அஞ்ஞானம் மிகுதியா யிருப்பதேன்? பக்தி ஞானம் வைராக்யம் இவற்றின் வாஸனை இல்லாமையால்.

4. 'பக்திர் கம்யம் பராம் தத்வம் அந்தர்லீனேன சேதஸா"

—யோகசிகா உபநிஷத்:

உள்முகமான மனதினால் மட்டும் பக்தியால் பரம தத்துவம் அடையப்படும்.

5. "ஸகலம் பரப்பிரம்மைதத் ய: த்யாயதி, ரஸதி, பஜதி, ஸ அமிருதோ பவதி க்ருஷ்ண ஏவ பரமோ தேவ: தம் தயாயேத், தம்ரஸயேத், பஜேத், யஜேத்"

-- கோபாலதாபினி உபநிஷத் பூர்வபாகம்.

இதெல்லாம் பரப்பிரம்மம் என தியானிப்பவன், தெய்விக ஆனந்தத்தை ருசிப்பவன், வழிபடுபவன் அமிருதத்வம் அடைவான்.

கிருஷ்ணனே அந்தப் பரதெய்வம். அவனைத் தியானி, அவனது ஆனந்தத்தைச் சுவை, அவனை வணங்கு, அவனுக்கு யாகம் செய்.

6. "கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷ மாம் சரணாகதாமிதி
த்யாத்வா"

—வாசுதேவ உபநிஷத்

தாமரைக் கண்ணனான கோவிந்தனே, உன்னிடம் சரணம் புகுந்த என்னைக் காப்பாற்று.

## கீதை தரும் பக்தி விளக்கம்

குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனன் வாயிலாக ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உலகுக்கு உபதேசித்த மார்க்கங்கள் கர்மயோகம், பக்தி யோகம் ஞான யோகம் என்று மூவகைப்படும். அவைகளில் இக் கலியுகத்தில் மனிதன் இருக்கும் உள நிலையில் அவன் எளிதில் கடைபிடிக்கக் கூடியது பக்தி மார்க்கமே.

பக்தி என்பது பரமனிடத்தில் காட்டும் அன்பு. இந்த அன்பாகிய பக்தி மூலமே தான் சுலபமாகவும் எளிதிலும் கடவுள் அருளைப் பெற முடியும், கடவுளைக் காண முடியும்; அவனுடன் இரண்டற கலக்க முடியும்.

கீதையில் (12வது அத்யாயம் 54வது சுலோகம்)

பக்த்யா நன்யயா லப்ய
அஹமேவம் விதோர்ஜன |
ஞாதும் திரஷ்டுஞ்சதத்வேன
பிரவேஷ்டுஞ்ச பரந்தப ||

என்று சொல்லப்பட்டுகிறது.

அடுத்த சுலோகத்தில் கண்ணன் பக்தனுடைய அடையாளங்களையும் செய்கைகளையும் கூறுகின்றார்.

மத்கர்ம கிருத் பத்பர மோமத்
பக்த: சங்வர்ஜித: |
நிர்வைர: சர்வபூதேஷு
யஸ்ஸமா மேதி பாண்டவ

எல்லா நற்செய்கைகளையும் கிருஷ்ணார்ப்பணமாகக் கர்மயோக புத்தியுடன் செய்து, இறைவனே ஒப்புயர்வற்ற உண்மைப் பொருள் என்றுணர்ந்து வழிபட்டு உலகப்பற்று ஒழிந்து அஹிம்சை தர்மத்தைக் கடைப் பிடித்து வாழ்பவன் தான் பக்தன் இந்த 12வது அத்யாயத்தில் 13லிருந்து 20 வரையுள்ளசுலோகங்களில் பக்தனுடைய குணங்களை கண்ணன் விரிவாகக் கூறுகிறார்.

ஸ்ரீ பாகவதம் 16வது ஸ்கந்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் கூறுவதாவது "எவனொருவன் தற்செயலாய் என் கதைகளைக் கேட்பதில் சிரத்தை யுள்ளவனாக இருந்தும் உலக விஷயங்களில் வைராக்கிய மற்றவனாக வும் அதிகப்பற்றிலாதவனுமாக இருக்கிறானோ அவனே பக்தி செய் வதற்கு உரியவன். அவனுக்கு பக்தியோகம் கை கூடும்.

காஞ்சி காமகோடி பெரியவர்கள் இதுபற்றி கூறியிருப்ப தாவது:

சமய சித்தாந்தங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்டன வாக இருக்கின்றன. ஆனால் இத்தனை சித்தாந்தங்களும் பொது வாக பக்தி வேண்டும் என்கின்றன.

எந்த சமய சித்தாந்தமானாலும் அது மனிதனை உயர்த்துவதற் காக ஏற்பட்டதேயாகும். மனிதன் ஒருத்தன்தான் சிருஷ்டியிலேயே உயர வாக்கில் அதிகமாக வளர்கிற பிராணி. பாக்கி பசு பட்சிகள் பக்கவாட்டிலேயே அதிகமாக வளர்கின்றன. இவன் எண்ணத் தாலும் உயர வேண்டும். தேக பலத்தில் மிருகங்களைவிடக் குறைந் தவனான மனிதன் புத்தி பலத்தால் அந்த மிருகங்களையும் அடக்கி ஆண்டு அவற்றிடமிருந்து தனக்கு வேண்டிய சௌகரியங்களைப் பெறுகிறான். அதே சமயத்தில் அந்த விலங்கினங்களுக்கு இல்லாத விசாரங்களும், தொல்லைகளும் மநுஷ்யனுக்குத்தான் இருக்கின்றன எண்ணத்தினால் உயர்ந்தால் இந்த விசாரங்களிலிருந்து தப்ப முடியும். அப்படி விசாரங்களிலிருந்து விடுவித்து இவனை உயர்த்து வதற்குத்தான் எல்லா மதசம்பிரதாயங்களும் தோன்றியிருக்கின்றன மற்றப் பிராணிகளுக்கு இல்லாத விசாரம் இவனுக்கு இருப்பது மட்டுமில்லை; இவன் முயற்சி செய்தால் விசாரத்திலிருந்து விடுபடு வதோடு நில்லாமல், மற்றப் பிராணி வர்க்கம் எதற்கும் கிடைக்க முடியாத ஞானத்தைப் பெறமுடியும் என்று மத சித்தாந்தங்கள் யாவும் கூறுகின்றன. உலக விவகாரங்களை யெல்லாம் இயக்கி வைக்கிற ஒரு மகாசக்தியைத் தஞ்சம் புகுந்தாலே விசாரங்களி லிருந்து விடுபடலாம் என்று பொதுவாக இந்த எல்லாச் சித்தாந்தங் களும் ஒரே குரலில், ஏகமனதாகச் சொல்கின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம், இன்னும் கிறிஸ்துவம், இஸ்லாம் முதலிய எந்த சம்பிரதாயமானாலும் சரி பக்தி எல்லாவற்றுக்கும் பொது, புத்தர் பக்தியைச்சொல்லாவிட்டா லும் பௌத்தர்களால் பக்தியில்லாமல் முடியவில்லை. அதனால்தான் புத்தரையே ஸ்வாமியாக்கி, வேறு எந்த ஸ்வாமிக்கும் இல்லாத அளவுக்குப் பெரிய பெரிய மூர்த்திகளை அவருக்கு வைத்துப் பூஜை செய்கிறார்கள்.

அத்வைதத்தின்படி பக்தி செலுத்துகிற போது, ஈசுவரன் வேறு நாம் வேறு என்கிற எண்ணம் இல்லாமல் அதுவே நாம் என்ற

அபேத பாவத்தைக் கைக்கொள்ள வேண்டும். 'பகவான் என்று மகாசக்திவாக சர்வக்ஞனாக (எல்லாம் அறிந்தவன்) ஒன்றை வைத்துப் பக்தன் என்ற அல்ப சக்தன், கிஞ்சித்ஞன் (சிறிதே அறிந்தவன்) பக்தி பண்ணுகிறான். இரண்டும் எப்படி ஒன்றாகும்?' என்று கேட்கலாம். அப்படியானால் பகவானுக்கு நாம் வேறா? பகவானுக்கு வேறாக மற்ற வஸ்துக்கள் இருக்கின்றனவெனில் அதெல்லாம் எங்கிருந்தோ வந்த வஸ்துக்களை அவன் எப்படி ஆட்டிப் படைக்க முடியும்? இப்படி யோசித்துப் பார்த்தால் ஒரே பரமாத்மா தான் ஈசுவரன் என்கிற சமுத்திரமாகவும், பலவிதமான ஜீவராசிகளான குளம், குட்டை, கிணறுகளாகவும் ஆகியிருக்கிறது என்று தெரியும். சக்தியில் ஏற்றத்தாழ்வு இருக்கலாம். ஆனால் அடிப்படையில் எல்லாம் ஒரே வஸ்து தான். அந்த அடிப்படைக்குப் போனால் நாம் அதுவாகவே ஆகிவிடுவோம். இதுதான் அத்வைத முக்தி.

வெறும் புத்திபூர்வமாக இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. இது அநுபவ சித்தியாக வேண்டும். இதற்கு ஈசுவர கிருபை இருந்தால்தான் முடியும். நம்மை ஆட்டிப் படைக்கிற சக்தியின் அநுக்கிரகம் இருந்தால்தான், இந்த ஆட்டம் ஓய்ந்து அடிப்படைக்குப் போக வேண்டும் என்ற அத்வைத நாட்டமே நமக்கு வரும் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். "ஈசுவரானுக்ரஹாதேவ பும்ஸாம் அத்வைத வாஸனா."

பகவான், பக்தன் என்று பிரிந்தே தோன்றுகிற ஆரம்ப ஸ்திதியிலும்கூட, 'பகவானாக எந்தப் பரமாத்மா வந்திருக்கிறதோ அதுவே தான் பக்தனாகிய நானாகவும் ஆகியிருக்கிறது' என்ற நினைவை அடிக்கடி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இதனால் பகவானிடம் நம், அன்பும் அதிகமாகும். ஏனென்றால் நம்மைவிட நமக்குப் பிடித்தமான, அல்லது அன்பான வஸ்து இல்லை அல்லவா?

நம் காரியங்கள் அனைத்துக்கும் பலன் தருகிற ஈசுவரன், நாம் பக்தி பண்ணப் பண்ண அதற்குப் பலனாக மேலும் மேலும் அவனை நெருங்க அநுக்கிரகம் செய்வான். தான் யார் எப்படிப்பட்டவன் என்பதையெல்லாம் அவனே தெரியப்படுத்துவான், நாம் அவனை ஆராய்ந்து பார்க்க வேண்டாம். அவனே நம் பக்திக்கு இறங்கித் தன் இயல்பைத் தெரியப்படுத்துவான். கீதையில் பகவான் இப்படியே சொல்லியிருக்கிறார். "பக்த்யா மாம் அபிஜானாதி யாவான் யச்சாஸ்மி."

இவ்வாறு ஈசுவரனின் அனந்த கல்யாண குணங்களை அறிந்த பின் அதையே பக்தர்கள் ரசிக்கிறார்கள். ஞானியோ இந்தக் குணங்களுக்கு ஆதாரமான நிர்குண சத்திய நிலையை பகவதநுக்கிரஹத்துடன் அடைந்து அதில் இரண்டறக் கலந்து விடுகிறான். இதற்கும் ஸகுண உபாசனைதான் ஆரம்பமாயிருக்கிறது.

இந்த ஸகுண உபாஸனை—அல்லது மூர்த்தி வழிபாட்டுக்காகத்தான். "இஷ்டதேவதை" என்ற கருத்து நம் மதத்தில் இருக்கிறது.




# அடியார்கள் கைக்கொண்ட பக்தி வழிகள்

3

நாயன்மார்களும் ஆழ்வார்களும்இறைவனைக் கண்டு பேரரானந்தம் அடைவதற்கு பின்பற்றிய பக்தி வழிகள் பலவிதம்.

வேதம் ஓதுதல் மூலம் பக்தி செய்தல் (ருத்ர பசுபதி) யக்ஞம் செய்வது மூலம் பக்தி (சோமயாஜிமாறர்) சலவைத் தொழில் மூலம் பக்தி (திருக்குறிப்புத் தொண்டர்) மீன் பிடிப்புத் தொழில் மூலம் பக்தி (அதிபத்தர்) எச்சில் மாமிசம் அளிபபது மூலம் பக்தி (கண்ணப்பர்) பிள்ளைக்கறி சமைத்து போட்டது மூலம் பக்தி (சிறுத்தொண்டர்) மண்பாண்டத் தொழில் மூலம் பக்தி (திருநீலகண்டர் தலைமயிர் களைதல் மூலம் பக்தி (மானக்கஞ்சார்) பேயுருவம் பெற்று பக்தி செலுததியவள் (காரைக்காலம்மையார்) இபபடி பலர் பல வழிகளில் இறைவனிடம் பக்தி செலுத்தியுள்ளனர்.

இவ்வழிபாட்டு முறை ஒன்றுக்கொன்று முரணகத் தோன்றினாலும் இந்த அடியார்களின் உள்ளக் கனவு ஒரே பக்குவமான நிலையில் இருந்ததால் இறைவன் அருள்மாரி ஒரே விதமாக இருந்தது.

பக்தி செலுத்தும் முறைகளைப்பற்றி தெரிந்துக் கொள்ளுமுன் பக்தியின் பல வகைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

## பலவகைப் பக்தி

அவை ராகாத்மிகா பக்தி
அஹைதுகி பக்தி, முக்யா பக்தி

1. ராகாத்மிகா பக்தி (எவ்வித முயற்சியுமின்றி இயல்பாகவே இறைவனிடம் உள்ளம் உருகி வாடி வருந்தி பக்தி செய்வது) (இத்தகைய அன்பு பெருக்குக்கே ராகம் என்று பெயர்.

2. அஹைதுகீ பக்தி; ஆழ்ந்த அன்பு. அஹைதுகீ என்றால் ஹேது அல்லது விருப்பம் இல்லாதது என்று பொருள். ஆண்டவனைத் தவிர வேறு எந்தப் பொருளிடம் இச்சையில்லாமல் இது வேண்டும் அது வேண்டும் என்று கேட்காமல் (முக்திவேண்டும் என்பதைக் கூட கோராமல்) பக்திசெய்வது. சரணகதி என்பது இதில் அடங்கிவிட்டது

3. முக்யா பக்தி மிகச் சிறந்த வகை. ஈசுவரனோடு ஐக்யமாதல் இது வரை கூறிய மூன்றும் உத்தம பக்தி வகைகள்.

மற்றொரு மூன்று வித பக்திகளை இப்போது பார்க்கலாம்.

1. வைதீ (த்ஹீ)பக்தி

சாஸ்திரங்களை படிப்பது, ஸ்தோத்திரங்களைச் சொல்வது இவை மூலம் ஏற்படும் பக்தி. இதனால் இறைவனிடம் பற்றுதல் ஏற்படும். ஒரு பிரயோசனத்தை எதிர்பார்த்து செய்தாலும் பரவாயில்லை. இதற்கு ஹைதுகி என்று பெயர். ஆனால் இந்த பக்தியை செய்துக் கொண்டு போனால் அஹைதுகி பக்திக்கு கொண்டு போய்விடும்.

2. ஸஹேதுகீ பக்தி

தாமஸ, ராஜஸ சாத்விக பக்திகள் ஒன்றிலிருந்து ஒன்றுக்குப் படிப்படியாகப் போகலாம்.

திருடர்கள் கடவுளை வேண்டிக் கொண்டே தன் தொழிலைச் செய்கிறார்கள் (தாமஸ பக்தி) புகழ், நல்லது ஏற்பட வேண்டும் என்று வேண்டுவர்கள் ராஜஸ பக்தி, முக்தியை மட்டும் விரும்பும் பக்தி சாத்வீக பக்தி.

இந்த மூவகையான பக்தியும் காமம் அல்லது விருப்பத்துடன் கூடியது.

3. கௌணீபக்தி

மூன்று வகை

ஆர்த்த பக்தி— விபத்திலிருந்து தப்பித்துக் கொள்ள இறைவனை அழைத்து ஓலமிடுவது (கஜேந்திரன்)

ஜிஜ்ஞாஸூ பக்தி— பகவத் தத்துவத்தைப் பற்றி தெரிந்துக் கொள்ள வேண்டும் என்ற ஆராய்ச்சி மனப்பான்மை.

அர்த்தார்த்தி பக்தி— ஒரு குறிப்பிட்ட பொருள் வேண்டும் என்று குறிப்பிட்டு பக்தி செலுத்துவது பின்னர் கூறப்பட்ட மூவகை பக்திகளும் தாழ்ந்த பக்தியேயாகும். ஆனால் இவை நாளடைவில்உயர்ந்த பக்திக்கு கொண்டு போய்விடும்.

பிஞ்சு மனத்திலேயே சிறு வயதிலேயே பக்திக்கான விதை ஊன்றப் பட வேண்டும். இளமைப் பருவமே பக்தி மார்க்கத்திற்கு மிக உகந்த காலம். இவ்வுலகில் மகா புருஷர்கள் என்று பெயர் பெற்றவர்களில் ஏறக்குறைய எல்லோருமே வாலிபப் பருவத்திலே பகவத் பக்தி செய்தவர்களே.

பிரஹ்லாதன் கூறுவதைக் கேளுங்கள்,

''கௌமார ஆசரேத்ப்ராக்ஞோ தஹர்மாந் ப்ஹா கவதாந் இஹ;
துர் லப்ஹும் மாநுஷம் ஜந்ம ததப் யத் ஹ்ருவம்
அர்த்த ஹுதக். (பாகவதம்)

(மானிட ஜன்மமே துர்லபம் அப்படிப்பட்ட மானிட ஜன்மத்திலும் புருஷார்த்தத்தைப் பெறுவது இன்னும் அரிது. ஆகவே வாலிபப் பருவத்திலேயே பக்தி செய்வதில் ஈடுபட வேண்டும்)

பஞ்ச சாதனங்கள்

சைதன்யர் தன் (சைதன்ய சரித்திராமிர்தம்) நூலில் பக்திக்கு ஐந்து வகை சாதனங்களை வற்புறுத்தியிருக்கிறார்.

''ஸத் ஸங்கம், கிருஷ்ண சேவை, பாகவத பாராயணம் ஹரிநாம சங்கீர்த்தனம், பிருந்தாவன வாஸம் இந்த ஐந்தும் பிரதான சாதனங்கள். இவற்றில் சொற்பமாக வருவது பின்பற்றப் பட்டால் கூட உள்ளத்தில் ஸ்ரீ கிருஷ்ணப் பிரேமையை உதிக்கச் செய்யும்.

முக்திக்கு பக்தி அவசியம்

முத்தி வேண்டுமேல்
பக்தி வேண்டுமாம்
சத்தியம் இது புத்தி நெஞ்சமே.

—ராமலிங்க சுவாமிகள்.

பக்தி செய்து இறைவனை நினைந்து நினைந்து நெக்கு உருகாதவர் முக்தியடைய இயலாது. அப்படி பக்தி இல்லாது முக்தி அடைய விரும்புபவர் ஒரு பேடி, அழகிய பெண்ணை விரும்புவது போல என்கிறார் பாம்பனடிகள்.

பேடி, பெண்ணை காமுறல் போல்
கல்வி இல்லாதவன்
பெரும் கழகம் புக வெனல் போல்
திருவிலாதான்
பாடி புகழ் வள்ளல் எனும்
பெய ரோன் னேற்கப்
படி மீது சூழ்வது போல்
பதி யாம் உன்னை

தேடி நிற்கும் பேரளி
இல்லாத நாயேன்
நீடருள் வாழ் வடைய நினைக்கிறேன்.

என்கிறார்.

நம் சிறுமையையும் ஆண்டவன் பெருமையையும் நினைத்துப் பார்த்தல் வேண்டும். நம் உள்ளத்தில் வைத்துள்ள வஞ்சனையையும் அவற்றால் விளையும் தீமைகளையும் அவற்றை நீக்கி இறைவன் நமக்கு அருளும் கருணையையும் உணர்ந்து உணர்ந்து உருக வேண்டும். அப்படி உணரும்போது உள்ளமும் உடலும், நெகிழும், இந்நிலையை

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து நிறைந்து நிறைந்து அன்பே அருளமுதே
நன்னிதியே ஞான நடத் தரசே என்னுரிமை
நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்தும் யார் வம்மினுலகியர்,

என்கிறார் ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் தன் திருவருட்பாவில்.

## ஐவகை பக்தி ரசம்

பக்தர்களின் தார தம்மியத்திற்கு ஏற்றபடி பக்தி ரசம், சாந்தி தாஸ்யம், ஸக்யம், வாத்ஸல்யம், மாதுர்யம் என ஐவகைப்படும்.

சாந்தி :— (சன் மார்க்கம்) ஒருவன் மனச்சாந்தி அல்லது அமைதியடையும்வரை பக்தி ஆரம்பமாகாது. குரு-சிஷ்ய உறவு.

தாஸ்யம் :— (தாச மார்க்கம்) ஆண்டான் அடிமை உறவு. பக்தன், தான் இறைவனது அடிமை என்று சொல்லிக் கொள்வதில் பேரானந்தமடைகிறான்.

சக்யம் :— (சக மார்க்கம்) பக்தன்: பகவானை நண்பனாக பாவித்து அவருடன் சரிசமமாகப் பழகுகிறான்.

வாத்ஸல்யம் :— (சத்புத்ர மார்க்கம்) பகவானை பெற்றோர் களாகக் கொண்டு உரிமை கொண்டாடுவது, பகவானைக் குழந்தை யாகக் கருதி பிரேமை செலுத்துவது இரண்டும் இதில் சேரும்.

மாதுர்யம் :— (பிரேமை மார்க்கம்) நாயகி நாயக பாவம்.



நால்வர் கடைபிடித்த மார்க்கம்

முக்தியடைய பக்தியின் எந்த மார்க்கத்தை இந்நால்வர் கடைபிடித்தனர் என இனி பார்ப்போம்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் கி.பி. மூன்றும் நூற்றுண்டு முதல் ஏழாம் நூற்றுண்டின் முன் பகுதிவரை உள்ள காலம் இருண்ட காலமாகும். மக்களது உணர்வு நிலே, ஆட்சி, வடக்கே தோன்றி பின் தெற்கே பரவிய பௌத்த சமணர் மதங்களைச் சார்ந்த துறவிகள் வயப்பட்டிருந்தது.

இந்நிலையில் தமிழ் மக்களது சமய வாழ்வு சமுதாய வாழ்வு இலக்கியம் இவற்றில் பெரியதொரு சீர்திருத்தத்தையும், விழிப்பையும் மறுமலர்ச்சியையும் உண்டு பண்ணிய பெருமை திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தர் இவர்களையே முக்கியமாகச் சேரும்.

இவர்கள் திருவருள் உண்மையை மக்கள் அறிந்துக் கொள்ள உணர்த்தினர். ஆலய வழிபாட்டை வற்புறுத்தினர். தங்கள் அருள் வாழ்க்கையிலும் இறைவன் அருளாலும் தங்கள் தீந்தமிழ் பாடல்

களாலும் சிவ நெறியை தழைக்கச் செய்தனர். சமண மதத்தை ஆதரித்து அதனை சார்ந்திருந்த மகேந்திர பல்லவனை திருநாவுக்கரசரும், கூன் பாண்டியன் என்ற பாண்டிய மன்னனை திருஞான சம்பந்தரும் சைவத்திற்குத் திருப்பினர்.

இவர்கள் இயற்றிய தேவாரப் பாடல்கள் அவர்கள் காலத்திலேயே தமிழ் மறை எனப் போற்றப்பட்டது.

சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடிய பாடல்களுக்குத் தேவாரம் என்று பெயர்.

தே–வாரம் என்றால் தெய்வத்துக் குரிய இசைப்பாடல்
தே—ஆரம் என்றால் தெய்வத்திற்கு குரிய மாலை (பாமாலை)

இம்மூவரும் மாணிக்கவாசகரும் பிறந்திரா விட்டால் சமயச்சின்னங்களும், மறை நூல்களும் மந்திரங்களும் என்ன நிலையடைந்திருக்கும் என்று ஒரு பழம்பாடல் கூறுகிறது.

சொற்கோவும், தோணிபுரத் தோன்றலும்
சுந்தரனும்
சிற்கோல வாதவூர் தேசிகனும் முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே, மறையெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே

"மூவர் செய்பனுவல் பகரவோ இசையுமில்லை" என்கிறார் தாயுமானவர்.

இவர்களுக்குப் பின் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் சுந்திரமூர்த்திசுவாமிகள் என்ற நம்பி ஆரூரர், இவர் இறைவனால் தடுத்தாளப்பட்டு திருவருள் நெறி நின்று தலங்கள் தோறும் சென்று பதிகங்கள் பாடினார். பெரிய புராணத்திற்கு மூலமாகிய திருத்தொண்டத் தொகை எனப்படும் திருப்பதிகம் இவர் இயற்றியதே

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி இம்மூவரும் இயற்றிய திருப்பதிகங்கள் மூவர் தமிழ் எனவும் வழங்கப்படும்.

இம் மூவருடன் மாணிக்கவாசகரையும் சேர்த்து நால்வர் எனவும் சைவ சமயாசாரியார் எனவும் (சமயகுரவர்) வழங்குவதுண்டு மாணிக்கவாசகர் அருளியது திருவாசகம். தேவாரமும் திருவாசகமும் சேர்ந்து தமிழ் மறைகள் எனப்படும்.

''இவை வேதத்தின் ஞான காண்டப் பொருளை சிவாகமத்துக்கு மாறுபடா வண்ணம் உள்ளபடி அறிவிக்கும் தமிழ் வேதம்'' என்று ஸ்ரீ ஆறுமுக நாவலர் தன் சைவ வினா விடையில் குறிப்பட்டிருக்கிறார்கள்.

ஞான சம்பந்தர் தேவாரம் பன்னிரு திரு முறைகளில் முதல் மூன்ருக இடம் பெறுகிறது. நாவுக்கரசர் தேவாரம் அடுத்த மூன்ருக இடம் பெறுகிறது. சுந்தரமூர்த்திகள் தேவாரம் ஏழாவது திரு முறை. மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாவது திருமுறையாகும்.

இந் நால்வரும் க்ஷேத்திரங்கள் தோறும் சென்று ஆலயங்களில் இறைவனை வணங்கி பாடல்கள் பாடி வழிபட்டுள்ளனர். இதை இவர்கள் செய்வானேன்?

கடவுள் தத்துவமானது அணுவுக்குள் அணுவாய் இறுதியற்ற வியாபகமாய் எல்லாமாய் பேதம் அற்ற ஒரு தன்மையதாக இருக்கிறது என்பது நமக்கு தெரிகிற விஷயம் தான், விஞ்ஞானிகளும் தாங்கள் ஆராய்ச்சிகள் மூலம் இதை உறுதிப்படுத்தியிருக்கிருர்கள்.

இப்படி எல்லாமாய் எங்குமுளன் என்று பாடியிருந்தும் மூர்த்தி வடிவத்தில் வைத்து வழிபடும் போது ஒரு தனி ஆனந்தம் ஏற்படவே செய்கிறது, இம்மூர்த்திகள் உறையும் தலங்களும் பெருமையாகப் பேசப்படுகின்றன.

நந்தனர் இன்றில்லாவிட்டாலும் நாளைக் கட்டாயம் சிதம்பரம் போவேன் என்று சொல்லிக் கொண்டே இருந்தவர். இதனல் நாளைப் போவார் என்ற பெயரைப் பெற்ருர். ஆழ்வார்களிலும் ஒரு நாளைப் போவார் உண்டு. அவர் குலசேகராழ்வார். ஸ்ரீரங்கம் செல்ல இவர் துடியாகத் துடித்தார்.

இம்மாதிரி இறைவனிடம் உள்ள ஈடுபாடு அவன் மூர்த்தத்தில் லயித்து அவன் தலத்தையே காண ஏங்கும் அளவுக்குக் கொண்டு வந்து விடுகிறது பக்தி.

ராமானுஜருக்கு நமமாழ்வார் மீது அளவு கடந்த பக்தி. நம்மாழ்வார் பிறந்த ஆழ்வார் திருநகரி செல்ல ஆவல் கொண்டார். ஆள்வார்திருநகரிக்கு இரண்டுமைலில் வந்தபோது ஊர் தென்பட்டது. கோயிலும் தெரிந்தது. கோயிலுக்குள் நம்மாழ்வார் மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிருர் என்பதும் ஞாபகத்திற்கு வந்தது அப்போது எழுந்த பாட்டு.

"இதுவோ திருநகரி ஈதோ பொருனை ; இதுவோ பரமபதத்து எல்லை இதுவோ தான் வேதம் பகர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை ஓதும் சடகோபன் ஊர்."

# சத்புத்ர மார்க்கம் 4

(சம்பந்தர் காட்டிய வழி)

ஜரித்ரீ பிதாச ஸ்வ புத்ராப ராதம்
ஸ ஹே நே நகிம் தேவ
அஹம் ஸாதி பாலோ பவான் லோக நாத:
க்ஷமஸ் வாபராதம் ஸமஸ்தம் மஹேச:||

தேவ சேனையின் நாயகனுன முருகப் பெருமானே! தந்தை தாய் தன் பிள்ளை செய்யும் தவறுகளைப் பொறுத்துக் கொள்ளவில்லையா? நானே மிகச் சிறிய குழந்தை. நீயோ மூவுலகுக்கும் தந்தை. ஆகவே என் குற்றங்களை மன்னிப்பாய். (ஆதி சங்கரர்)

இறைவனை தந்தையாக வழிபட்டவர் சம்பந்தர் சத்புத்ர மார்க்கம்.

இதை கிரியா மார்க்கம் என்றும் பக்தி யோகம் என்றும் கூறுவர்.

இவர் அம்பிகையால் ஞானப் பாலூட்டப் பெற்றவர்' ஆசுமதுர சித்ர விஸ்தார கவியானுர்.

இவர் பதிகங்களில் கடைசிப் பாட்டில் தன்னைப் பற்றிப் புகழ்ச்சியும், பெயர் முத்திரையும் பலஸ்ருதியும் இருக்கும். இது சத்புத்ர பாவத்தால் ஏற்பட்ட பெருமிதமாக இருக்கலாம். இறைவனே "சம்பந்தன் தன்னைப் பாடுவான்" என்று கூறியிருக்கிறுர்.

இவர் பாடியது. 16000 பாடல்கள். இப்போது கிடைத்துள்ளது 385 – ருக்வேத சாரம்.

இறைவனை உலக வழியிலேயே உபாசிக்க வேதம் வழி சொல் கிறது. அவனை எல்லாவித பந்துவாக நினைக்கவேண்டும்.

ஸநோ பந்துர்ஜநிதா ஸ விதாதா
தாமாநி வேத புவனனி விஸ்வா ||

பந்துக்கள் மூலம் பகவான் இயங்குகிறுர். இது ஒரு சுலபமான வழி. தாய் தந்தை நம் பந்துக்களில் நெருங்கியவர்கள். அவர்கள்

இல்லாவிட்டால் நாம் இல்லை. மாதா பிதா ஸ்வாதீனமான தெய்வங்கள். வேதம் பகவானை தாயாகவும் கூறுகிறது. தகப்பனாக வும் கூறுகிறது. மற்றுமுள்ள எல்லா உறவாகவும் கூறுகிறது.

"அப்பனும் நீ அம்மையும் நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ ஒப்புடை மாதரும் ஒண் பொருள் நீ சுற்றமும் நீ" என்று நாவுக்கரசர் பாடுகிறார்.

ஆழ்வார்களும் "பெற்ற தாயும் நீயே பிறப்புத் தந்தையும் நீயே" என்று பாடியிருக்கிறார்கள்.

ருக்வேத மந்திரம் ஒன்று "நீ தான் எனக்குப் பிதா, மாதா" என்கிறது. மற்றொரு மந்திரம் 'நாங்கள் உனக்கு தங்கை தமக்கை கள்" என்கிறது.

பகவானைப் பார்த்து வேதம் "நீ அசட்டு மாப்பிள்ளையாக இருந்து விடாதே" என்கிறது (சாமர்த்தியமான மாப்பிள்ளை தன் காரியத்தையும் நிறைவேற்றிக் கொண்டு மாமனார் மாமியார் தன்மதிப்பையும் பெறுகிறான். அசட்டு மாப்பிள்ளைக்கு காரியமும் கை கூடுவதில்லை மாமனார் மாமியாரிடமும் கெட்ட பெயர்)

இந்த உறவுகளில்

இறைவனையும் இறைவியையும் தந்தை தாயாக வழிபவடுது மிக சுலபமான முறை. இறைவனையும் இறைவியையும் தன் குழந் தையாகக் கருதி அன்பு செலுத்துவது பிரேமையின் முற்றிய நிலை இவ்விரண்டுமே 'வாத்ஸல்யம்' என்கிற சத்புத்ர மார்க்கத்தில் அடங்கும்.

இறைவனை தந்தையாக வழிபட வழிகாட்டியவர் திருஞான சம்பந்தர். கண்ணனைத் தன் குழந்தையாகப் பாவித்து (தான் யசோதையாகவே மாறி) பக்தி செலுத்தியவர் பெரியாழ்வார்.

## அம்மையப்பன் தத்துவம்

இவ்வுலகம் முழுவதையும் நடத்துபவர் சுவாமி. இதில் மனிதர் கள் மிருகங்கள், பக்ஷிகள், புழு பூச்சிகள் எல்லாம் இருக்கின்றன. மரம் செடி கொடி எல்லாம் கொண்ட ஒரு பெரிய குடும்பமே உலகம், அக்குடும்பத்தை நடத்துபவர் சுவாமி.

நம் சிறிய குடும்பம் ஒவ்வொன்றையும் அப்பா, அம்மா என்ற இரண்டு பேர் நடத்துகிறார்கள். இந்த ஸ்வாமியே தான் அப்பா

அம்மா உருவில் வந்து நம்மிடம் அன்பை செலுத்துகிறார். அப்பாவையும் அம்மாவையும் நாம் ஸ்வாமியாக நினைக்க வேண்டும். இதையே மாற்றி ஸ்வாமியையும் அப்பா அம்மா என்ற உருவங்களில் நினைக்க வேண்டும்.

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையை பெருக்கிப்
பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம்
அளித்த செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னை
சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருள்வது இனியே.

என்று மனமுருகி வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

அம்மைக்கே முதல் ஸ்தானம் கொடுத்திருப்பதைக் கவனிக்க வேண்டும். இறைவனை தந்தையாக வழிபட்ட ஞான சம்பந்தருக்கும் முதலில் அம்பிகையின் நினைவு வருவதால் தான் தோடு என்கிற அம்பிகையின் தாடங்கத்திற்கு முக்கியத்துவம் அளித்துள்ளார்.

உலகில் தாயின் கருணையே சிறந்தது. பிள்ளை தீயவனாக இருப்பதுண்டு. ஆனால் தன் பிள்ளைக்கு தீங்கு நினைக்கும் தாய் எங்கும் இல்லை.

குபுத்ரோ ஜாயேதக்வ
சிதபி குமாதா ந பவதி

என்கிறார் ஆதிசங்கரர். இதையே குலசேகராழ்வார்.

அரிசினத்தால் ஈன்ற தாய்
அகற்றிடினும் மற்று அவள்
அருள் நினைந்தே அழுங்குழவி
அதுவே போன்றிருந்தேனே

என்கிறார். கோபத்தால் அன்னை அடித்தாலும் அவள் காலையே கட்டிக் கொண்டு அழும் குழந்தை மாதிரி தன்னை இந்த ஆழ்வார் குறிப்பிட்டுக் கொள்கிறார்.

திருஞான சம்பந்தர் மூன்று வயது குழந்தையாக இருந்தபோது அம்பிகையால் ஞானப்பால் ஊட்டப்பட்டவர்.

குளத்தில் ஸ்நானம் செய்கிற தந்தையைக் காணுமல் குழந்தை சம்பந்தன் அழ உமையம்மை எடுத்து அணைத்து பரஞானம், அபர ஞானம் என்ற தன் இரு ஸ்தனங்களிலிருந்தும் பொழிகின்ற பாலை பொற்கிண்ணத்தில் இட்டு அத்துடன் சிவஞானமாகிய அமுதத்தை யும் குழைத்து சம்பந்தருக்கு ஊட்டினுள்.

பால் பருகியவுடன்

சிவனடியே சிந்திக்கும்
திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும்
பாங்கினி லோங்கிய ஞானம்
உவமையிலாக்கலை ஞானம்
உணர்வரிய மெய்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாமுணர்ந்தார் அந்நிலையில்

சிவஞான முண்டதால் சிவஞான சம்பந்தர் என்றும் அன்னையின் பால் உண்டதால் திருஞான சம்பந்தர் என்றும் பெயர் பெற்ருர்.

ஒட்டக்கூத்தர் சம்பந்தரை முருகன் திருவவதாரம் என்றே சொல்கிருர்.

வருகதை தெய்வமகள் என் மருமகள் வள்ளி வதுவை
மனமகிழ் பிள்ளை முருகன்
மதுரையில் வெல்லும் இனிய
தொருகதை சொல்லு தவள
ஒளிவிரி செவ்வ முளரி
ஒளி திகழ் அல்லிகமழும் ஒரு
மணிவல்லி எனவே

—தக்கயாக பரணி

அருணகிரிநாதர் திருப்புகழில் பல இடங்களில் ஞான சம்பந்தர் முருகனது அவதாரம் என்று சொல்லுகிருர்.

இறைவனை சம்பந்தர் தன் தந்தையாகவே வழிபடுகிறர்

எல்லா உயிர்களுக்குமே இறைவன் தந்தை. பக்குவ ஆன்மாக்களுக்கு மட்டுமே தந்தை மற்றவர்களுக்கு இல்லை என்று சொல்ல முடியாது. எல்லா உயிர்களுக்கும் தனு கரண புவன போகங்களை உதவி வாழச் செய்கிறான் இறைவன். ஆனால் சில உயிர்களே அவனை நாடிச் செல்கின்றன.

இவருக்கு ஆளுடைய பிள்ளையார், தமிழாகரன், காழியர் கோன் என்று பல பெயர்கள். ஞானப் பாலுண்டு நற்றமிழால் இறைவனைப் போற்றியவர்.

ஆறதேறுஞ் சடையான் அருள்
மேவ அவனியார்க்கு
வீறதேறுந் தமிழால் வழி
கண்டவன்

என்கிறார் நம்பியாண்டார் நம்பி.

சுட்ட முடியாத பரம்பொருளை "தோடுடைய செவியன்" என்று சுட்டுக் காட்டியவர். இறைவனை ஞானத் தந்தையாகப் பெற்றவர். இவருடைய பாடல்கள் இறைவனிடம் தமக்குள்ள உரிமையையும் அழுத்தமான பக்தியையும் உயிர்களிடத்தில் உள்ளக் கருணையையும் காட்டுகின்றன.

இயற்கையைக் கண்டு அக்காட்சிகளை வர்ணித்து அவை மூலம் தெய்வ உணர்ச்சியைப் பதிய வைக்கும் ஆற்றலை இவர் பாடல்களில் காணலாம்.

இயற்கையை அவர் வர்ணிப்பதற்கு ஒரு உதாரணம்.

திருவிழி மிழலையில் ஒரு நாடகக் காட்சியை அவர் கண்டார். நாடகம் என்றால் பல அங்கங்கள் வேண்டும். ஆடல் பாடல் வேண்டும். பக்கவாத்யம் வேண்டும். பார்ப்பவர்கள் வேண்டும். பரிசு வழங்க வேண்டும்.

இவர் பார்த்த இயற்கை நாடகத்தில் வண்டுகள் மலர்களிலுள்ள தேனை உண்டு இசை பாடுகின்றன. மயில்கள் நடனமாடுகின்றன. மேகங்கள் முழவு போல் ஒலிக்கின்றன. கொன்றை மலர்கள் கொறியப்படுகின்றன.

வரைசேரும் முகில் முழவ
மயில்கள் பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன் இதழிதரமென்
காந்தள் கையேற்கும் மிழலையாமே.

சம்பந்தர் நீதிகளை தன் நெஞ்சுக்குச் சொல்வது போலும் சில பாடல்களைப் பாடியிருக்கிறார்.

உடல் கொண்டு வாழும் உலக வாழ்க்கையின் இன்ப துன்பங்களை ஒரு உதாரணத்தால் காட்டுகிறார்.

ஒரு பாம்பின் வாயில் தேரை சிக்கியது. தேரை வாயில் ஒரு சிறு வண்டு. தேரை தான் பாம்புக்கு இரையாகப் போவதை உணராமல் தன் வாயில் [கிடைத்த உணவு இன்பத்தைப் பெறப் பார்க்கிறது. இதே நிலையில் தான் உடல் வாழ்க்கையுள்ளது.

தேரை பாம்பினால் விழுங்கப்படுவதுபோல் உடலுக்கும் மரணம் என்பது காத்துக் கொண்டிருக்கிறது. பாம்பின் வாய்த் தேரை போல உயிர் பலபல நினைக்கிறது. பின்னே வரும் துன்பத்தை நினையாமல் முன்னே நிற்கும் அற்ப இன்பத்தைக் கண்டு மகிழ்கிறது. எனவே மரணத்தை பாம்பாகவும் உடல் வாழ்க்கையைத் தேரையாகவும் தேரைவாய் வண்டை உலக இன்பமாகவும் அமைத்துக் காட்டுகிறார்.

பாடல்களில் இயற்கை வர்ணனை மிகுதியாகக் காணப்படுகிறது. குழந்தையுள்ளம் எதைக் கண்டாலும் குஷிப்படுவது இயற்கை தானே.

தந்தையிடம் அன்பு செய்யும் பிள்ளையாகவே சம்பந்தர் இறைவனிடம் பக்தி செலுத்தினார். இதனால் இவர் பிள்ளையார் என்றே குறிப்பிடப்படுகிறார். பிஞ்சுக் கையினால் தாளம் போட்டால் கை வலிக்குமே என்று இறைவன் அவருக்கு தாளம் வாங்கிக் கொடுத்தார். நடந்தால் கால் வலிக்குமே என்று முத்துப்பல்லக்கு தந்தார்.

ஞானசம்பந்தர் பாடல்களில் வருந்தி நைந்து இதுவேண்டும் அதுவேண்டும் என்று கேட்பது எல்லாம் கிடையாது.

ஒரு செல்வந்தருடைய பிள்ளை எப்படி மிடுக்காக இருப்பானோ அந்த தோரணையே அவருடைய பாடல்களில் காணப்படுகிறது.

இறைவன் திருவருளை பெற்றதால் தன் பாட்டுகள் சிலவற்றில் "நமது ஆணை" என்று மிடுக்காக சம்பந்தர் பேசுகிறார்.

கடல்வரை ஓதம்மல்கு கழிகானல்
பானல்கமழ் காழி என்று கருதப்
படுபொருள் ஆறும் நாலும் உள

நாக வைத்தபதியான ஞானமுனிவன்
இடுபலறையொன்றை அத்தர் மியல்
மேலிருந்தின இசையாலுரைத்த பனுவல்
நடுவிருள் ஆடும் எந்தை நனிபள்ளி
உள்கவினை கெடுதல் ஆணை நமதே

ஆதிசங்கரர் தன் சௌந்தரிய லகரியில் 'திரவிட சிசு' என்கிற ஒரு வார்த்தையைக் குறிப்பிடுகிறார் இது ஞான சம்பந்தரைக் குறிப்பதாக சிலர் சொல்கின்றனர். அந்த சுலோகம்

தவ ஸ்தன்யம் மந்யே தாணிதர
கந்யே ஹிருதயத:
பய: பாராவார: பரிவஹதி
ஸாரஸ்வத மிவ
த்யாவத்யா தத்தம் திரவிட சிசு:
ஆஸ்வாத்ய தவயத்
கவீனும் ப்ரௌடானும் அஜநி
கமயநீய: கவயிதா |

(மலைமகளே உன் ஸ்தனங்களிலிருந்து பெருகிய பாலைக் கருணையோடு தரவும் அதைப் பருகிய திராவிட நாட்டுக் குழந்தை கவியரசர்களும் மகிழ்ந்து போற்றும் கவிதையினால் உன் இதயத்தினின்றும் பொங்கும் ஞானப் பாற்கடலோ என எண்ணுகிறேன்)

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய திருத்தொண்டத் தொகையில் சம்பந்தரை

வம்பரு வரிவண்டு மணம் நாற மலரும்
மதுமலர் நற்கொன்றையான்
அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன்
அடியார்க்கும் அடியேன்

என்கிறார். பெரிய புராணத்தில் திருஞான சம்பந்த மூர்த்தி புராணம் மிகப் பெரியது (1256 பாடல்கள்) இதனாலேயே ''பிள்ளை பாதி புராணம் பாதி'' என்று சொல்லப்பட்டது.

## "ஞானம்" விளக்கம்

இவர் பெயருடன் 'ஞானம்' இருப்பதால் அது பற்றியும் சிறிது தெரிந்துக் கொள்ள வேண்டும்.

ஞானம் என்பது உணர்வு, அறிவு என்ற பொருளை உணர்த்தும் ஞானத்தை நித்தியம் என்றும் அநித்தியம் என்றும் இருவகையாகச் சொல்வர், நித்திய ஞானம் என்பது பொய் அறிவு. புறப் பொருளை அறிவதே அறிவு உயிரின் அகப்பொருளை உணர்தல் உணர்வு.

சேக்கிழார் உணர்வும் அறிவும் வெவ்வேறு என்பதை "எப்பொருளும் ஆக்குவான் ஈசன்" என்ற பாடலின் மூலம் உணர்த்துகிறார்.

இந்த ஞானத்தை தமிழ் ஞானம் என்றும் சிவஞானம் என்றும் இரண்டும் வேறுவேறு போலக் கூறி வருவதைக் காண்கிறோம். இரண்டும் வெவ்வேறு அன்று. ஒன்றேயாகும். அன்பு வடிவான சிவமும் அன்பு மயமானத் தமிழும் ஒன்றே

உணர்வு என்பது உயிரால் உணரப்படுகிற உயிரின் அகப் பொருள் பற்றியது. அறிவு என்பது உள்ளத்தாலும் புலன்களாலும் கண்டும் கேட்டும் அறியப்படுகின்ற புறப்பொருள் பற்றியது. இந்த அகப்பொருள் புறப்பொருள் பகுப்பினை தமிழைத் தவிர வேறு எந்த மொழியிலும் காண இயலவில்லை.

சேக்கிழார் 'எப்பொருளும் ஆக்குவான் ஈசனே எனும் உணர்வும்' என்றார். எப்பொருளும் ஆக்குவான் ஈசன் என்பது புறத்தே அறியப்படுவதல்ல. அகத்தே உணரவல்லது எனவே அதை "உணர்வு" என்றார்.

இதனால் சம்பந்தர் தேவாரம் "ஞானப்பனுவல்" எனக் குறிக் கப்படுகிறது.

உணர்வைத் தான் ஞானம் என்கிறார்கள் நித்தியமான மெய் யுணர்வை மெய்ஞ்ஞானம் என்கிறார்கள் அநித்தியமான பொய் யறிவை யாரும் மெய்ஞ்ஞானம் என்பதில்லை. உணர்வு ஒரு சில ருக்கே வாய்க்கும். அறிவு பலருக்கு வாய்க்கும். உணர்வின் தொடர்பே "ஞானசம்பந்தம்" என்று கூறப்படுகிறது.

சம்பந்தம் என்றால் தொடர்பு என்று அர்த்தம். நித்திய உணர்வின் தொடர்பு ஒன்றையே நம் சான்றோர்கள் ஞான சம்பந்தம் என்று போற்றுகின்றனர்.

இந்த ஞானத்தைப் பெறுவது கடவுள் அருளால் தான் முடியும். இந்த சம்பந்தத்தை அளிப்பவனே உண்மையான தாயும் தந்தையுமாவான். இதனுல் தான் சம்பந்தர் சத்புத்திர மார்க்கத்தைக் கடைபிடித்தார்.

ஸ்வதேக நிர்மலே சைவ
    பாவயேத்தம் சிவாலயே
தமால யஸ்வமாத் மானம்
    சிவரூபம் விசிந்தயேத்
அந்தர்யாக: ப்ரகர்த்தவ்ய
    தஸ்மின் மதி நிர்மலே |

வாதூளாகமம்

அர்ச்சனை ஜபம் ஹோமம் முதலியவை தேகம் பஞ்ச சுத்தியால் நிர்மலமானபின் அதனை ஆலயமாகவும் ஆத்மாவை சிவலிங்கமாகவும் கருதி வழிபட வேண்டும்.

இதையே ருக் வேதம்

"தவஸ்ரீயை மருதோ மர்ஜயந்த ருத்ராயத்தே
ஜன்ம சாருத்ரம்"

என்கிறது. இதுவே சத்புத்ர மார்க்கம். கிரியை

இவர் 16 வயதிற்குள் பாடியது 16000 பதிகங்கள் இன்று நமக்கு கிடைத்திருப்பது 384 பதிகங்கள் தான். (பாடல்கள் 4181)

இவர் இறைவனை நாயகனுகவும் தன்னை நாயகியாகவும் கொண்டுப் பல பாடல்கள் பாடியுள்ளார். ஒவ்வொரு பதிகத்திலும் முதல் ஏழுபாடல்கள் ஏழு உலகங்களையும், 8, 9, 10 வது பாடல்கள் ராவணன், அரி அயன் சமணர் இவர்களைப் பாடியிருப்பது ஆணவம் கன்மம் மாயை இவைகளைக் குறிக்கும் என்றும் ஆன்றேர் கூறியுள்ளனர். இவர் திருச் செங்காட்டாங் குடியில் சிறுத்தொண்டரையும், திருச்சாத்த மங்கையில் திருநீல நக்கரையும் திருப்புகலூரில் திருமுருக நாயனுரையும் தன் பதிகங்களில் புகழ்ந்துப் பாடியிருக்கிருர். திருவால் வாய் பதிகத்தில் மங்கையர்கரசியையும் அமைச்சர் குலச்சிறையாரையும் ஒன்றை விட்டு ஒன்ருகப் பத்துப் பாடல்களில் சொல்லி 11 வது பாட்டில் இருவரையும் சேர்த்துப் பாடியிருக்கிருர்.

இவர் வாழ்வில் ஒரு விசேஷம் பிறந்தது திருவாதிரையில். ஞானப்பால் உண்டது ஒரு திருவாதிரையில். முக்தி பெற்றதும் திருவாதிரையில்.

# வாழ்க்கைச் சுருக்கம்

வேதநெறி தழைத்தோங்க
    மிகுசைவத் துறை விளங்கப்
பூத பரம்பரை பொலியப்
    புனிதவாய் மலர்ந் தழுத
சீதவள வயற் புகலித்
    திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக் கொண்டு
    திருத் தொண்டு பரவுவாம்.

வேதத்தின் வழி மங்காமல் வளர்ந்து ஓங்கவும் சைவத்துறை விளங்கவும் உயிர்க் கூட்டங்கள் வழிவழியே விளக்கம் பெறவும் தூயத் திருவாய் மலர்ந்து அமுத குளிர்ச்சியும் வளமுடைய வயல்கள் பரவிய சீர்காழியில் அவதரித்த திருஞான சம்பந்தப் பெருமானுடைய திருவடி மலர்களைத் தலைமேல் கொண்டு அப்பெருமான் செய்த திருத்தொண்டுகளைப் பாராட்டுவோம்.

சீர்காழியில் பிறந்த இவர் ஞானப்பாலுண்ட காரணத்தினால் பாலறுவாயர் என்றழைக்கப்பட்டு தந்தை சிவபாத ஹிருதயர் தோள் மீது அமர்ந்து ஏழாண்டுகள் வரை பல சிவத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டார்.

சீர்காழியைச் சேர்ந்த திருத்தாளமுடையார் கோவிலில் ஈசனை வழிபடும்போது சம்பந்தர் 'மடையில் வாளை' என்னும் பதிகத்தைக் கையினால் தாளம் போட்டுப் பாடவே ஈசன் அருள் சுரந்து பஞ்சாக்ஷரம் பொறித்த பொற்தாளங்களைக் கொடுத்து அருளினார்.

தக்க வயதில் இவருக்கு உபநயனம் நடைபெற்றது. திருமறைக்காட்டில் கோயிலின் பிரதான வாயில் அடைத்துக் கிடந்ததை நாவுக்கரசர் பதிகம் பாடி திறந்ததும் சம்பந்தர் 'சதுரம் மறைந்தான்' என்ற பதிகம் பாடி பழையபடி கதவை சாத்தியருளினார்.

மதுரையில் சம்பந்தர் பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்க்கவே; அது கண்ட சமணர்கள் கனல்வாதம் புனல்வாதம் செய்து படுதோல்வியுற்றனர்.

திருநீல கண்ட யாழ்ப்பாணர் இவருடன் சேர்ந்து கொண்டுத் தல யாத்திரை செய்தார். திருநெல்வாயிலில் இறைவன் முத்துச் சிவிகை முத்துக் குடை முதலியன கொடுத்து அருளினான்.

சென்னையில் மயிலாப்பூருக்கு வந்தார். அங்கு சிவநேசன் என்பவரின் புதல்வி பூம்பாவை பாம்பு கடித்து இறந்ததால் அவளை சம்பந்தருக்கே திருமணம் செய்து கொடுக்க எண்ணியிருந்த சிவநேசர் அவளுடைய சாம்பலைக் குடத்துள் வைத்து சம்பந்தரை வரவழைத்து விருத்தாந்தம் சொல்ல சம்பந்தர் மட்டிட்ட புன்னை என்னும் பதிகம் பாடி எலும்பை பெண்ணாக்கும் அதிசயத்தை நடத்தினர்.

பின்னர் சம்பந்தர் பல தலங்கள் சுற்றி சீர்காழி அடைந்ததும் மணம் செய்துக் கொள்ள அவர் பெற்றோர்கள் வற்புறுத்தவே அதற்கு இசைய நல்லூர் பெருமணத்தில் வாழும் நம்பாண்டாரின் மகளுக்கு தாலி கட்டினர். அக்னியை வலம் வரும்போது சிவபெருமானே அக்கினி என எண்ணி அடியார்களும் சுற்றமும் அந்த ஊர் ஆலயம் செல்ல சிவபெருமான் நீரும் மனைவியும் உன் உடன் வந்தாரும் ஜோதியில் புகுக. என்று ஆணையிட்டு சோதிவடிவாக நின்றார்.

சம்பந்தர் காதலாகி என்ற பதிகம்பாடி ஈனமாம் பிறவி தீர யாவரும் சோதியுட் புகுக என்றதும் அவ்வாறே எல்லோரும் சோதியுட் புகுந்து சிவபதமடைந்தனர்.

## சம்பந்தர் சம்பந்தப்பட்டத் தலங்கள்

### சீர்காழி

ஞானசம்பந்தர் பிறந்த ஸ்தலம் சீர்காழி. இங்குள்ள ஆலயத்தில் பிரும்ம புரீஸ்வரர் சந்நிதிக்கும் ஸ்திர சுந்தரி சந்நிதிக்கும் இடையே குமரக் கடவுளைப் போல ஞானசம்பந்தர் வீற்றிருக்கிறார் (இவருக்கு சுப்பிரமணியா அஷ்டோத்திரத்தைக் கொண்டே அர்ச்சனை செய்யப்படுகிறது) உத்ஸவ மூர்த்திதான். பால்வடியும் முகம் கொண்ட பாலகனாக நிற்கிறார். கையில் தாளங்கள் இல்லை.

சித்திரையில் ஞானப்பால் உத்ஸவம். ஏராளமான பேர் பால் கொண்டுவந்து நிவேதனம் செய்து ஞானப்பால் பெற்றுச் செல்வர்.

இத்தலம் குரு, லிங்கம் சங்கமம் என்ற மூன்று சிவத் திருமேனிகளையுடையது. இவர்கள் முறையே தோணியப்பர், பிரும்மபுரீஸ்வரர், சட்டநாதர் என்றழைக்கப்படுகின்றனர்.

சுவாமி கோவிலை யொட்டி ஒரு உயர்ந்த இடம் உள்ளது. இருபது புள்ளினங்கள் இதை தாங்கியுள்ளன. "நாலைந்து புள்ளினம் ஏந்தின" என அப்பர் குறிப்பிடுகிறார். பிரளய காலத்தில் இக்கட்டு மலை தோணிபோல மிதந்ததாம். பிரும்மாண்டமான உருவம் கொண்டவர் தோணியப்பர். அம்பிகை பெரிய நாயகி.

சட்டநாதர் இவர் பைரவர் அம்சம் ஆபத்துத் தோதாரணர் என்றழைக்கிறார்கள். தோணியப்பர் சுதையிலானவர். பலி பீடத்திற்கே நிவேதனம். சட்டநாதருக்கும் புனுகு சாத்தப்படு கிறது. தேங்காய் உடைப்பதில்லை.

ஞான சம்பந்தர் பிறந்த இல்லம் உள்ளது. ஆலயத்திலுள்ள கோயில் குளக்கரையில் தான் சம்பந்தர் ஞானப்பால் ஊட்டப் பெற்றார்.

திருக்கோலக்கா

சம்பந்தர் கையினால் தாளம் போட்டுப்பாடும் போது கை சிவந்து போயிற்று. இறைவன் பொற்தாளம் அருளினார். இதில் பஞ்சாக்ஷரம் பொறிக்கபட்டிருந்தது.

திருமறைக்காடு (வேதாரண்யம்)

இங்குள்ள ஆலயத்தின் பிரதான வாயில் அடைத்துக் கிடந் ததை நாவுக்கரசர் பதிகம் பாடித் திறந்ததும் அவருடன் சென்று இறைவனை வணங்கி வெளியே வந்ததும் சம்பந்தர் ''சதுரம் மறை தான்'' என்ற பாட்டைப்பாடி கதவை சாத்தினார். அகஸ்தியருக்கு திருமணக் கோலம் காட்டிய ஸ்தலம்.

மதுரை

சமணர்களுடன் அனல் வாதம் புனல் வாதம் செய்து அவர் களைத் தோற்கடித்து சைவத்தை நிலை நாட்டினார். அரசனின் வெப்பு நோயை ''மந்திரமாவது நீறு'' என்ற பதிகம்பாடி திருநீறு தடவி குணப்படுத்தினார்.

பட்டீஸ்வரம்

யாத்திரைக் களைப்பை சிறுவன் சம்பந்தம் தாங்கமாட்டாததால் இறைவனே முத்துப்பந்தல் பல்லக்கு கொடுத்தருளிய இடம்.

திருமயிலை

சிவநேசன் தன் மகள் பூமபாவையை சம்பந்தருக்கே திருமணம் செய்ய எண்ணியிருந்தார். அவள் பாம்பு கடித்து இறந்த தால் அவளுடைய அஸ்தியை ஒரு குடத்திற்குள் வைத்து சம்பந் தரை வரவழைத்து விவரங்கள் கூற அவர் ''மட்டிட்ட புன்னை'' எனும் பதிகம் பாடி எலும்பை பெண்ணாக்கினார்.

நல்லூர் பெருமணம் (ஆச்சாள்புரம்)

சம்பந்தருக்கு நல்லூர் பெருமணம் என்ற ஊரில் திருமணம் நடந்தது. அக்கினியை வலம் வரும்போது சிவபெருமானே அக்னியென எண்ணி அதில் திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் எல்லோருடனும் புகுந்தவர் 'காதலாகி கசிந்து' பதிகம் அப்போது பாடியதுதான்.

இங்குள்ள சம்பந்தர் மனைவியுடன் காணப்படுகிறார் அவள் பெயர் ஸ்தோத்திர பூரணி. கல்யாண சம்பந்தர் என்று இந்த சம்பந்தர் அழைக்கப்படுகிறார்.

இந்த ஆலயத் தீர்த்தத்தின் பெயர் பஞ்சாக்ஷரதீர்த்தம். அம்பி கையின் சன்னதியிலும் விபூதிபிரசாதமே வழங்கப்படுவது இங் குள்ள விசேஷம்.

## அப்பர் காட்டிய வழி

"என்று நீ அன்று நான் உன் அடிமை அல்லவோ?"

—தாயுமானவர்

"இறைவன் என்று உண்டோ அன்றே உயிர்களும் உண்டு. அன்று முதற் கொண்டே அவன் ஆண்டான். உயிர்கள் அடிமை. அவன் திருவருளைத் துணையாகக் கொண்டு அவனிடம் அன்பு பூண்டொழுகினல் அவனுடன் இரண்டறக் கலந்து பேரின்பம் அடையலாம்.

—சைவ சமயக் கொள்கை எஜமானன் அடிமை என்ற அடிப் படையில் பக்தி செலுத்துவது தாஸ மார்க்கம்

உயிர்கள் எல்லாம் அவனிடமிருந்தே வந்தவை. அவை மீண்டும் அவனையே அடைய உரிமையுடையவை.

இறைவனை ஆண்டானகக் கொண்டு தன்னை அடிமையாக பாவித்து வழிபட்டவர்-தாஸ மார்க்கம்.

இதை சரியை மார்க்கம் என்றும் கர்மயோகம் என்றும் சொல்வர். உழவாரசப்படை என்ற கருவியால் கோவில்களில் மண்டிக்கிடந்த புல்பூண்டுகளை அகற்றுவதை தன் முக்கியப் பணி யாகக் கொண்டவர்.

அடிமை பாவனை காரணமாக தம் குறை கூறல் தன்னை இழிவு படுத்திக் கூறல் இறைவன் கருணையை அளவு கடந்து புகழ்தல்.

இவர் தேவாரம் 4, 5, 6 திருமுறைகளாகும் இவர் ஆசுமதுசம் விஸ்தாரம் என்ற நால்வகைக் கவிகளே இயற்றியுள்ளார். இறைவனே 'அப்பர் என்னைபாடுவார்' என்கிருர். இவர்பாக்களில் இவர் பெயர் முத்திரை இல்லை. பாடியவை 49000 பாடல்கள். கிடைத்துள்ளது

313-யஜுர் வேத சாரம் இறைவன் ஆட்கொள்ள என்றுமே தயாராக இருக்கிறன். சிலருக்கு எளிதில் அருளிபுரிகிறன். சிலரை அழவைத்து சோதனைக் குள்ளாக்கி பின்னர் அருள்புரிகிறன்.

இப்படி இறைவனல் பல சோதனைகளுக்குள்ளாக்கப்பட்டு அருள் பெற்றவர் திருநாவுக்கரசர் என்ற அப்பர் பெருமான். எக்கஷ்டத்திலும் இறைவனை மறவாதவர். மண்ணுசை, பெண்ணுசை பொன்னுசை ஆகிய சகலவித ஆசைகளையும் முற்றிலும் துறந்த துறவி இவர்.

மனிதப் பிறவி எடுத்தால்தான் இறைவனுக்கு அடிமையாகத் தொண்டாற்ற முடியும். இறைவன் நினைவு நிலைத்திருக்குமானல் மனிதப் பிறவி இம்மாநிலத்தே மீண்டும் மீண்டும் எடுக்க வேண்டும். என்கிறர் அப்பர். மனிதப்பிறவி என்ன? புழுவாய் பிறக்கினும் புண்ணியா உன் நினைவு மறக்காமல் இருக்கவே வேண்டும்'' என்கிறர்.

இதையே நாஸமார்க்கம் என்பர் தாஸ பாவம் பற்றி சொல்லும் போது லக்ஷ்மணனைப்பற்றி இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

கிஷ்கிந்தையில் அனுமான் லக்ஷ்மணனைப்பார்த்து ''நீங்கள் ராமருக்கு என்ன உறவு?'' என்று கேட்கிறர்.

லக்ஷ்மணன் ''அஹமஸ்ய அவரோ ப்ராதா குணை : தாஸ்யம் உபாகத : '' என்று பதிலளிக்கிறன்.

(ராமர் என்னைப் பின்பிறந்தவர் என்பார். நான் அம்முறையை விட அவருடைய திருக்கல்யாண குணங்களுக்குத் தோற்று தாஸனுமாய், என்னை விற்கவும் வாங்கவும் கொள்ளத் தகுதியுடையவனுய் சுபாவத்தாலும் குணத்தாலும் அவருக்கு தாஸனுவேன்)

இப்படி ஜீவாத்மாவின் ஸ்வரூபம் பகவானுக்கு உகந்த கைங்கர்யம் செய்யும் நிலையே என்பதை லக்ஷ்மணரிடம் காணலாம்.

ஜீவாத்மாக்கள் பரமாத்மாவிற்கு தொண்டு செய்வதையே (தாஸ்யத்தையே) விரதமாகக் கொண்டவர்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

தாஸாபூத : ஸ்வஸர்வேஹி
ஆத்மாந : பரமாத்மந:

என்றபடி. இந்த தாஸ்யம் ஸர்வதேச, ஸர்வகால, ஸர்வாவஸ்தை யிலும் ஜீவாத்மாக்களின் ஸ்வரூபமாகும்.

ஆத்மாரா மோத்பவை: புஷ்பைஸ
ஸமாதாய சிவஸ்யது
மாலா க்ரதயித்வாத் யோதத்யாத்
பரமேஷ்டிநே
ய: குர்யாத்து மகேசாய
புஷ்பா ராம க்ரியா விதிம்
ஸ்தோத்ர காநுதிகம் ஸர்வம் ய:
குர்யாத்தாஸ மார்க்கம் |

தன் நந்தவனத்திலுண்டான புஷ்பங்களால் பூமாலைகள் தொடுத்தும் துதிப் பாடல்களால் தோத்தரிப்பதும் சரியை என்ற தாஸ மார்க்கம் என்கிறது சிவாகமம் இதனை அனுஷ்டித்தவர் திருநாவுக்கரசர். அவர்

நிலை பெருமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்
புக்குப் புலர்வதன் முன்
அலகிட்டு மெழுகிட்டு பூமாலை
புனைந்தேத்தி புகழ்ந்து பாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி
சங்கரா ஜயபோற்றி, போற்றியென்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையம்
மாதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலரா
நில்லே.

என்று பாடி பரவசமடைகிறார். இதுவே சரியை.

ஆலயங்களில் அடியார்கள் காலில் கல்லும் முள்ளும் குத்தாமல் இருக்க அவைகளைத் தன் உழவாரப்படையினால் அகற்றும் உடல் உழைப்புப் பணியை மேற்கொண்டவர் அப்பர்.

தெய்வீக அறிவை நிதரிசனமாகப் பெற்ற ஒருவரின் வாழ்க்கைக்கு அப்பரின் வாழ்க்கையை உதாரணமாகக் கூறலாம். இவர் பாடல்கள் ஒவ்வொன்றும் உள்ளத்தை உருக்கக் கூடியவை. ஆத்மானந்த அனுபவத்தின் பலனாக எழுந்தவை அவை.

மனிதப் பிறவியின் மதிப்பை உணருவதுடன் அப்பிறவியில் இறைவனை எண்ணி வழிபடும் வாய்ப்பையும் கைவிட்டுவிடக்

கூடாது என்கிறர் அவர். எப்பேர்ப்பட்ட வாழ்க்கைப் புயலையும் அவருடைய தெய்வ நம்பிக்கை சமாளித்திருக்கிறது.

நாவார இறைவனைப் பாடியதால் இவர் நாவுக்கரசரானர். இவர் பாடல்கள் மாந்தர்களுக்கு உறுதி பயக்கும் சொற்களால் அமைந்தவை என்பதால் "சொற்குறுதி அப்பர் எனச் சொல்" என்று சிறப்பித்துச் சொல்வர்.

இவர் மனித சமூகத்தைப் பார்த்து அழைக்கிறர்.

"இங்கே வாருங்கள் உங்களுக்கு ஒரு கனிதருகிறேன். அருமையான கனி கிடைத்தற்கரியது. இறைவனுடைய திருவடியே அக்கனி. உங்களுக்கு வேண்டுமா?

மனிதர்காள்! இங்கே வம்மின் ஒன்று சொல்லுகேன்
கனி தந்தால் கனி உண்ணவும் வல்லீரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏற்றவர்கட்கே

இக்கனிதான் காரைக்காலம்மையாரைக் கடைத்தேற வைக்கிறது. இக்கனியின் இயல்பைப் பட்டினத்தடிகள்.

அறுசுவை அதனினும் உறு சுவை உடைத்தாய்
காணினும் கேட்பினும் கருதினும் கனிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி

என்கிறர்.

திருமூலர் தன் திருமந்திரத்தில் ஒன்று கண்டேன் இவ்வுலகிற்கு ஒரு கனி நன்று கண்டாயது நமசிவாயக்கனியென்று கண்டாலது மெத்தெனறிருக்கும் தின்று கண்டாலது தித்திக்கும் தானே!

பொன்னும் மணியும் விலையுயர்ந்தப் பொருளாக இருக்கலாம். ஆனல் அப்பர் போன்ற மகான்களுக்கு "அழகியப் பெண்கள் உதடும் ஓட்டாஞ்சல்லியும் ஒன்றே" தான்.

திருப்புகலூரில் இவர் தன் உழவாரக் கருவியால் ஆலயத்தில் புல்பூண்டுகளைச் செதுக்கிக் கொண்டிருந்தார். இறைவன் அங்கு பொன்னும் மணியும் கிடைக்கச் செய்தார். ஆனல் அப்பர் தன் உழவாரப் படையினுல் அவைகளை எடுத்துக் குளத்தில் விசிறர்.

செம்பொன்னும் நவமணியும்
சேண்விளங்க ஆங்கவையும்
உம்பர்பிரான் திருமுன்றில்
உருள் பருக்கையுடன் ஒக்க
எம்பெருமான் வாகீசர்
வடிவாரத்தில் ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல
வாவியினில் எறிந்தார்.

பொன்னும் பெண்ணும் பெரும் துன்பம் தரும். எல்லாவற்றையும் இழப்பதுடன் தன்னையும் இழக்கும் நிலைக்கு அவை கொண்டுவிடும். சைவ சமயத்திலிருந்து சமண மதத்திற்கு மாறிய இவரை இறைவன் தடுத்தாட் கொண்டு மீண்டும் சைவத்திற்குவர சூலை நோயை உண்டு பண்ணினர். மதம் மாறினரேயொழிய இறைவன் மீதுள்ள அந்த நினைவு மட்டும் எப்போதும் மாருதிருந்தவர். இவர் 'கூற்ருயினவாறு' என்ற பாடலைப்பாடி நோயினின்றும் நீங்கி இறைவன் அருள் பெற்ருர்.

பொன்னை சேமித்து வைத்து வாழ்க்கையிலுள்ள லௌகீகக் கஷ்டங்களை தீர்த்துக் கொள்பவன் போல் இறைவனின் பொற்கழலை தன் இருதயப் பெட்டிக்குள் வைத்துக் குறை தீர்ந்தவர் இவர். இப்படி பொற்கழலைப் பெறுமுன் தான் எப்படி இருந்தேன் என் பதையும் கூறுகிருர்.

இறைவனுடையக் கழல்களைத் தொழுதார். இது உடம்பினுல் செய்த செயல். பிறகு போற்றிப் பரவினுர். இது வாயால் செய்த செயல். பின்னும் முயன்று இறைவன் திருவடிகளை தன் உள்ளத்துள் வைத்துக் கொண்டார். அவருடைய எல்லாக் குறைகளும் தீர்ந்து விட்டது. இதை அவர்

பூங்கழல் தொழுதும் பரவியும்
புண்ணியா புனிதா உன் பொற்கழல்
ஈங்கிருக்கப் பெற்றேன்
என்ன குறையுடையேன்
ஓங்கு தெங்கு இலையார் கமுகு
இளவாழை மாவோடு மாதுளம்பல
தீங்கனி சிதறும் திருவாரூர் அம்மானே

என்கிருர்.

அண்ணல் கழல் உள்ள திருவாரூர் இயற்கை வளம் பெற்று நிறைவு பெறுகிறது. அதுபோல அக்கழல் உள்ள இவரும் நிறைவு பெறுகிருர்.

இவருக்குப் பல பெயர்கள். மருள் நீக்கியார் பிள்ளைத் திருநாமம். திருநாவுக்கரசர் என்பது இறைவன் கொடுத்த பெயர். அப்பர் சம்பந்தர் அழைத்த பெயர். வாகீசர், ஞான அரசு, சொல்வேந்தர், சொற்கோ, தாண்டகவேந்தர், ஆளுடை அரசர் முதலிய பெயர்களும் உண்டு.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தன் திருத்தொண்டத் தொகையில்

திருநின்ற செம்மையே
செம்மையாகக் கொண்ட
திருநாவுக்கரச அடியார்க்கும்
அடியேன் என்கிறார்.

அப்பர் வரலாறு எழுதப் புகுந்த சேக்கிழார்.

திருநாவுக்கரசு வளர்திருத்
  தொண்டினடி வாழ
வருஞானத் தவமுனிவர்
  வாகீசர் வாய்மைத் திகழ்
பெருநாமச் சீர்பரவலுறு கின்றேன்
  பேருலகில்
ஒரு நாவுக்குரை செய்ய
  வொண்ணுமை யுணராதேன்

என்கிறார்.

## அஞ்சாத வீரர்

இவர் அஞ்சா நெஞ்சமுடைய வீரர். அசைக்க முடியாத மன உறுதியுடையவர். "ஆற்றேனடியேன்" "அஞ்சலுமென்னீர்" என்று முதலில் அச்சத்துடன் பாடினார். பின் அரசன் வர உத்தர விட்டபோது "நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்று பாடினார். "என்று நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்" "அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை" "வானம் துளங்கிலென், விரிசுடர் வீழிலென்" என்று பாடுகிறார். பாரதியாரும் இதையே "உச்சி மீது வான் இடிந்து வீழினும் அச்சமில்லை அச்சமில்லை அச்ச மென்பதில்லையே" என்று பாடினார்.

## முதல் சத்தியாக்கிரகி

பழையாறை என்னும் ஊரில் சமணர்களால் சிவலிங்கம் மறைக்கப்பட்டபோது அப்பெருமானைக் கண்டாலல்லது உணவருந்துவதில்லை என்று சபதம் கொண்டு அதில் வெற்றியும் கண்டார். உண்ணாவிரதம் இருந்த முதல் சத்தியாக்கிரஹி இவரே.

நீற்றறையில் அடைக்கப்பட்டபோது பாடிய பாசுரத்தில் மாசில் வீணை (காதில் இனிமையையும்) மாலை மதியம் (கண்ணுக்கினிமையையும்) வீசுதென்றல் (மூக்கிற் இனிமையையும்) வீங்கிள வேனில் (வாய்க்கு இனிமையையும்) மூசுவண்டறைப்பொய்கை (உடலுக்கு இனிமையையும்) இவ்வைம்புல நுகர்ச்சிஅத்தனையும் ஈசன் எந்தை இணையடி நிழலில் காணலாம் என்கிறார்.

நான் ஒரு மனிதனுக்கு அடிமையில்லை ஆனால் சிவபெருமானுக்கே அடிமை என்கிறார் பின் கண்ட பாடலில்

நாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம் மலர் சேவடியிணையே குறுகினோமே.

துன்பம் இன்றி வாழ அப்பர் வழி சொல்கிறார்.

"இறைவனை எப்போதும் ஸ்துதி செய்யுங்கள். அவர் ஸ்தோத்திரப்பிரியர். புகழ்ச்சியை விரும்புபவர். என் கண்ணே, மணியே என்று வாழ்த்தி உள்ள முருகிப் போற்றுங்கள்.

"துன்பமின்றி துயரின்றி என்றும் நீர் இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்".

இறைவனின் ஒருகால் கட்டைவிரல் அழுத்தத்தை ராவணனால் தாங்க முடியவில்லை. நான் அவன் திருவடிகளையே தாங்கி நிற்கிறேனே! அவன் வல்லவனா அல்லது நான் வல்லவனா? என்று கேட்கிறார் அப்பர்

பெருவிரல் இறை தான் ஊன்ற
    பிறையெயிறிலங்க அங்காந்து
அருவரை யனைய தோளான்
    அரக்கன் அன்று அலறி வீழ்ந்தான்
இருவரும் ஒருவனுப்
    உருவ மங்குடைய வள்ளல்
திருவடி சுமந்துக் கொண்டு
    காண்க நான் திரியுமாறே

## திருவடி தீக்ஷை

இறைவன் திருவடி தீக்ஷை உங்களுக்கு எப்படி கிடைத்தது? என்ற கேள்விக்குப் பதில் சொல்வதுபோல நாவுக்கரசர் சொல்கிறார்.

"சிவன் திருவடியை அடைவதே சிவநெறியின் குறிக்கோள். அத்திருவடி தலைமேல் சூட்டப்படுவதே திருவடி தீக்ஷை. சிவன்

திருவடியே இன்பவீடு. திருச்சத்தி முத்தம் என்ற இறைவி சிவனைப் பூஜிக்கும் கோவிலுக்குச் சென்று "நீ திருவடியை என் தலையில் சூட்டா விட்டால் உயிர் விடுவேன். மூவா முழுப்பழிமூளும் கண்டாய்" என்று குறிப்பிட்டேன். அங்கு திருவடியை அளித் தால் இறைவியின் பூஜை தடைபடும் எனக் கருதி என்னை "நல்லூ ருக்கு வா" என்ற அழைத்தான் அங்கு போன போது எனக்கு தீக்ஷை அளித்தான்.

இருமாந்திருந்தேன் கொலோ—ஈசன்
பல் கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்தி தன் சேவடி கீழ்ச்சென்று
இருமாந்திருப்பன் கொலோ

என்கிறார்.

உலகியலில் இறுமாப்பு மிகப் பொல்லாதது. ஆனால் சமய வாழ்க்கையில் ஜீவன் முக்தர்கள் கொள்கின்ற இறுமாப்பு கெடுதல் இல்லாதது. சிவானந்த மேலிட்டால் இயல்பாகவே ஏற்படுவது. அதைவிட இவ்வுயிர் அடையக் கூடிய பேறு யாது?

நாயகி நாயக பாவ (அகப் பொருள்) பாடல்களையும் இவர் பாடியுள்ளார். திருப்பழனத் தேவாரத்தில் குயில்விடு தூதாகவும், திருமருகல் தேவாரத்தில் கிளிவிடு தூதாகவும் பாடுகிறார். தலைவ னின் பிரிவாற்றாமையை வனபவள வாய் திறந்து என்ற திருக்கழிப் பாலைப் பதிகத்திலும் தலைவி தலைவனை அடைதலை 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற பாட்டிலும் கூறியுள்ளார்.

ஒவ்வொரு பதிகத்தின் கடைசிப் பாட்டிலும் ராவணனைப் பற்றிக் கூறுகிறார். ஆணவத்தால் செய்த குற்றத்தை உணர்ந்தால் இறைவன் தண்டித்துப்பின் மன்னிப்பார் என்பதை முதல் பதிகத் தின் இறுதிச் செய்யுளில் "ஆர்த்தான் அரக்கன் தன் மால்வரைக் கீழ் அடர்த்திட்டருள் செய்த அது கருதாய்" என்று கூறியிருப்ப தால் அறியலாம்.

நீற்றறையிலிட்டபோது பாடிய பாசுரத்தில் மாசில் வீணை— காதுக்கு இனிமையையும், மாலை மதியம் (காதுக்கு இனிமையையும்) வீசு தென்றல்—மூக்கிற்கினிமையையும், வீங்கிளவேனில் — வாயிற் கினிமையையும் — மூசு வண்டறைப் பொய்கை — மெய்க்கினிமை யையும் இந்த ஐம்புல நுகர்ச்சி அத்தனையையும் 'ஈசன் எந்தை இணையடி நிழலில் காணலா' என்கிறார்.

திருமுறைகளில் 4,5-6 நாவுக்கரசர் தேவாரங்கள்.

## வாழ்க்கைச் சுருக்கம்

திருவாய்மூரில் (தென்னுற்காடு மாவட்டம்) பிறந்த அப்பருக்கு திலகவதி என்ற தமக்கை இருந்தார். இவருக்குத் திருமணம் முடிக்க விருந்த கலிப்பகையார் மணமாகுமுன்பே போரில் மாண்டார். திலகவதி வேறு யாரையும் மணக்க இஷ்டமில்லாமல் இளமையிலேயே விதவைக்கோலம் பூண்டாள். தன் தம்பியை வளர்க்கவேண்டும் என்பதற்காக அவர் தன் உயிரை மாய்த்துக் கொள்ளவில்லை!

அப்பர் உண்மையை நாடுவதில் மிகவும் ஈடுபட்டவர். அக் காலத்தில் ஜைன மதம் மக்களிடையே பரவியிருந்ததுடன் அரச னின் ஆதரவையும் பெற்றிருந்தது. இந்த ஜைனமதம் அப்பரையும் வசீகரித்தது. சைவ மதத்தைத் துறந்து ஜைன (சமண) மதத் தைக் தழுவினுர். சீக்கிரமே அம்மதத்தின் ஆசார்யர்களுக்கெல் லாம் தலைவராகி தருமசேனர் என்ற பெயரையும் பெற்ருர். தம்பியின் மதமாற்றம் திலகவதியாருக்கு ஆருத்துயரை அளித்தது. மனம் வெறுத்த நிலையில் அவர் அருகிலுள்ள கோவிலில் பணியாற்றிய இறைவனிடம் தன் தம்பியின் தவறைப் பொறுத்து அவனை எப்படி யாவது மீண்டும் சைவ மதத்தில் ஈடுபடச் செய்ய வேண்டும் என தினமும் பிரார்த்தித்து வந்தார்.

இவர் இஷ்டத்தைப் பூர்த்தி செய்ய இறைவன் திருவுள்ளம் கொண்டு ஒரு புது நிலையை ஏற்படுத்தினுர். அப்பருக்கு பொறுக்க முடியாத வயிற்று வலி கண்டது. சமணர்கள் இதைக் குணப்படுத்த எடுத்த சகல முயற்சிகளும் பயனளிக்கவில்லை. இதன்பின் தான் தான் படும் கஷ்டத்தைப்பற்றித் தன் தமக்கைக்கு சொல்லி அனுப்பினுர். தன்னிடமே வந்து விடும்படி திலகவதியார் சொல்லி அனுப்ப அவரும் அவ்விடம் போய்ச் சேர்ந்தார். திருநீற்றை திலகவதியார் தன் தம்பியின் வயிற்றில் இறைவனை மனதில் தியா னித்துக் கொண்டு பூசினுர். ஆலயத்திற்கு அவரை அழைத்துச் சென்ற போது தன் பிழையைப் பொருத்தருளும்படியும் கொடிய நோயிலிருந்து தன்னை விடுவிக்கும்படியும் இறைவனிடம் முறை யிட்டு மனமுருகப் பிரார்த்தித்தார் அப்பர். வயிற்றுவலி இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது. கவிதையைப் பாடும் சக்தி அப்பருக்கு ஏற்பட்டது. அன்று முதற் கொண்டு பல இடங்களி லுள்ள ஆலயங்களுக்குச் செல்வது இறைவனை மனமுருகப் பாடுவது என்ற காரியத்திலேயே அப்பர் ஈடுபட்டார்.

அப்பர் மீண்டும் சைவசமயத்தில் சேர்ந்துவிட்டது குறித்து ஜைன (சமண)ர்களுக்கு பெரும் ஏமாற்றமாகி விட்டது. அவர்

களுடைய செல்வாக்குக்கு இது பெருத்த இடிபோல் இருந்தது. ஆகவே அவர்கள் மன்னனிடம் போய் அப்பர் நோய் இல்லாத போதே நோய் இருப்பதாகப் பாசாங்கு செய்தார் என்றும் அதனால் தான் அந்நோயை அவர்களால் குணப்படுத்த முடியவில்லை என்றும் ஆகவே மன்னர் அவரை வரவழைத்துத் தண்டிக்கவேண்டும் என்றும் கூறினார்கள். மன்னரின் ஆட்கள் அப்பரிடம் சென்று மன்னனின் கட்டளையைத் தெரிவித்து அழைத்தபோது இறைவனைத்தவிர வேறு யாரையும் பெரியவனாக ஒப்புக்கொள்ளமுடியாது என்று தெரிவித்து உடன் வர மறுத்து விட்டார். தான் யாருக்கும் கட்டுப்பட்டவரில்லை என்றும், மரணத்தைக் கண்டு தான் அஞ்சவில்லை என்றும் நரகத்திற்குச் செல்லும் ஆபத்து தனக்கில்லை என்றும் உலகில் போலிவாழ்க்கையை தான் நடத்தவில்லை என்றும் யாரும் தனக்கு தீங்கிழைக்க முடியாதென்றும் யாருக்கும் அடிமையில்லை என்றும் எவ்வித நோயும் தன்னை அண்டமுடியாதென்றும் ஏனென்றால் இறைவனின் இணையடி நிழலில் தான் ஒதுங்கியவன் என்று அவர் ஒரு செய்யுள் மூலம் குறிப்பிட்டார்.

மன்னருடைய ஆட்கள், அரசரின் ஆணைப்படி உங்களைப் அழைத்துப் போகாவிட்டால் தாங்கள் அல்லுற வேண்டியிருக்கும் என்று முறையிடவே அப்பர் அவர்களுடன் செல்ல உடன்பட்டார். சமணர்கள் தூண்டுதலின் பேரில் அப்பர் கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டார். அவைகள் பிரகலாதன் பட்ட கஷ்டங்களை நமக்கு நினைவுப்படுத்துகின்றன. அப்பரை சுண்ணாம்புக் கால்வாயில் பல நாட்கள் அடைத்து வைத்திருந்தனர். அறையைத் திறந்து அவர் மாண்டிருப்பார் என்று எதிர்பார்த்த போது அவர் உயிருடன் எவ்வித மனக்கலக்கமுமின்றி அமைதியாகக் காணப்பட்டார். அவர் இறைவன் அடிகளை நினைத்த வண்ணமே அதில் இருந்தார்.

அப்பர் இன்னும் உயிருடன் இருப்பதைக் கண்ட மன்னனின் ஆட்கள், அவரிடம் விஷத்தைக் கொடுத்துக் குடிக்க சொன்னார்கள். உலகத்தை அழிவிலிருந்துக் காப்பாற்றுவதற்காக ஆலகால விஷத்தை சிவபெருமான் உட்கொண்டார் என்று புராணங்கள் கூறுகின்றன. இத்தகைய கருணையைக் காட்டும் சம்பவத்தை அவருடைய நீல கண்டம் என்றும் நினைவு படுத்திக் கொண்டிருக்கிறது. அப்பேர்பட்ட இறைவனின் அடியார்கள், விஷத்தை அருந்தினால் அவ்விஷம் அவர்களை என்ன செய்ய முடியும்? அப்பர் மீது மதம் கொண்ட யானையை அரசனின் ஆட்கள் ஏவினர். அச்சமயம் அப்பர் ஐம்புலன்கள் என்கிற ஐந்து யானைகளை இறைவனின் பெயரைச் சொன்னாலே அடக்க முடியுமே அப்பேர்பட்ட இறைவனும் விநாயகரின் தகப்பனருமான சிவபெருமானின்

அடிமையாயிற்றே நான். என்னை இந்த ஒரு யானை என்ன செய்ய முடியும்? என்று பொருள் படப் பாடினார் "அஞ்சுவதாவதுமில்லை அஞ்சப்படுவதுமில்லை" என்பது இச்செய்யுளின் உட்கருத்து. இந்த செய்யுளைக் கேட்டதும் யானை அப்பரை வலம் வந்து தன்னை யார் ஏவிவிட்டார்களோ அவர்கள் மீதே பாய்ந்தது.

அப்பரை ஒழித்துக்கட்ட இத்தகைய எல்லா முயற்சிகளும் தோல்வியுறவே அவரை ஒரு பெரிய பாராங்கல்லுடன் கயிற்றினால் பிணைத்து நடுக்கடலில் கொண்டுபோய் போட்டுவிட்டு வந்து விட்டனர் அரசனின் ஆட்கள். சம்சார சாகரத்தில் காக்கும் இறைவன் நாமத்தை அப்பர் சொன்னவுடனேயே அப்பாராங்கல் தெப்பமாகிவிட்டது. அந்த அதிசயத் தெப்பம் மிதந்து வந்து திருப்பாதிரிபுலியூருக்கு அடுத்த கடற்கரையில் அவரைச் சேர்த்துவிட்டது. அவருக்கு இடப்பட்ட தொல்லைகள் எல்லாம் ஒருவாறு முடிவுற்றன. ஒவ்வொரு புனித தலங்களுக்கும் சென்று இறைவனை வழிபடும் பணியை அப்பர் தொடர்ந்து மேற்கொண்டார். மன்னர் மகேந்திரவர்ம பல்லவனுக்கு அப்பரின் பெருமை இப்போதுதான் தெரிய வந்தது. அவனே அவரிடம் வந்து, தான் இழைத்தக் கொடுமைகளுக்காக தன்னை மன்னித்தருளுவேண்டும் என்றும் தன்னையும் சைவமதத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டான். அப்பரும் உடனே அவனை மன்னித்து அவனை சைவனாக்கினார்.

அப்பர் உழவாரப்படை என்ற கருவியைக் கொண்டு ஆலயப் பிராகாரங்களிலுள்ள புல், பூண்டு, கற்கள் இவைகளை அகற்றுவது, இறைவனைப் பாடுவது இம்மாதிரி காலத்தைக் கழித்து வந்தார்.

பின்னர் பல தலங்களைத் தரிசித்தபின் அப்பர் காளஹஸ்தி வந்து சேர்ந்தார். தென்கைலாயம் என்று வழங்கப்படும் இத்தலம் கண்ணப்பநாயனாருடன் நெருங்கியத் தொடர்பையுடையது. இங்கு வந்ததின் பலனாக அப்பருக்கு கைலாசத்திற்கே செல்ல வேண்டும் என்ற அவா எழுந்தது. அப்பரின் உடம்பு மிகவும் தள்ளாமை காரணமாக இக்கஷ்டமான பிரயாணத்தை மேற்கொள்ள முடிய வில்லை. உடல்தான் தளர்ச்சியடைந்ததே தவிர ஊக்கம் அவரை உந்தித் தள்ளியது. எப்படியும் கைலாசத்தைக் காணவேண்டும் என்றே அவர் பிரயாணத்தைத் தொடர்ந்தார். இனிமேல் ஒரு அடிக்கூட நகரமுடியாது என்ற அளவுக்கு அவர் உடல் நிலைமை மோசமாகியது. இறைவன் ஒரு துறவி வேடத்தில் அவர்முன் தோன்றி இம் முயற்சியைக் கைவிட வேண்டும் என்றுக் கேட்டுக் கொண்டார். கைலாசத்தைக் காணாமல் திரும்பப்போவதில்லை

என்று அப்பர் உறுதியாகக் கூறிவிட்டார். இந்தத் தளரா உறுதியைக் கண்டு இறைவன் மறைந்து, உடனே அசரீரியாக 'அப்பரே எழுந்திருங்கள்' என்றார். நல்ல திடமான உடல் வலிவு அப்பருக்கு ஏற்பட்டுவிட்டது. 'அருகிலுள்ள குளத்தில் மூழ்கி எழுந்தால் திருவையாறு பதியில் இருக்கலாம் என்றும் அங்கு கைலாயத்திலுள்ளது போலவே தன் தரிசனம் கிடைக்கும் என்றும் அசரீரி சொல்லிற்று. அதன் படியே அருகிலுள்ள குளத்தில் மூழ்கி எழுந்ததும் அப்பர், தான் திருவையாற்றில் இருக்கக் கண்டார். கைலாயத்தில் இறைவன் தன் தேவியுடன் வீற்றிருக்கிறான் திருவையாற்றில் அப்பர் கண்ட காட்சி என்ன? எந்த ஜீவராசியும் தன் வாழ்க்கைத் துணையுடன் இருக்கக் கண்டார். சிறிது நேரம் கழித்து இக்காட்சி மறைந்தது. எல்லா உயிரினங்களுக்குமுள்ள தெய்வீகத் தன்மை இது என்பதை அப்பர் உணர்ந்தார். ஒவ்வொரு ஜீவனும் அதன் வாழ்க்கைத் துணையுடன் காணப்பட்டது, சிவமும் சக்தியுமாகவே அடியாரின் கண்ணுக்குப் புலப்பட்டது. கைலாசத்தின் உண்மைத் தத்துவம். சிவசக்தி ஐக்ய ரூபமே என்பதை கடவுள் கருணையால் அப்பர் உணர்ந்தார்.

அப்பர் திருப்பூந்துருத்தியில் தங்கியிருந்த போது சம்பந்தர் மதுரையில் சைவ மதத்தை நிலைநாட்டிவிட்டு அங்கு வந்து சேர்ந்தார். யாரும் அறியாமல் அப்பரும் பல்லக்கு தூக்கிகளுடன் சம்பந்தர் பல்லக்கைச் சுமந்து வந்தார். இதை அறிந்த சம்பந்தர் அப்பரின் அன்பையும் அடக்கத்தையும் கண்டு உருகியே விட்டார். மதுரையில் சைவ மதம் நிலைநாட்டப்பட்டதைக் குறித்து அப்பர் மட்டில்லா மகிழ்ச்சியடைந்தார். பின்னர் பல இடங்களுக்குச் சென்றுவிட்டு அப்பர் திருப்புகலூர் வந்து சேர்ந்தார். இங்கு இறைவனடியைச் சேர்ந்தார்.

## திருநாவுக்கரசர் சம்பந்தப்பட்ட தலங்கள்

### திருவாய்மூர்

திருநாவுக்கரசர் பிறந்த இடமான திருவாய்மூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருவதிகைக்கு 15 மைல் தூரத்தில் உள்ள ஸ்தலம். இங்குள்ள சிவன் கோவிலில் அப்பருக்குத் தனி சந்நிதி இருக்கிறதென்றால் அவர் பிறந்த வீட்டை ஒரு ஆலயமாக்கி அங்கு அவருக்கு சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது அங்கு அவர் நின்ற கோலத்தில் உழவாரப்படையை இடது தோளில் சாத்திக் கொண்டு கருணையே உருவாகக் காட்சியளிக்கிறார்.

தஞ்சை மாவட்டத்தில் திருமறைக்காடுக்கு அருகில் ஒரு திருவாய்மூர் உள்ளது. இதுவும் நாவுக்கரசருடன் சம்பந்தபட்ட

ஸ்தலமே. பகவான் அப்பர் கனவில் தோன்றி "வாய்மூரில் இருபோம். அங்கு வா" என்று பணிக்கிறார் சம்பந்தருடன் அப்பர் இங்கு வந்து இறைவனை தரிசிக்கிறார். இதை பாடும் தமிழ் மாலைகள் கொண்டு,

பாடும் தமிழ் மாலைகள் கொண்டு
பரமர் தாமும் எழுந்தருள
நீடுந்திருவாய்மூரடைந்து நிலவுங் கோயில்
வலஞ்செய்து
சூடும் பிறையார் பெரும் தொண்டர்
தொழுது போற்றித் துதி செய்து
நாடுங்காதல் வளர்ந்தோங்க
நயந்தந்த கரினுடனுறைந்தார்

என்று பெரிய புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

(நாகப்பட்டினம்—திருத்துரைப் பூண்டி பஸ் மார்க்கத்தில் சீராவட்டம் பாலம் என்ற இடத்திலிருந்து ஒரு மைலில் இத்தலம் இருக்கிறது.

பங்குனி 12, 13 தேதிகளில் சூரிய பகவான் கிரணங்கள் இறைவன் மீது விழுகிறது.

வேதாரண்ய ஈசன் ஒரு தொண்டு கிழவராக சம்பந்தரையும் அப்பரையும் இங்கே வழிகாட்டி அழைத்து வந்தாராம் அக்கிழவர் மறைந்து இங்கேயே கோயில் கொண்டுவிட்டார். இந்த ஆலயத்தில் இந்த வேதாரண்யேஸ்வரருக்கு ஒரு சந்நிதி இருக்கிறது.

இங்குள்ள தக்ஷிணாமூர்த்தி ஒரு காலை ரிஷபத்தின் மீது ஊன்றி இருப்பது அபூர்வ திருக்கோலமாகும்.

திருவதிகை

நாவுக்கரசரை வாழ்வித்த இடம். இறைவன் அருளால் சூலை நோய் குணமாகிய இடம் இங்கு நாவுக்கரசர் சிலா விக்கிரகம் உட்கார்ந்த நிலையில் உள்ளது. உத்ஸவ விக்கிரகம் நின்ற நிலையில் உள்ளது. (திருப்பாதிரிபுலியூரில் உத்ஸவ விக்கிரகம் உட்கார்ந்த நிலையில் இருக்கிறது) அப்பர் சந்நிதிக்குப் பக்கத்திலேயே திலகவதியாரும் ஒரு தனி கோயிலில் இருக்கிறார்.

இங்குள்ள இறைவன் 16 பட்டையுள்ள ஷோடசலிங்கமாக பெரிய திருவுருவில் இருக்கிறார். பின்னால் சுவற்றில் இறைவன் அம்பிகையுடன் உமாமகேஸ்வரராக இருக்கிறார்.

அம்பிகை திரிபுர சுந்தரி நல்ல காத்திரமான உருவம். மேல் கைகளில் மலர்களும் ஒரு கை அபயஹஸ்தமாகவும் ஒரு கை வரத ஹஸ்த

மாகவும் விளங்குகிறுள். இங்கு பெரிய முன் வாயிலில் சிதம்பரத்தி லுள்ளது போன்ற நடன சிற்பங்கள் நிறைய உள்ளன.

இறைவன் மூலஸ்தான கோபுரம் தஞ்சை பெரிய கோவிலின் சிறிய மாடல் என்றே சொல்லலாம்.

இறைவன் திரிபுர தகனம் செய்த இடம் இது. நாவுக்கரசர் நோயைத் தீர்த்த சூல தீர்த்தம் என்ற கிணறு ஆலயத்துள் இருக் கிறது.

திருப்பாதிரிப்புலியூர்

அப்பரை கருங்கல்லில் கட்டி கடலில் எறிந்த போது அக்கல்லே தெப்பமாக மிதந்து அவரை கரைக்குச் சேர்ப்பித்தது. இப்பகுதியை "கரையேற விட்ட குப்பம்" என்றழைக்கின்றனர். இவர் கரை யேறிய ஐதீக உற்சவம் ஆண்டு தோறும் சித்திரை மாதம் அனுஷ நட்சத்திரத்தில் இக்குப்பத்தில் நடைபெறுகிறது.

திருப்பாதிரிப்புலியூர் பற்றியும் ஒரு பதிகம் பாடியிருக்கிருர். இது கரையேறியதும் பாடப்பட்டது. முதல் பாட்டு "ஈன்ருளுமாய் எனக்குத் தந்தையுமாய்" என்று ஆரம்பித்து "தோன்ருத் துணை யாய் இருந்தனன் தன்னடிபோங்களுக்கே" என்று முடிகிறது. "புழுவாய் பிறக்கினும் புண்ணியா" இத்தலத்தில் பாடியதுதான்.

## அப்பர் அமரரான திருப்புகலூர்

அப்பர் இறைவனடி சேர்ந்த இடம் "பொய்கை சூழ் பூம்புகலூர்" என்கிற திருப்புகலூர். (நன்னிலம் ரயில் நிலயத்திற்கு கிழக்கே 4 மைலில் முடி கொண்டான் ஆற்றங்கரையிலுள்ளது).

ஆலயத்தின் மூன்று பக்கங்களிலும் அகழி. அக்னி வழிபட்ட இடம். இறைவன் பெயர் அக்னீஸ்வரர் அம்பிகை நாமம் கருந்தார் குடிலி. (இரண்டே கைகள்) இங்கு அக்னிக்கு உலோகத்தில் உருவச் சிலையுள்ளது. (இரு முகங்கள்) லிங்கம் வலதுபுறம் சிறிது சாய்ந் துள்ளது பாணாசுரன லிங்கத்தை எடுக்க முயன்று முடியாமல் திரும்பினனும்.

மேற்கு பிராகாரத்தில் அப்பர் பெருமானுக்குத் தனி சன்னதி இருக்கிறது. மூல விக்கிரகம் உத்ஸவ விக்கிரகம் இரண்டிலும் ஒரே மாதிரி நின்று கொண்டிருக்கிருர்.

இவர் தன் 81 வது வயதில் சித்திரை மாத சதயத்தில் இறைவனடி சேர்ந்தார்.

இத்தலத்தில் அப்பர் இறைவனடி சேர்ந்த நிகழ்ச்சி சித்திரை சதயத்தில் கொண்டாடப்படுகிறது.

---

# சக மார்க்கம்-சுந்தரர் காட்டிய வழி 6

## சுந்தரர் காட்டிய வழி

தோழமை அருளித் தொண்டனேன் செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை...
...என்னுடைய தோழனுமாய்
யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
நாதனை என் தனை ஆள் தோழனை...

இறைவனுடன் நண்பனை உறவாடி பக்தி செலுத்தியதை சுந்தர மூர்த்தி சுவாமிகளே மேற்கண்டவாறு கூறுகிறார். இப்பக்தி மார்க் கத்திற்கு சக மார்க்கம் என்று பெயர். சிவபெருமானைத் தோழனாகக் கொண்டு அன்பு செலுத்தியதால் இவருக்கு 'தம்பிரான் தோழர்' என்ற பெயரும் உண்டு

இறைவனை நண்பனாக வழிபட்டவர் — ஸஹமார்க்கம். இது யோக மார்க்கம் என்றும் ராஜயோகம் என்றும் கூறப்படும்.

இவரது பாடல்களில் தன்னை புகழ்ந்து கொள்வது பெயர் முத்திரை இருக்கும். இவர் பாடல்களில் இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழும் இடம் பெறுகிறது. பணம் தேவைப்பட்டால் நேராக இறைவனையே உரிமையுடன் கேட்பார். ஆகவே இறைவன் "சுந்தரன் பொன்னைப்பாடுவான்" என்கிறார். இவர் பதிகங்கள் 100 தான் கிடைத்துள்ளன. இவை 7ம் திருமுறைகளில் அடங்கி யுள்ளன—சாம வேத சாரம்.

இறைவனுடைய நட்பை பெற்றதினால் இவர் பாடல்களில் ஏழை நண்பன் ஒருவன் செல்வந்தனாகியத் தன் நண்பனுடன் பேசும் வகையில் பல இடங்கள் அமைந்திருக்கும்.

சில சமயங்களில் எனக்கு "இதுவேண்டும், அது வேண்டும்" என்று மிடுக்குடன் கேட்பார். இன்னும் சில சமயங்களில் மிகப் பணிவுடன் கெஞ்சுவார். இறைவனுக்கும் தனக்குமுள்ளத் தொடர்பைக் குறிப்பிட்டுப் பெருமிதம் அடைவார். சில இடங்களில்

இறைவனையே பரிகாசம் செய்வார். இறைவனுடன் கோபித்துக் கொள்ளும் பாடல்களும் உண்டு.

"நீயலதில்லையோ பிரானுர்?" என்று பாடுகிருர். "மற்றைக் கண்ணும் வாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே (பொருளைத் தரா விட்டால் நீரே வைத்துக் கொண்டு வாழுங்கள்) என்றும் சொல்கிருர்.

பணக்கார நண்பனுடன் பழகும் ஏழை நண்பன் அவனுடன் நடந்துக் கோள்ளும் முறை மூன்று விதமாக இருக்கும்.

1) ஏதாவது வேண்டும் என்ருல் நயந்துக் கேட்பான்.

2) கொடுக்கா விட்டால் "நீதான் பெரியவன் என்ற நினைப்போ" என்பான்.

3) கேட்டப் பொருளைத் தராவிட்டால் "நீயே வைத்துக் கொண்டு சுகமாக அனுபவி" என்பான்.

இதெல்லாம் அந்த நண்பனிடம் உரிமையுடன் பழக முடியும் என்பதைக் காட்டுகிறது. சுந்தரர் இறைவனிடம் இம்மாதிரியே உரிமையுடன் பழகினுர்.

பிராண சிநேகிதர்களிடையே ஒருவருக்கொருவர் அறியாத இரகசியங்கள் இருக்காது. இத்தகைய நண்பர்கள் தங்கள் இரகசியங்களைப் பரிமாறிக் கொள்வார்கள். தங்கள் மனைவிமார்களைப் பற்றிக் கூட ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வது வழக்கம். சுந்தரர் இறைவனிடம் பறவை நாச்சியார் பற்றி பல இடங்களில் கூறுகிருர்.

தான் செய்த தவறுக்கும் இறைவன் உடந்தையாக இருந்தானும். இதை சுந்தரரே.

ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னுயிராய் என்னுடைய
தோழனுமாய் பயின் செய்யும்
துரிசுகளுக்கு உடனுகி

என்கிருர். ஆகவே வாழ்விளுல் மட்டுமின்றி தன் வாக்கினுலும் இறைவன் என் தோழன் என்கிருர்.

இவருக்கு அடிக்கடி பணமுடை ஏற்படும். அதுவும் இரண்டு பெண்டாட்டிக்காரர் இல்லையா? இவர் மனிதர்களிடம் பணம் கடன் கேட்கும் வழக்கமில்லை. ஒரு குறையும் இல்லாத எல்லாம் நிறையாக உள்ள இறைவனிடம் பொன்னுகவே கேட்பார். எப்படியும் கிடைக்கும் என்ற நம்பிக்கையுள்ளவர் இவர்.

இறைவனுக்கு இவர் பாடல்களைக் கேட்க வேண்டும் என்று ஆசை. ஆகவே அவர், பொருள் கேட்டதும் கொடுத்து விடுவதில்லை கொஞ்சம் அழ வைத்து, பாட வைத்து பின்னரே கொடுப்பார். சுந்தரரும் கிடைக்கும் வரை விடமாட்டார்.

ஒரு சமயம் அவருக்குப் பொன் தேவையாக இருந்தது. பணம் வேண்டும் என்று ஆண்டவனைக் கேட்டுப் பார்த்தார். கிடைக்கவில்லை. சில குழந்தைகள் தான் கேட்பதைக் கொடுக்காவிட்டால் சண்டித்தனம் செய்யுமல்லவா? அதுமாதிரி இறைவனிடம் கோபித்துக் கொண்டு இரண்டு செங்கற்களைத் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டு படுத்துறங்கி விட்டார்.

காலையில் தூங்கி எழுந்ததும் செங்கற்கள் இரண்டும் தங்க கற்களாக மாறியிருப்பதைக் கண்டு வியந்தார். இறைவனின் கருணையைக் கண்டு,

தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்
　　சார்வினுந் தொண்டர் தருகிலாய்
பொய்மை யாளரைப் பாடாதே
　　புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும் கூறையும்
　　ஏத்தலாமிடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகமாள்வதற்கு
　　யாதுமையுறவில்லையே

என்று பாடுகிறார்.

(இது நடந்தது திருப்புகலூர்) இறைவனைக் கோபித்துக் கொண்டோமே என்ற பச்சாத்தாபம் ஏற்பட்டது. இப்படி இறைவன் கேட்டதைக் கொடுப்பவனாக இருக்கும் போது அவனைப்பாடாமல் புலவர்கள் நரஸ்துதி செய்கிறார்களே என்று மனம் நொந்தார். இறைவன் இகலோக வாழ்வுக்கு மட்டுமின்றி சிவலோக வாழ்விற்கு அருள்வான் இதில் சந்தேகமே இல்லை என்கிறார் சுந்தரர்.

ஒரு சமயம் விருத்தாசலத்திற்கருகில் ஓடும் மணி முத்தாறு நதிக்கரையில் இறைவனைப் பணம் கேட்டார். கிடைத்து விட்டது. இவருக்குத் திருவாரூர் போக வேண்டும்.

அந்த இறைவனிடமே இப்பண முடிப்பை இந்நதியில் போடுகிறேன். திருவாரூர் கமலாலயக் குளத்தில் எடுத்துக் கொள்கிறேன் என்கிறார். அக்காலத்திலேயே இம்மாதிரி மணியார்டர் அனுப்பும் முறையை கண்டுபிடித்து அமுலுக்குக் கொண்டு வந்தது சுந்தரர் தான் என்று கூறலாம். திருவாரூர் குளத்தில் பணமுடிப்பு கிடைத்தது. அதிலுள்ள தங்கத்தின் மாற்று பற்றி சந்தேகம். அங்கிருந்த

விநாயகர் அதை உரைத்துக் காட்டி நல்ல பொன்தான் என்று "சர்டிபிகேட்" கொடுக்கிறார். இதனால் அவ்விநாயகருக்கு 'மாற்றுரைத்த விநாயகர்' என்ற பெயர் ஏற்பட்டது.

## நிந்தாஸ்துதி

இறைவன் மீது ஒரு சமயம் கோபம் வந்த போது அவரை நிந்திப்பதாகவும் சுந்தரர் பாடியிருக்கிறார். நிந்திப்பது போல இருந்தாலும் உண்மையில் இறைவனைப் புகழ்வதே அது. இதை "நிந்தாஸ்துதி" என்பார்கள். உதாரணத்திற்கு ஒன்று பார்க்கலாம்.

"சுவாமி' உம்மிடம் வேலை செய்ய நம்மாலாகாது."

"ஏன்? என்ன காரணம்?"

"உங்கள் தலைமேல் ஒருத்தியிருக்கிறாள். ஆரவாரத்திற்குக் குறைச்சலில்லை. என்னைப் பார்த்து, "அப்பா! சாப்பிட்டாயா?" என்று கூட கேட்காத பேசாமடந்தை. இப்படி ஒரு யஜமானி."

"உம்பிள்ளை ஒருவர் வாசலில் உட்கார்ந்திருக்கிறார். எந்த உணவுப் பொருளும் அவர் தின்ற பின் மிருசினால் தானே! ஒரு கை போதாது என்று ஐந்து கைகள் வைத்துக் கொண்டு சாப்பிடுகிறார்.

இன்னொரு பிள்ளையோ கையில் வேலை வைத்துக் கொண்டிருக்கிறான். அவன் கிட்ட போகவே பயமாக இருக்கிறது.

"வீட்டில் முக்கியமானவள் வீட்டின் எஜமானி. அவள் தயவு இருந்தால் போதும். வீட்டில் மற்றவர்கள் எப்படியிருந்தாலும் பரவாயில்லை. இவள் வேலை வாங்குவதில் கெட்டிக்காரி. சம்பளம் மட்டும் கொடுப்பதில்லை. கொற்று என்றால் கூலி. கொற்றளந்த நாயகி என்று அம்பிகைக்கு ஒரு பெயர் உண்டு.

"இப்படி வாய் திறக்காத ஒரு பெண்டாட்டி, பெருந்தீனிப் பிள்ளை, பயமுறுத்தும் பிள்ளை, வேலை வாங்கிக் கொண்டு கூலி கொடுக்காத வீட்டுத் தலைவி—இந்த குடும்பத்தில் எனக்கு வேலை வேண்டாமய்யா?" என்கிறார் சுந்தரர்.

திங்கள் தங்கு சடையின் மேல்ஓர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கையாளேல் வாய் திறவாள்
கணபதியேல் வயிறு உதாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவியார் கொற்று அட்டி ஆளார்
உங்களுக்கு ஆட் செய்ய மாட்டோம்"
நண்பன் என்று

எவ்வளவு அந்நியோந்யமிருந்தால் அவர் குடும்பத்தினர் பற்றி இப்படிப் பேசத் தோன்றும்.

## இறைவனை 'பித்தா' என்றழைத்தவர்

இறைவனை பித்தா என்று அழைக்கும் உரிமை பெற்றவரும் இறைவன் என்று தெரியாத போது அந்தண வடிவத்தில் இருந்த அவரை எப்படிப்பாடுவது என்று சுந்தரா திகைக்கையில் "என்னை பித்தா" என்றனையே அதை வைத்தே பாடு என்கிருர் இறைவன்.

இறைவன் பித்தன். பிறைசூடி இருந்தாலும் அவனுக்கு ஏன் பெருமை? இத்தனைக்கும் மூல காரணமாக இருப்பது அவன் அருள். இதனுல்தான் பித்தா, பிறை சூடி பெருமானே என்று நிறுத்தாமல் அருளாளா என்றழைக்கிருர். பின்னர் தன்னைப் பற்றி நினைவு வருகிறது. நான் உன்னை இனி எப்படியும் மறவாமல் நினைக்கிறேன் என்கிருர். இனி துன்பம் உண்டாகுலும் சரி, இன்பம் உண்டாகுலும் சரி உன்னை மறப்பது என்பது இனி இல்லை. இப்படிச் சொல்லிக் கொண்டே இருக்கும் உன்னை நினைப்பதோ மறப்பதோ என் கையிலா இருக்கிறது? நீதான் என்னை நினைக்கச் செய்தாய் என்கிருர்.

இறைவன் ஆட்டி வைக்கிருப் போல நாம் ஆடுகிருேம். அவனருளாலே அவன் தாள் வணங்கி என்பது மணிவாசகர் வாக்கு இதையே நம்பியாண்டார் நம்பி என்னை நினைந்தடிமை கொண்டு என் இடர் கெடுத்துத் தன்னை நினைக்கத் தருகின்ருன் என்கிருர். அவன் தன்னை நினைக்க அருள்தரா விட்டால் நாம் அவனை நினைக்க முடியாது. சுந்தரர் அடைந்த இந்த நிலையையே சிவஞானம் என்கிருர்கள்.

உலகிலுள்ள எல்லா அடிமைகளும் தம்முடைய தலைவன் இன்ருன் என்று உணரும் போது அவன் பால் பக்தியுண்டாகிறது. இறைவனுக்குத்தான் அடிமை என்ற நினைவு உள்ளத்தில் எழுந்தவுடன் அதற்கு ஏற்ற உணர்ச்சியும் அனுபவமும் உண்டாகின்றன. இந்த அனுபவம்தான் இறைவனுடைய அருளிலே புகும் அனுபவம் என்று பெரியோர்கள் சொல்கிருர்கள். என்றைக்கு அவனை நன்கு தெரிந்துக் கொள்கிருேமோ நம் நிலை நமக்கு எப்படித் தெளிவாகிறதோ அப்போது தோன்றுவதுதான் சிவஞானம்.

நாகப்பட்டினம் இறைவன் கோவிலுக்கு சுந்தரர் வந்தார். அங்கு இறைவனிடம் தனக்கு வேண்டிய பொருளை எல்லாம் வரிசையாகத் தெரிவித்தார். "கறி விரவு நெய் சோறு முப்போதும் வேண்டும்; கஸ்தூரி கமழ் சாந்தும் பணித்தருள வேண்டும்; பொற்

பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்'' என்று அடுக்கிக் கொண்டே போனர்.

நாகைக்காரோணத்து இறைவன் வாய் திறந்து ஏதுவும் பேச வில்லை. குறிப்பாகவும் யாதும் உணர்த்தவில்லை. அது கண்ட சுந்தரருக்கு கோபம் மூண்டது.''இப்படி சும்மா இருப்பது முறையோ தகுமோ?'' என்று இரைந்து கேட்டார். அதற்கும் இறைவன் அசையவில்லை.

நயந்து கேட்டால் நாயகன் தரமாட்டான், அவனை பயமுறுத்தித் தான் வாங்கவேண்டும் என்று கருதிய சுந்தரர்.

மண்ணுலகும் விண்ணுலகும்
..................உம்மதே ஆட்சி
திண்ணென என் உடல்
விருத்தி தாரீரேயாகில்
திருமேனி வருந்துவே
வணக்கின்றேன் நானை
கண்ணறையன், கொடும்பான்
என்றுரைக்கவேண்டா!

என்று ஒரு சவால் விடுத்தார். (நீர் விண்ணும் மண்ணும் ஆட்சி புரிகின்றீர். என் போன்ற அடியார்க்கு கொடுப்பதற்கு அளவிறந்த செல்வம் உம்மிடம் உண்டு. எல்லாம் இருந்தும் ஒன்றும் பேசாமல் இருப்பது சரியன்று. இன்னும் ஒரு நாளைக்குள் நான் கேட்டவற்றைக் கொடுக்காவிட்டால் உமது திருமேனி வருந்த வணத்திடுவேன் அப்போது என்னைக் கொடியவன் என்று குறை கூறிப் பயனில்லை. அதனால் இப்போதே [தந்துவிடும்'' என்று சுந்தரர் இறைவனைப் பயமுறுத்துகிறார். இவர் இறைவனைப் பார்த்து உரிமையோடு கேட்கிறார். ''உனக்குப் பல அடியார்கள் நீ கோருவதை எல்லாம் செய்ய விருக்கிறார்கள். அன்னம் பாலிக்கும் அம்மையே உன் மனைவி. இப்படி இருக்க நீ ஏன் பிச்சை எடுக்கிறாய்?'' என்கிறார்.

காதல் செய்து களித்துப் பிதற்றி
கடிமாமலரிட்டு உனையேத்தி
ஆதல் செய்யும் அடியார் இருக்க
ஐயங் கொள்வது அழகியதே
ஓதக்கண்டேன் உன்னை மறவேன்
உமையாள் கணவர் எனையாள்வார்
ஆதற் பழனக்கழனிக்
கச்சூர் ஆலக்கோயில் அம்மானே.

## அடியார் வழிபாட்டை ஏற்படுத்தியவர்

இறைவனின் அடியார்களை வழி படுவது இறைவனையே வழி படுவதாகும் என்பதை தமிழ் நாட்டில் நிலை நிறுத்தியவர்கள் வைஷ்ணவ மகான்கள். வைஷ்ணவ வழிபாட்டில் அடியார்களின் வழிபாடு திருமாலின் வழிபாட்டோடு இணைந்திருந்தது.

சுந்தரருக்கு அடியார் வழி பாட்டைச் சைவத்தில் புகுத்தி அதற்கு முக்கியமான இடத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற ஆர்வம் தோன்றியது.

இன்று சிவாலயங்களில் அறுபத்து மூவர் திருவுருவங்கள் உள்ளன அவர்களுடைய திருநாட்களும் கொண்டாடப் படுகின்றன. இதற்கெல்லாம் காரணம் சுந்தரமூர்த்தி சுவாமிகளே.

சிவனடியார்களின் வரலாறுகளைத் தொகுத்துப்பாட வேண்டும் என்ற எண்ணத்தை உருவாக்க அவர் அதற்கானத் தகவல்களை எல்லாம் திரட்டி அந்நூலை இயற்ற தக்க சமயத்தை எதிர்நோக்கி இருக்க வேண்டும் என்று நினைக்க இடமிருக்கிறது. இந்த "திருத் தொண்டர் தொகை"யை சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியதற்கு பெரிய புராணத்தில் சேக்கிழார் கூறும் காரணமாவது:

திருவாரூர் மண்டபத்தில் தேவாசிரியர் மண்டபம் ஒன்று உள்ளது. இறைவனைத் தரிசிக்கும் நேரத்தை எதிர்பார்த்து அடியார்கள் அம்மண்டபத்தில் காத்திருப்பது உண்டு. ஒரு சமயம் அங்கு அடியார்கள் கூடி இருந்தனர். அப்போது அங்கு வந்த சுந்தரர் பிற அடியார்களைப் போலக்காத்திராமல் நேராகக் கோவிலுக்குள்ளே இறைவனை தரிசிக்கச் சென்று விட்டார்.

அடியார் கூட்டத்தில் இருந்த விறன்மிண்டர் சுந்தரரின் இப் போக்கை பலரறிய கண்டித்தார். சுந்தரர் செவிக்கு இது எட்டியது. தன் அடியார் பக்தியை வெளிப்படுத்த சுந்தரர் ஆரூர் அப்பரை வேண்டவே அவர் அடியார்களின் பெயர், வரலாறு முதலியவற்றை அறியும் ஆற்றலை சுந்தரருக்கு அருளி "தில்லை வாழ் அந்தணர் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்தார். இதை முதலடியாகக் கொண்டு சுந்தரர் திருத்தொண்டத் தொகை பாடினார்.

ராஜராஜன் காலத்து நம்பியாண்டார் நம்பி அதனை வகைப் படுத்தி ஒரு நாயனார் வரலாற்றுக்கு ஒரு செய்யுள் வீதம் "திருத் தொண்டர் திருஅந்தாதி" என்ற ஒரு நூல் பாடியுள்ளார். இவைகளை எல்லாம் ஆதாரமாகக் கொண்டு சேக்கிழார் பெரிய புராணம் என்ற திருத்தொண்டர் புராணத்தை இயற்றினார்.

தேவாசிரிய மண்டபத்தில் கூடியிருந்த நாயன்மாரைத் தனித் தனியே வணங்கி சுந்தரர் பாடினர் என்கிறர் சேக்கிழார். 63 நாயன்மார்களில் சுந்தரர் காலத்தில் உயிரோடிருந்தவர்கள் 12 பேர்கள். சடையனர், இசைஞானியார், நரசிங்கமுனையர், ஏயர்கோன் கலிங்காம நாயனர், மானக்கஞ்சாறர், பெருமிழலைக் குறும்பர், கோட்புலி நாயனர், எறிபத்தர், செருந்துணை நாயனர், சேரமான் பெருமாள், விறல் மிண்டர், சோமாசிமாற நாயனர். பாக்கியுள்ள 50 பேர் அவர் காலத்துக்கு முற்பட்டவர்கள். மணிவாசகர் பற்றி குறிப்பிடாதது காரணம் அவர் சுந்தரருக்கு பிற்காலத்தவராயிருத்தலே.

சுந்தரரின் பாடல்கள் ஏழாம் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளது. அதில் 100 பதிகங்கள் உள்ளன. அவருடைய வரலாற்றுக் குறிப்புகளுக்கு அதிகமாக அகச் சான்றுகள் உள்ளன. உலக வாழ்வில் இருந்துக் கொண்டே எப்படி இறைவனையடையலாம் என்பது அவர் வரலாற்றல் நாம் தெரிந்துக் கொள்ளும் உண்மை.

சூன்யாகாரே மடேரம்யே
தேவ தாயதனே சுருப
நத்தீரே விவிக்தோ வாக்குஹே
கோர வநேபிவா
ஸ்நாத்வா சுசிருப ஸ்ப்ருஸ்ய
பிரணம்ய சிரஸா சிவம்
யோகா சார்யம் நமஸ்கிருத்ய
யோகயுஹிதமானவர்: |

—சர்வ ஞானேத்தம ஆகமம்.

ஐம்புலன்களை அடக்கி சுவாசங்களை பந்தனம் செய்து நிறுத்தி, மூலாதார குண்டலினி சக்தியை எழுப்பி த்வாதசாந்தம் வரைக் கொண்டு போய் ஆறு ஆதாரங்களையும் பேதித்து பிந்து ஸ்தானத்திலிருந்து சந்திர கலையை உருக்கி அமிருதபானம் செய்துக் கொண்டு பரமானந்தத்தை அடைவதே யோகமாகும்.

இதனை "கருதுவாருள்ளத்துக் கமலத்தூறும் தேனவன் காண்" என்று திருநாவுக்கரசர் கூறினர்.

குருபதேசாத் விக்ஞயா
புருஷம் கிருஷ்ண பிங்கலம்
ப்ரும்ம ப்ரும்மபுரே
வாக்கி தஹராப்ஜக மத்யமே
அப்யாஸாத் ஸம்ப்ரபச்யந்தி
ஸந்தஸ்த் வஞ்ச ததாகுரு |

—யாக்ஞவல்கிய ஸ்மிருதி

குரு உபதேச வாயிலாக பரமானந்த விக்ரஹரும் புருஷரும் கிருஷ்ணன் பிங்கலருமான பரம்பிரும்மத்தை தியானப்பியாசத்தி னாலே பெரியோர்கள் தஹராகாசத்தில் காண்கின்றனர். நீயும் அவ் வாறே காண்பாயாக என்கிறார் யாகருவல்கியர்.

இதுவே சக மார்க்கம்—யோகம், பொன்னும் பொருளும் பெற்ற போதும் அவைமீது பற்றுவைக்கவில்லை. அடியார்களுக்காகவே பெற்றார் சுந்தரர். அவர் பிறந்தது ஆடி ஸ்வாதி. கைலாசம் அடைந்ததும் ஆடிஸ்வாதி.

## சுந்தரரின் பூர்விகம்

சுந்தர மூர்த்தி ஸ்வாமிகள் இறைவனின் அம்சமே என்பது அகஸ்தியரின் சிவபக்த விலாசத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

பார்வதி தேவிக்கு ஒரு ஆசை. அதை அவள் சிவபெருமானி டமே வெளியிட்டாள்.

"நீங்கள் எப்போதும் உடம்பில் விபூதி, புலித்தோல் ஆடை, சடை, நாகாபரணம் இவைகளோடேயே காட்சி தருகிறீர்கள். நீங்கள் எப்படிக் காட்சி தந்தாலும் எனக்கு திருப்தி தான். இருந்தாலும் சுந்தரரூபியாக உங்களைக் காண ஆசைப்படுகிறேன்" என்றாள்.

சிவபெருமான் பார்வதியுடன் ஒரு பெரிய நிலைக் கண்ணாடி முன் நின்றார். கண்ணாடியில் தேவி கண்டதென்ன? வாலிபம் நிறைந்த பருவம். பூர்ண சந்திர திருமுக மண்டலம், திருமேனியில் ரத்னா பரணங்கள். தேவி இதைக் கண்டு இந்த மாதிரி அழகுள்ள பாலகன் நமக்கு இருக்கட்டும் என்று எண்ணி 'சுந்தரா' என்று அழைத்தாள். அதே சுந்தர ரூபத்துடன் ஒரு சிறுவன் தேவியின் பக்கத்தில் நின்றான்.

இச்சமயம் பாற்கடல் கடையப்பட்ட போது எழுந்த ஆலகால விஷப்பிரச்னை எழுந்தது. சிவபெருமான் அச்சிறுவனைப் பார்த்து "பாற்கடலில் ஆலஹால விஷம் ஏற்பட்டுள்ளதாம், அதைப் போய் எடுத்து வா" என்று அனுப்பினார். சுந்தரனும் அப்படியே போய் கொண்டு வந்து கொடுத்தான். இதனால் ஆலஹால (ஆலால) சுந்தரர் என்ற திருநாமம் இவருக்கு உண்டாயிற்று. சுந்தரமூர்த்தி நாயனாராக அவதாரம் செய்தவர் இவரே.

இவருக்கு நம்பியாரூரர், வன்றொண்டர், ஆலால சுந்தரர் என் றெல்லாம் பெயர்கள் உண்டு "நயத்திற்கு சுந்தரர்" என்றபடி இனிமையாகப் பாடி இம்மை மறுமைப் பேறுகளைப் பெற்றவர்.

சுந்தரர் ஒவ்வொரு பதிகத்திலும் தன் பெயரை இணைத்துப் பாடுவது வழக்கம். எவ்வளவோ பாடியதில் 100 பதிகங்கள் தான் இப்போதுள்ளது.

## வாழ்க்கைச் சுருக்கம்

ஆலால சுந்தரர் கைலாயத்தில் சிவபெருமானுக்கு தொண்டு புரியும் அடியார்களில் ஒருவர். ஒருநாள் நந்தவனத்தில் அனிந்திதை, கமலினி இருவரையும் சந்தித்து அவர்கள் அழகில் மயங்கிக் கடமையை மறந்து விடுகிறார். ஆலாலரின் மனக் குறிப்பை அறிந்த சிவபெருமான் அவரை மண்ணுலகில் பிறந்து வாழ்க்கை இன்பங்களை நுகர்ந்த பின்பு கைலாயம் வருமாறு பணிக்கிறார். அதன் படியே ஆலால சுந்தர மூர்த்தியாகவும் அனிந்திதை, கமலினி இருவரும் பரவை, சங்கிலி என்றப் பெயருடன் பூமியில் பிறக்கிறார்கள்.

திருநாவலூரில் (தென்னாற்காடு மாவட்டம்) சடையனாரின் புதல்வாக நம்பியாரூரர் பிறக்கிறார். அவரை நரசிங்க முனை யரையர் என்ற குறுநில மன்னர் வளர்த்து உபநயனம் செய்விக்கிறார். சங்கவி சிவாசாரியாருடைய மகளைப் பெண் பேசி திருமணம் செய்ய நிச்சயிக்கப்படுகிறது. இறைவன் தடுத்தாட்கொண்டதால் திருமணம் நின்று விடுகிறது.

ஆட்கொள்ளப் பட்ட நாள் முதல் சுந்தரர் தம் ஆயுள் முழுவதும் ஊர் ஊராகச் சென்று இறைவனைப் பாடிப் பரவினார். அவர் வாழ்ந்த தெல்லாம் 18 ஆண்டுகளே.

திருவாரூரில் ருத்திரகணிகையர் குலத்தில் தோன்றிய சிவ பக்தையான பரவை நாச்சியாரை இவர் மணந்தார். திருவொற்றி யூருக்கு வந்த போது சங்கிலி நாச்சியாரை மணந்தார். இதை யறிந்த பரவையார் ஊடல் கொண்டார். சுந்தரர் வேண்டிக் கொண்டதன் பேரில் இறைவன் பரவையாரிடம் தூது சென்று ஊடலை தீர்த்து வைத்தார்.

இதை அறிந்த ஏயர்கோன் கலிக்காம நாயனார் "இறைவன் தூதுபோக இணங்கினாலும் இவர் அனுப்பலாமா?" என்று கோபம் கொண்டார். இருவரையும் இணைத்து வைக்கத் திருவுளங்கொண்ட இறைவன் கலிக்காமருக்கு சூலை நோய் வரச் செய்தார். 'சுந்தரர் வந்தால் இது தீரும்' என்று கலிக்காமருக்கும் 'நீ போய் சூலையை நீக்கிவா' என்று சுந்தரருக்கும் இறைவன் தெரிவித்தார்.

சுந்தரர் கலிக்காமரிடம் வந்த போது 'இவனால் இந்நோய் தீருவதை விட நான் இறப்பதே சிறந்தது என்று வாளால் குத்திக்

கொள்கிறர். சுந்தரர் வாளை எடுத்து தானும் குத்திக்கொள்ள முயன்ற போது இறைவன் அருள் புரிந்து இருவரையும் காப்பாற்றுகிறர். இருவரும் நண்பர்களாகின்றனர்.

சுந்தரர் தன் நண்பர் சேரமான் பெருமானுடன் கைலைக்கே பயணமாகி அங்கு இறைவனடியைச் சேர்கிறர்.

## சுந்தரர் சம்பந்தப்பட்ட இடங்கள்

**திருநாவலூர்**

பிறந்த இடம். சுந்தரர் பெரும்பாலும் திருவாரூரில் தங்கியிருந்தாலும் பிறந்த நாவலூரை மறக்க முடியவில்லை "நாதனூர் நமக்கூர் நந்திரு நாவலூர்" "நாடெல்லாம் புகழ் நாவலூராளி" நாதகீத வண்போதுவார் பொழில் நாவலூரான்" என்றெல்லாம் கூறியிருக்கிறர்.

திரு நாவலூரில் நாவல் மரம் ஸ்தலவிருக்ஷம். ஈசன் பெயர் பக்தஜனேஸ்வரர். அம்பிகை பெயர் மனேன்மணி. இந்த ஆலயத்தில் பெருமாளும் இடம் பிடித்துக் கொண்டிருக்கிறர். கோவிலுக்கு பக்கத்திலுள்ள தெருவில் சுந்தரர் பிறந்த வீட்டில் ஒரு பஜனை மடம் இருக்கிறது.

பிரும்மாண்ட புராணத்தில் தவ விபவ காண்டத்தில் நாவலூர் தலமகாத்மியம் கூறப்படுகிறது. இதைத் தழுவி திருவெண்ணெய் நல்லூர் ராசப்ப நாவலர் 9 படலங்களும் 515 பாடல்களும் கொண்ட ஒரு புராணத்தைத் தமிழில் இயற்றியிருக்கிறர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் உருவ விக்கிரகம் (கல்லிலும் சரி செம்பிலும் சரி) தலைமுடியுடன் கிரீடமில்லாமல் மிக அழகாக இருக்கிறது. இவரை வளர்த்த நரசிங்க முனையர் உலோகச் சிலையும் நாவலூர் ஆலயத்தில் உள்ளது. சுந்தரர் சனனிதிக்கு முன் அவர் கைலைக்கு ஏறிச் சென்ற யானை இருக்கிறது.

நாவலூர் தென்னுற்காடு மாவட்டத்தில் பண்ருட்டியிலிருந்து 10 மைலிலுள்ளது.

**திருவெண்ணெய் நல்லூர்**

நாவலூரில் பிறந்த சுந்தரருக்கு புத்தூரில் கலியாணம் நடைபெற இருந்த போது அவரை தனக்கு அடிமை என்று உரிமை கொண்டாடிய சிவபெருமானுடன் வழக்குத் தீர்த்துக் கொள்ள சுந்தரர் வந்த இடம் திருவெண்ணெய் நல்லூர். விழுப்புரத்திற்குத் தெற்கே 12 மைலிலுள்ளது. இங்குள்ள இறைவனே தடுத்தாட்

கொண்ட நாதர், கிருபாபுரீஸ்வரர் என்றழைக்கப்படுகிறார். சுந்தரர் இவரை "அருளாளா" என்றே அழைத்திருக்கிறார்.

அம்பிகை மங்களாம்பிகை. வெண்ணெயினால் கோட்டைக் கட்டி அதிலிருந்து தவம் செய்தாள் என்கிறது புராண வரலாறு. இந்த வெண்ணெ உருகியே பெண்ணையாறு ஆயிற்று போலிருக்கிறது.

பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்
வெண்ணெய் நல்லூர் அருள் துறையுள்
அத்தா! உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனல் ஆமே

(பித்தனே! பிறையைச் சூடுபவனே பெருமானே, அருளுடைய வனே. இப்போது எதனாலும் உன்னை மறவாமல் நினைக்கின்ற அடியேனுடைய மனத்தில் உன்னை வைத்தாய் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள வெண்ணெய் நல்லூரில் அருள்துறை என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் அப்பனே! உனக்கு அடிமையாகி விட்டு இப்போது நான் அடிமையில்லை என்று சொல்லலாகுமா?)

இப்பாட்டு பிறந்தது திருவெண்ணெய் நல்லூர் தலத்தில் அருள்துறை என்ற பெயருள்ள ஆலயம். திருவெண்ணெய் நல்லூர் தென் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ளது

இந்த நல்ல ஊரில் அன்பும் அருளும் வெண்ணெய் மாதிரி உருகக்கூடியது. அதனால் அப்பெயர் வந்திருக்கலாம். இந்த அன்பு என்னும் வெண்ணெயைத்தானே கிருஷ்ண பரமாத்மா திருடினார்!

சுந்தரர் அடக்க ஒடுக்கமாக ஒரு கையில் அடிமை ஓலை ஏந்தி ஒரு தனி சன்னிதியில் காணப்படுகிறார் இக்கோவிலில் வழக்கு மன்றம் என்ற மண்டபமும் இருக்கிறது.

கம்பனை ஆதரித்த சடையப்ப வள்ளலின் ஊர் இதுதான். இங்கு நான்கு சந்தான குரவர்களில் முதல்வரான மெய்கண்டாருக்கு ஞானம் பிறந்த இடம். அவருக்கு ஒரு தனி மடத்தில் அவர் சந்நிதி இருக்கிறது.

திருவாரூர்

ஆரூரில் பிறக்க முக்தி என்ற புகழ்பெற்ற இத்தலத்தில் சுந்தரர் அதிக காலம் வசித்திருக்கிறார். சுந்தரர் திருவாரூரில் பிறந்தார் எல்லா

ருக்கும் அடியேன் என்று பாடியிருக்கிறார். பரவையாரை இங்குதான் மணந்தார். சங்கிலியாரை மணந்ததால் பரவை ஊடல் கொள்ள அதைக் கண்டு சுந்தரர் வருந்த சுந்தரருக்காக பரமன் பரவையிடம் தூது சொல்கிறார். இறைவன் திருவடிபட்ட மண் திருவாரூர். இக் கமலாலயத்தில் தான் திருமுதுகுன்ற ஆற்றில் போட்ட பொன்னை இறைவன் அருளால் சுந்தரர் எடுத்தார். இங்குள்ள தேவாசிரிய மண்டபம் அடியார்கள் சம்பந்தத்தால் மிகப் பிரசித்திப் பெற்றது.

சுந்தரரும் சேரமான் பெருமானும் தியாகேசருக்கு எதிர் முக மண்டபத்தில் காணப்படுகிறார்கள்.

தெற்கு கோபுர வாசல் அருகில் பரவைக்கும் சுந்தரருக்கும் தனிக் கோவில் ஒன்றிருக்கிறது. சங்கீதமும் மூர்த்திகளான தியாகப் பிரும்மம், முத்துஸ்வாமி தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகள் மூவரும் பிறந்த ஊர் இது.

### திருவொற்றியூர்

சுந்தரர் சங்கிலி நாச்சியாரை மணந்த தலம். சென்னைக்கு அருகில் உள்ளது. பட்டினத்தடிகள் முக்தியடைந்தது இங்குதான்.

திருவொற்றியூர் கோவிலில் மிக முக்கிய இடம் பெறுவது மகிழ மரமே. சுந்தரர் திருவாரூரில் பரவையாரை மணந்தபின் ஒற்றியூர் வருகிறார். சங்கிலி என்கிற பெண்மணியைக் காதலிக்கிறார் அவளும் சிவபெருமானுடைய பக்தை. இறைவன் அவள் கனவில் தோன்றி சுந்தரரை மணக்கச் சொல்கிறார். சங்கிலி என்னை விட்டு எப்போதும் பிரியக்கூடாது என்று சத்தியம் தர வேண்டும் என்கிறாள். சுந்தரரும் அதற்கு சம்மதிக்கிறார்.

ஆனால் இறைவனிடம் நான் அந்த சத்தியத்தைக் காப்பாற்றப் போவதில்லை. ஆகவே கோவிலில் உன் சந்நிதியில் சத்தியம் செய்யும் போது நீ அங்கு இல்லாமல் மகிழ மரத்துக்குப் போய்விடு என்கிறார் சுந்தரர். சரி என்று சொன்ன இறைவன் ஒரு குறும்பு செய்கிறார். சங்கிலியின் கனவில் தோன்றி, "நாளை ஆரூரன் சத்தியம் செய்து கொடுக்க உன்னுடன் என் சந்நிதிக்கு வரவிருக்கிறான். இங்கு வேண்டாம். மகிழ மரத்தடியில் சத்தியம் செய்து கொடு என்று கேள்" என்கிறார். வேறு வழியின்றி சுந்தரர் அப்படியே அங்கு வந்து சத்தியம் செய்து கொடுக்கிறார்.

இங்குள்ள அம்பிகை பெயர் திரிபுரசுந்தரி (வடிவுடை அம்மை)

### திருவஞ்சைக்களம்

இது கேரளாவிலுள்ளது. இங்கிருந்துதான் சுந்தரர் யானை மீதும், சேரமான் பெருமான் குதிரை மீதும் கைலைக்குப் பயணமாயினர்.

# சன்மார்க்கம் 7
# [மாணிக்கவாசகர் காட்டிய வழி]

சர்வேஸ்வஹி சாஸ்த் ரேஷி
ஞேயம் வஸ்து சதுஷ்டயம்
பசு பாச பதிச் சைவ
சிவச் சேதி யதாக்ரமம்
பதிஸ்ஸதா சிவோ ஞேயோ
மந்திராத்ம மந்திர விக்ரஹ:
ஸர்வ மந்திராதி பச்சா ஸௌ
சிருஷ்டி சம்ஹாரகாரக: |
—ஸர்வ ஞானோத்த ஆகமம்

சிவாகமங்களில் குறிப்பிடும் ஞானம் பரஞானம் ஆகும். சரியை, கிரியை யோக வாயிலாக ஞானத்தை அடைந்த முக்தான்மா அனுபவிக்கும் ஞானமே பரஞானம். எல்லா சாஸ்திரங்களிலும் ஞானம் நான்கு விதமாக பொருள் கூறப்படுகிறது. அவை பசு, பாசம், பதி, சிவம் எனப்படும்போது மந்திராத் மகமாய் மந்திர விக்ரகமாக உள்ள சதாசிவமான ரூப நினைப்பும்,

சிவம் எனப்படும்போது சுவர்ண விக்ரஹம் தேவம் வர்ண விக்ரக வர்ஜிதம் என்றபடி நிர்குணரூபம் ஆகும் என்கின்றன சிவாகமங்கள்.

எல்லாம் அவன் உருவாகவும், அவன் திருக்கோயிலாகவும், அவன் செயலாகவும் காணும் ஸ்வானுபூதி மகான்களிடத்தில் அவன் எப்போதும் பிரகாசித்துக் கொண்டே இருப்பான். அம்மகான்களை சிவனெனவே வழிபடுதல் ஞானிகளின் இலக்கணம்.

மாலற நேயம் மலிந்தவர்
வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே
—சித்தாந்த சாஸ்திரம்

இதுவே மெய்ஞ்ஞானம்.

## மாணிக்கவாசகர் காட்டிய வழி

இறைவனைக் குருவாகக் கொண்டு சிஷ்யனாக வழிபட்டவர். சன்மார்க்கம் ஞான மார்க்கம். "அறிவால் அறியும்" யோகமே அவர் காட்டிய அருள் நெறி. நாயக நாயகி பாவம் (மாதுர்ய பாவம்) அதிகம் கையாண்டவர்.

இவரது திருவாசகம், திருக்கோவையார், எட்டாம் திருமுறைகளிலுள்ளவை. திருவாசகம் 656, திருக்கோவையார் 400 பாடல்கள்.

இறைவனை கணவனாக உயிரை மனைவியாக வைத்துப் பாடுவது சன்மார்க்கம் — அதர்வண வேத சாரம்.

குரு-சிஷ்ய உறவில் இறைவன் கருணையைப் பெற்ற மாணிக்கவாசகர் நாயக நாயகி பாவமாகவும் இறைவனைப் போற்றிப் புகழ்ந்திருக்கிறார்.

அகப் பொருளையும் அருட் பொருளையும் (காமச் சுவையும் ஞானச் செய்தியும்) இவ்விரண்டையும் இணைத்து வழிபாட்டிற்குப் பயன்படுத்திய பெருமை மாணிக்க வாசகரையே சேரும்.

நம் முதுகை நாம் பார்க்க முடியாது. அதே போல இறைவனையும் நாம் காண முடியாது. ஆனால் எதிருக்கெதிராக இரண்டு கண்ணாடிகள் இருக்கும் பட்சத்தில் நம் முதுகை நாம் காணலாம். இந்த இரு கண்ணாடிகளாக குரு அருளும் திரு அருளும் சேர்ந்து வாய்ப்பின் அவை மூலம் இறைவனைக் காண முடியும்.

மாணிக்கவாசகருக்கு இறைவன் குருவாக வந்து உபதேசித்து அவரை ஆட்கொள்கிறான். மாணிக்கவாசகர் வாழ்க்கையை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அமைச்சராக இருந்தது. குருந்த மரத்தடியில் குரு அருள் பெற்றது. அவர் பெற்ற பேரானந்த வைபவம்.

## குரு அருள்

வெள்ளம் பாயும் புனல், கீழே இருக்கும் சக்கையை தன் வேகத்தினால் மேலே கொண்டு வருவது போல இறைவன் குருவாகி வந்து அருள் செய்தது கீழே கிடந்த தன்னை மேலே கொண்டு வந்து உயர்த்தி விட்டது என்று மாணிக்கவாசகர் தன் அனுபவத்தைச் சொல்கிறார்.

நாம் உபாசிக்கும் தேவதையின் ஸ்வரூபம், அத்தேவதையின் சக்தி விசேஷம், ஆராதனை முறை முதலிய தத்துவங்களை உபதேசிக்கும் குரு அந்தந்த தேவதையின் உருவமாகவே இருக்கிறார் என்பதையே "குருர்பிரம்மா...... தஸ்மை ஸ்ரீகுரவே நம" என்ற ஸ்துதி கூறுகிறது.

நேரிலேயே குரு உபதேசம் செய்யா விடினும் அவரது அனுக்கிர கத்தினால் சிஷ்யனுக்குத் தத்துவங்கள் விளங்குகின்றன வென்றும் குருவினால் உபாசிக்கப்படும் தேவதையே குருபக்தியின் மகிமையால் சிஷ்யனுக்குத் தத்துவங்களை உபதேசித்ததாகவும் உபநிஷத்தில் கதைகள் உள்ளன. குருவினிடம் பக்தி இல்லை என்றால் தேவதை களின் ஸூக்ஷ்ம தத்துவங்களைத் தெளிவாக தெரிந்துக் கொள்ள முடியாது.

"உபாசிக்கும் தேவதையினிடம் இருக்கும் பக்தி போலவே குருவினிடமும் எவருக்கு சிறந்த பக்தி இருக்கிறதோ அவருக்கு குரு வால் உபதேசிக்கப் படாத விஷயங்கள் கூட உபதேசிக்கப்பட்டது போலவே மிகத் தெளிவாக விளங்கும். ஆகவே தான் குரு அந்தந்த தேவதா ஸ்வரூபமாகவே இருக்கிறார் என்கிற உண்மை சாந்தோக்ய உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது."

குருவே பரப்பிரும்மஸ்வரூபம். பரப்பிரும்மத்தை உபநிஷத்துக் கள் சச்சிதானந்த ஸ்வரூபமாகவும் கூறுகின்றன. அதாவது மும் மூர்த்தியின் குணங்களான ஸத்வம்' ரஜஸ், தமஸ்ஸிக்கும் அப்பாற் பட்டது.

பரப்பிரும்மமாக இருந்து ஜீவன் முக்தனாக வாழ்பவனும் பரப்பி ம்மத்தை அறிய விரும்பும் ஒவ்வொருவரும் குருவை நாடி அவர் அருளைப் பெற வேண்டும். இந்த அருளைப் பெற்றவரே மாணிக்க வாசகர்.

இவர் ஞானாசிரியனைத் தேடி அலைந்தார். பல இடங்களிலும் தேடி காணாமல் வருந்தினார்.

"திருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே உன்னை ஓலமிட்டலறி
உலகெலாம் தேடியும் காணேன்."

என்ற திருவாசகப் பாடல் இதனைக் குறிக்கும். இறைவனே இவர் முறையீட்டைக் கேட்டு இரங்கி அவருக்கு ஞானாசிரியனாக வந்தார்.

## குரு - சிஷ்ய உறவு

இறைவனின் இயல்பை அவனே தகுதியுள்ளவர்களுக்கு அறிவு றுத்தினால் தான் சிற்றுயிர்கள் அதை அறிதல் கூடும் என்பது சித்தாந்த நூல்களின் முடிவு. ஆணவ மலத்தால் மட்டும் கண்டுண்ட உயிர்களை அவற்றின் உள் நின்று உண்மை உணர்த்தி ஆட் கொண் டருளுவான்.

ஆணவம் கன்மம் இரண்டினாலும் கட்டுண்ட உயிர்களை தன் தெய்வத் திருமேனியுடன் வந்து ஆண்டருள்வான்.

ஆணவம் கன்மம் மாயை மூன்றாலும் கட்டுண்ட உயிர்களுக்கு மனித உருவில் வந்து மெய்யறிவு ஏற்படுத்துவான். இதை திருவாசகம

தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலி எனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள் நணி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியில் சேவடி தீண்டினன் காண்க
சிவன் என யானும் தேறினன் காண்க
அவன் எனை ஆட் கொண்டருளினன் காண்க
குவளைக்கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க

இறைவன் குருவாக வந்து ஐந்தெழுத்து அருள் நிலை உணர்த்தி சென்னிமேல் திருவடிசூட்டி பாச நீக்கமும் சிவப்பேறும் அளித்தார். அப்போது அவர் பாடியது, 'சென்னிப்பத்து'.

எல்லா அருட் பாடல்களும் ஆண்டவனை 'அவன்' என்றும், பரம்பொருளை 'அது' என்றும் படர்க்கைப் பொருளாகச் சொல்லும். ஆனால் திருவாசகம் பரம்பொருளை முன்னிலைப் படுத்தி 'நீ' என்று பேசுகிறது. இதை படிக்கும் போது ஆண்டவனிடம் நேரில் முறையிடுகிற உணர்ச்சி ஏற்படுகிறது.

மனதைக் கவரும் சக்தியை 'வசீகர சக்தி' என்றும், 'ஆகர்ஷண சக்தி என்றும் கூறலாம்.

மனைவியிடம் கணவன் காணும் வசீகர சக்தியும், கணவனிடம் மனைவி காணும் வசீகரசக்தியும் குடும்பம் இனிது நடைபெற பெரிதும் உதவுகிறது. தலைவனிடமுள்ள வசீகர சக்தி தொண்டர்களை அவர் கூறும் உத்தரவுகளை நிறைவேற்றச் செய்கிறது. இவையெல்லாம் சாதாரண வசீகர சக்திகளின் ஆட்டம்.

இறைவன் நரிகளைப் பரியாகக் கொண்டு வந்ததும், பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படிப்பட்டதும் எதற்கு? அமாவாசையை பௌர்ணமியாக்கத் தன் தாடங்கத்தை வீசி எறிந்து அபிராமி பட்டருக்கு அருள் செய்தது எதற்கு? எல்லாம் மாணிக்கவாசகர், அபிராமி பட்டர் இவர்களின் பக்தியால் வசீகரிக்கப்பட்டே அப்பனும் அம்மையும் இத்தகைய திருவிளையாடல்களை நடத்தியுள்ளனர்.

நாம் இறைவன் அல்லது இறைவி இவர்களை வசீகரிக்கும்படி பக்தி செய்ய வேண்டும். இப்படி வசீகரிக்கும்படியான பக்தியில்லை அவரே தருவார் என்கிறார் ஆதிசங்கரர்.

அவருடைய "தனுச்சாயா பிஸ்தே" என்று ஆரம்பிக்கும் சுலோகத்தைப் பாராயணம் செய்வது மூலம் எல்லோரையும் வசீகரிக்கும் சக்தியை நாம் பெற முடியும்.

அடுத்ததான 'முகம் பிந்தும்' என்ற சுலோகத்தைக் கொண்ட மூவுலகங்களையும் வசீகரிக்கும் சக்தியைப் பெறலாம் என்கிறார்.

இந்த வசீகரிக்கும் சுலோகங்கள் சமானியமான ஆசாபாசங்களுக்கு அடிமைப்பட்டு அல்லலுறும் சாமான்யர்களுக்கானதல்ல. மாதரை எல்லாம் மாதாவாக நினைத்து வழிபடுபவர்களுக்காகவே இவை ஏற்பட்டதாகும்.

## முழு வாழ்க்கையில் முக்தி இன்பம்

மனிதப் பிறப்பு எடுத்தவர்களில் பெரும்பான்மையோர் அரை குறை வாழ்க்கையே வாழ்ந்து மறுபடியும் மறுபடியும் பிறந்து இறந்து அல்லல்படுகின்றனர்.

முழு வாழ்க்கையே முக்தி இன்பம் அளிக்கவல்லது. பிறவா நிலை பெற முழு வாழ்க்கை வாழ வேண்டும்.

மாணிக்கவாசகர் முழு வாழ்க்கை வாழ்ந்தவர். இறைவனோடு இரண்டறக் கலந்து இனிப் பிறவா நிலை எய்தினவர். சமய நூல்கள் கூறும் தத்துவப்படிகளில் கீழிருந்து மேலே ஒழுங்காக ஏறிச் சென்றவர். அச்சம் வரும் போதெல்லாம் இறைவனை நினைத்துருகி அச்சம் நீங்கப் பெற்றவர். இவர் சென்ற வழியில் செல்ல உறுதி, உழைப்பு, இறைவனிடம் அன்பு வேண்டும். அவர் சென்ற வழியை திருவாசகத்திலிருந்தே அறியலாம்.

உள்ளம் நெகிழ்ச்சியுள்ளதாக இருக்க வேண்டும். இப்படி இருந்தால்தான் எல்லாப் பொருளையும் ஒரேவிதமாக நோக்கும் தன்மை இருக்கும். எல்லாவற்றையும் விருப்பு வெறுப்பு இல்லாமல் கொள்ள முடியும்.

துன்பத்தைக் காரணமாகவும் இன்பத்தை அதன் காரியமாகக் கொள்ளலாம். அப்படி கொள்பவர்கள் உள்ள நெகிழ்ச்சியுடையவரே. இவர்களுக்குத் துன்பமும் இன்பமேயாகத் தோன்றும். "இடுக்கண் வருங்கால் நகுக" என்கிற குறள் துன்பத்தையும் இன்பமாகவே கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறது.

உயிர்கள் இன்பத்தை விரும்பும், துன்பத்தை வெறுக்கும். இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். கூர்ந்து நோக்கினுல் துன்பம் காரணமாகவும் இன்பம் காரியமாக இருப்பது தெரிய வரும். காரியம் காரணத்தை விட்டு வேருக இருப்பதில்லே. இதனுல் இன்பமும் துன்பமாகவே முடிகிறது. எல்லாவற்றையும் துன்பமயமாகவே கண்டு திகைப்புற்றுக் கலங்கும் நிலேயே மனம் கல்லாய் போன நிலே. இந்த நிலே மாற கல்லுள்ளம் கசிந்து உருக வேண்டும். இந்த உருக்கத்தை மாணிக்கவாசகரின் திருவாசகம் ஏற்படுத்துகிறது.

ஆகவே கல்லாகிய மனம் கசிந்துருக வேண்டுமானுல் எல்லாத் துன்பங்களேயும் இன்பமாக நோக்கும் மனப்பக்குவம் வர வேண்டும்.

மக்கள் உள்ளம் இயற்கையாக நெகிழ்ச்சியுள்ளது. குழந்தை உள்ளத்தை இயற்கையுள்ளம் எனலாம் வயது ஏற ஏற இயற்கை உள்ளம் கல்லாய் விடுகிறது. கல்லான உள்ளத்தை கனிவிக்க வல்லது மாணிக்கவாசகரின் திருவாசகம் இதைக் குறிப்பிடுவதே "திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்ற பழமொழியாகும்.

மாணிக்கவாசகரே திருவாசகம். திருவாசகமே மாணிக்க வாசகர்.

---

# தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாக வேண்டும்

'தெய்வம் என்பதோர் சித்தம் உண்டானதால்' மணிவாசகர் நெக்குருகினர். அவர் உள்ளத்தில் அன்பெனும் ஆறு கரைபுரண்டது. காம் என்னும் மலர் குவித்ததும் இதயம் என்ற மலர் விரிந்தது.

சைவ பக்தராகிய இவரை உலகனைத்துக்கும் முக்கியமானவர் என்று கூறலாம். எப்படி?

இறைவனும் சரி, மனித அனுபவங்களும் சரி எந்த மறைக்கும் உட்பட்டவை அல்ல. மனித அனுபவங்களை விளக்குவதற்கே மறைகள் ஏற்பட்டன. எந்த மறை என்ன சொன்னாலும் பசி, தாகம், காமம் முதலிய உணர்வுகள் மனித இனத்தைவிட்டு அழிந்து விட முடியாது. இது போல ஆன்மீக வாழ்க்கையை அடுத்த கவர்ச்சியையும், வறட்சியையும் எந்த மறையும் கூட்டவோ குறைக்கவோ முடியாது.

ஒருவர் இறைவனிடம் ஈர்க்கப்படுவது மறைக் கொள்கையின் பயனாக அல்ல. ஈர்ப்பு, தெய்வம் என்பதோர் சித்தம் நம் கொள்கைகளுக்கும் சட்ட திட்டங்களுக்கும் அப்பாற்பட்ட முறையில் ஏற்படுகிறது.

இன்ன மறையைப் படித்தவர்க்குத்தான் இந்த ஈர்ப்பு ஏற்படும் என்பதேயில்லை. ஆகவே இது அந்த மறையின் சின்னங்கள், ஆகமங்கள் பரிபாஷை முதலிய எதற்கும் அப்பாற்பட்டது.

மணிவாசகரின் உள்ளுணர்வும் வாழ்க்கையும் சைவச் சூழ்நிலையைச் சேர்ந்ததாக அமைந்தாலும் அந்த சூழ்நிலைக்கும் அப்பாற்பட்டது. உலகில் ஒவ்வொரு மறையிலும் உயர்ந்த உள் உணர்வு பெற்றவர்கள் இருப்பதாக அறிய வருகிறோம்.

தென்னாடுடைய சிவனை உள்ளத்தில் கொண்ட மணிவாசகர் எந்நாடும் உடைய இறைவனது கருவியாய் யாவருக்கும் இறை வாழ்க்கைக்குத் துணையாய் அமைகிறார். அவர் பரிபாஷையில் பேசுவது இறைவனது ஆவியை அடுத்ததாகையால் எல்லா இனத்தவரும் அவரை தத்தம் பாஷையில் புரிந்து கொள்ள முடிகிறது ஆகவே அவர் அனைத்துலகுக்கும் முக்கியமானவர்.

ஆண்டவனை உணர்வு பூர்வமாக அறிந்தவர் இவர். இவர் பாடிய திருவாசகத்தின் பெரும் பகுதி பெண்கள் பாடுவனவாக உள்ளன. அருள் இன்பத்தை அனுபவித்துப் பாடுகின்றபோது மாணிக்கவாசகர் தம்மை ஒரு பெண்ணாகவே பாவித்துக் கொள்கிறார்.

தான் பெற்ற பேரின்பத்தை நமக்கு புரிய வைக்க நமக்குத் தெரிந்த சிற்றின்ப அனுபவ நிலையில் விளக்கவே அவர் திருக்கோவையாரை இயற்றினர்.

ஆன்மாக்கள் அருளுணர்வு பெற விழிப்படைதல் இதனால் ஏற்படும், உவகை பலவித மனநிலை, அலைவுகள், உலகில் உழன்று தடுமாறும் போராட்டம். அமைதியற்ற தன்மை, பின்னர் சாந்தி பெற்றுஇறைவனுடன் இரண்டறக் கலப்பது — இவைகளைக் கொண்டதே திருவாசகம்.

இந்த விஷயங்களையே வேறொரு வகையில் சிறப்புடன் விளக்குவது திருக்கோவையார்தான். ஈடேறப் பாடியது திருவாசகம். உலகம் வாழ்வதற்காக பாடப்பட்டது திருக்கோவையார்.

அகப்பொருள் ஆகிய உடலில் இறை பற்றிய இன்பக் கருத்துக்கள், உயிர் இவ்விரண்டும் மிக அழகாக இணைக்கப்பட்டுள்ளது. அகப்பொருளும், அருட்பொருளும் முரண்படவே இங்கு இரண்டையும் இணைந்து இயைத்திருக்கிறார் மாணிக்கவாசகர்.

அகப் பொருள் செய்திகள் அருட்பொருள் குறிப்புகள் அமையும் வகையில் பாடப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| குறிஞ்சி | — | ஜாக்ரம் (விழிப்பு) |
| பாலை | — | கனவு |
| முல்லை | — | ஸுஷுப்தி (தூக்கம்) |
| மருதம் | — | துரியம் (நான்காவது நிலை) |
| நெய்தல் | — | துரியாதீதம் (அதற்கும்மேற்பட்ட நிலை) |
| தலைவன் | — | இறைவன் |
| தலைவி | — | ஆன்மா |
| தோழி | — | திருவருள் |
| தோழன் | — | ஆன்ம போதம் |
| செவிலி | — | திரோதான சக்தி |
| நற்றாய் | — | பராசக்தி |

இந்த இரண்டு அர்த்தமுள்ள ஒரு கோவையார் செய்யுளைப் பார்க்கலாம்.

நேயத்ததாய் நென்னல் என்னை
  புணர்ந்து நெஞ்சம் நெகப்போய்
ஆயத்ததாய் அமிழ்தாய் அணங்காய்
  அரன் அம்பலம் போல்
தேயத்ததாய் என்றன் சிந்தையதாய்த்
  தெரியிற் பெரிதும்
மாயத்ததாகி இதோ வந்து
  நின்றது என் மன்னுயிரோ

## சிற்றின்பத்துறை அர்த்தம்

தலைவன் தலைவியின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருக்கிறான். அவளைத் தன் உயிராகவே கருதுகிறான். உயிருக்கு உருவமில்லை என்கிறார்களே, என் காதலியின் உயிருக்கு உருவமிருக்கிறதே என்கிறான்.

அன்புடன் நேற்று என்னைக் கூடி பின் என் மனம் வருந்தும்படி பிரிந்து சென்று தோழியர்களுடன் சேர்ந்து எனக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கே விளைவித்து என் நெஞ்சில் நிலை பெற்று விட்ட என் உயிர் இதோ வந்து விட்டாள் என்கிறான்.

## பேரின்பத்துறை அர்த்தம்

என்பால் அருட் கொண்டு முன்னை என்னைத் திருப்பெருந்துறையில் ஆட்கொண்டு பின் என் நெஞ்சம் கலந்து வருந்தும்படி 'நீ தில்லைக்கு வா' என்று அடியவர்களுடன் பிரிந்து சென்று, நினைக்குந்தோறும் இன்பம் தந்து மறைந்து நிற்றலால் துன்பம் கொடுத்து என் சிந்தையில் பிரிவற நிலை பெற்று இப்படி திருவிளையாடல் நடத்துவதால் மாயத்தன்மை வாய்ந்து என்னை இயக்கி ஆட்டி வைக்கும் என் உயிருக்குயிர் இதோ என் முன் தோன்றுகிறது.

இளமைப் பருவம் முதற் கொண்டே உலக நிலையாமையை நன்குணர்ந்து வீடு பெற சிவஞானம் தரும் இறைவன் அருளை நாடினார். பிற உயிர்களிடம் கண்ட வேதனைகளை எல்லாம் உவமைகளாக அமைத்து மங்கையராலும் புலன்களாலும் பிறவாற்றாலும் தாம் அடைந்த துன்பங்களை உணர்த்தி அத்துன்பங்களிலிருந்து தம்மை விடுவிக்குமாறு இறைவனை வேண்டுதலை நீத்தல் விண்ணப்பத்திலுள்ள 50 பாடல்களும் உணர்த்துகின்றன.

பிஞ்சு உள்ளத்திலேயே மணிவாசகருக்கு இறைவன் தன் ஜோதி தரிசனத்தைக் காட்டினார் என்பதை மணிவாசகரே கூறுகிறார்.

உருத்தெரியாத காலத்தே
உள்புகுந்தென் உளமன்னிக்
கருத்திருத்தி ஊன்புக்குக்
கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயான்

உருத்தெரியாத குழந்தைப் பருவத்திலேயே தந்தையார் தன்னை தூக்கி வைத்துக் கொண்டிருக்கும் போது இறைவன் ஒளி

வடிவமாக அவருக்குக் காட்சி தந்தான். எனது உள்ளத்தில் புகுந்தவன் தன்னை மறக்காதபடி அவர் உள்ளத்தில் நிலை நின்றான். இப்படி தன்னை இறைவன் குழந்தைப் பருவத்திலேயே ஆண்டு கொண்டான் என்கிறார் அவர்.

முதலமைச்சராக இருந்து தான், அதிகம் சேவை செய்ய முடியாது என்பதை மாணிக்க வாசகர் உணர்ந்தார். சமூக வாழ்க்கையை மாற்றியமைக்க அதிகாரத்தால் முடியாது என்பதை உணர்ந்ததுமே அவர் அதிகாரத்தைத் துறந்தார்,

அரசியல்வாதிகள் குள்ளநரிகள். நரி தந்திரமுள்ளது. இந்த குள்ள நரிகளோடு சம்பந்தம் கூடாது என்றே அவர் சமூக ஊழியரானார். சமூகத்திற்கு ஊழியம் செய்ய குதிரை போல் முன் வந்தார். இதுதான் நரி பரியாகிய கதை.

மாணிக்கவாசகர் வரலாறு பெரிய புராணத்தில் இடம் பெறவில்லை. ஏன்?

சுந்தரர் தன் திருத்தொண்டத் தொகையில் இவரைச் சொல்லவில்லை: ஆகவே இதையொட்டி எழுதப்பட்ட பெரிய புராணத்திலும் இடம் பெறவில்லை. சுந்தரருக்கு மாணிக்கவாசகர் பிற்காலத்தில் வசித்தவர்.

மாணிக்கவாசகர் பிற்காலத்தில் வாழ்ந்தவர் என்றால் அவருக்கு முற்காலத்தில் வாழ்ந்த அப்பர் சம்பந்தர் சுந்தரர் இவர்களைப்பற்றி மணிவாசகர் ஏன் குறிபிடவில்லை என்ற கேள்வி எழுகிறது. குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் பெயரைச் சொல்லிக் குறிப்பிடவில்லை.

இது பற்றி கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை ஒரு கட்டுரையில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :

பணிவார் பிணிதீர்த்தருளி
பழைய அடியார்க்குன்
அணியார் பாதம் கொடுத்தி

திருவாசகம் (திருச்சதம்—89)

இறைவன் தன் அடியார்க்கு அதுவும் பழைய அடியார்க்கு பிணியைத் தீர்த்து பாதம் கொடுத்தருளியது திருநாவுக்கரசருக்குத்தான்.

பண்சுமந்த பாடற் பரிசு படைத் தருளும்
பெண் சுமந்த பாகத்தான் திருவம்மானை.7

பண்ணார் பாடலுக்கு இறைவன் பரிசு அளித்ததைக் குறிக்கிறது. ஆளுடைய பிள்ளை திருஞான சம்பந்தர் பொற்றாளமும் முத்து சிவிகையும் பரிசாக இறைவனிடமிருந்து பெற்றதை இது குறிப்பிடுகிறது.

பாற்றிரு நீற்றெம் பரமனை
பரங் கருணையோடு மெதிர்ந்து
தோற்றி மெய்யடியார்க்கு கருத்துறை
அளிக்கும் ஜோதியை

எண்ணப் பதிகம்—6

மெய்யடியார்க்கு, எதிர்ந்து என்பது தம்பால் அடிமை பூண்ட ஒருவருக்காக எதிர்ந்த செயல், சுந்தரர் திருமணத்தின்போது ஆட்கொண்டதைக் குறிப்பிடுகிறது.

இவைகளிலிருந்து மாணிக்க வாசகர் இம்மூவருக்கும் பின் இருந்தவர் என்பது புலப்படும்.

## வாழ்க்கைச் சுருக்கம்

திருவாதவூரில் பிறந்த மாணிக்கவாசகர் அரிமர்த்தன பாண்டியனிடம் முதலமைச்சராகப் பணியாற்றியவர். மன்னன் விருப்பப் படி குதிரை வாங்கும் பொருட்டு பெரும் பொருள் கொண்டு சோழ நாடு சென்றார். திருப்பெருந்துறையில் ஞானசூரியனைக் கண்டு அவர் அடியாராகி விட்டார்.

கொண்டுவந்த பணத்தை கோவில்கட்டவும் அடியார்களுக்கும் செலவிட்டுவிட்டார். மன்னனுக்கு விஷயம் தெரிந்துவரச் சொன்னான். திருவாதவூர் இறைவனிடம் முறையிட்டார். ஆவணி மூலத்தன்று குதிரைகள் வரும் என்று சொல்லியனுப்புமாறு இறைவன் உணர்த்தினான். அவரும் அப்படியே தெரிவித்தார்.

குதிரைகள் வந்தன. ஆனால் அன்றிரவே குதிரைகள் நரிகளாக மாறி ஏற்னவே இருந்த குதிரைகளையும் கொன்றுவிட்டு போய்விட்டன.மன்னன் திருவாதவூரரைக் கடுமையாக தண்டனைக்குள்ளாக்கினான்.

வைகையாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்தது. அது கரைகளை அரித்து ஊருக்கே ஊறு விளைத்தது. அடிகளுக்கு விளைத்த துன்பமே வெள்ளப் பெருக்குக் காரணம் என்று எண்ணிய மன்னன் அவரை விடுதலை செய்தான். வெள்ளம் வடிந்த பிறகு சேதமுற்ற கரைகளைச் சீரமைக்கும் பணியை நகர மக்கள் அனைவருக்கும் பகிர்ந்து கொடுக்கச் செய்தான். முதியவளான வந்தி என்பாளுக்கு ஒதுக்கப் பட்ட பகுதியைச் சீரமைக்க உதவுவதற்காக ஒருவன் வந்தான். ஆனால், அப்படி வந்தவனோ வேலையில் சிறிதும் கருத்தின்றிப் பொழுது போக்கியதன் காரணமாகப் பாண்டியனால் பிரம்பால் அடிக்கப்பட்டான். அந்த அடி உலகில் உள்ள ஒவ்வொரு

வருடைய முதுகிலும் பட்டது. அவனும் மறைந்தான். குதிரைச் சேவகனாக வந்தவனும் மண் சுமக்க வந்து பிரம்படி பட்டவனும் இறைவனே என்று வாதவூராரும் நம்பினார்; மன்னனும் நம்பினான். இதனால், மனம் வருந்திய மன்னன் திருவாதவூராருக்கு வேண்டிய உபசாரங்கள் செய்து அவர் விருப்பம் போல நடந்து கொள்ள உதவினான். அதன் பின்னர், மதுரையிலிருந்து புறப்பட்ட திருவாத வூரர், 'தில்லைக்கு வருக' என்று பணித்த; திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் வீற்றிருந்த ஞானாசிரியரின் கட்டளைப்படி, தில்லைக்குப் புறப்பட்டார். வழியில் பல தலங்களுக்கும் சென்று விட்டு இறுதியாகத் தில்லை வந்து சேர்ந்தார்.

மாணிக்கவாசகரின் உணர்ச்சிக் கனிவை உணர்வதற்கு மேற் கூறப்பட்ட நிகழ்ச்சிகளைத் தெரிந்திருத்தல் நன்று. மிகச் சாதாரண மனிதராகிய தம்மை இறைவனே ஞானாசிரியர் வடிவேற்று வலிய வந்து ஆட்கொண்டான் என்ற அவருடைய எண்ணமும், அப்படி ஆட்கொள்ளப்பட்ட அடிமைக்கு உதவுவதற்காக அந்த இறைவனே குதிரைச் சேவகனாக வந்தான் என்ற அவருடைய நம்பிக்கையும், தமக்காகவே அவ்விறைவன் மண் சுமந்து பிரம்படி பட்டான் என்ற அவருடைய தீர்மானமும் அவரை இறைவனிடத்தில் அளவிடற் கரிய பக்தி கொள்ளச் செய்தன. முற்றும் துறந்த முனிவர்களாலும் கற்றுவல்ல பெரியோர்களாலும் அடைய முடியாத இறையருள் தமக்கு எளிதாக, வலிய, கிடைத்தது என்ற அவருடைய எண்ணம் அந்த பக்தியை மிகமிக ஆழமானதாகவும் நெகிழ்ச்சி நிறைந்ததாக வும் ஆக்கிவிட்டது. அகிலங்களுக்கெல்லாம் தலைவனாகிய ஆண்ட வன் மிகமிகச் சிறியவனாகிய தமக்கு அருள் பாலிப்பதற்காக வலிய வந்து இந்தத் திருவிளையாடல்களைச் செய்தான் என்ற அவருடைய உணர்வு அவரை இறை பக்தியிலே மெழுகாக உருகச் செய்து விட்டது.

## திருவெம்பாவை

இதிலுள்ள தத்துவார்த்தங்கள் 'பிரதிபா'வின் 'பாவை உணர்த் தும் தத்துவங்'களில் காணவும்.

திருவெம்பாவை ஒரு ஞான பொக்கிஷம். இறைவன் ஒளி மய மானவன். அவ்வாறு ஒளி மூலம் அவனை வணங்குவோருக்கு ஞான ஒளியைக் கொடுப்பான் என்று விளக்குகிறார் மாணிக்க வாசகர்.

எல்லா உயிர்களுக்கும் தோற்றமான இறைவனின் புகழை வைகறைப் பொழுதினிலே நீராடிப் பண்ணோடு திருவெம்பாவை

யைப் பாடுவதோ படிப்பதோ நம் உள்ளத்தை அமைதியாக இருக்கச் செய்யும். நம்மிடம் மறைந்திருக்கும் ஆன்ம சக்தியை இது வெளிப்படுத்தும். பல முறை படிப்பின் தத்துவ சித்தாந்தக் கருத்துகள் நன்கு புலனாகி வாழ்வினையை நீக்கி அருளும்.

மகளிர் ஒருவருக்கொருவர் இறை பக்தியை நகைச் சுவையுடன் உரையாடுவதாக நாடகபாணியில் அமைந்துள்ள தெய்வத் தன்மை பொருந்திய இப்பாவை தமிழகத்திலுள்ள சிவாலயங்களில் மார்கழி அதிகாலையில் பண்ணோடு பாடப்பட்டு வருகிறது.

இப்பாவையை சேர சோழ பாண்டிய மன்னர்கள் தங்கள் முடி சூட்டு விழாக்களில் ஓதச் செய்தனர். சயாம் நாட்டு முடி சூட்டு விழாவிலும் இது இடம் பெற்றது. இப்பாவையை திருவண்ணாமலையில் தான் மாணிக்கவாசகர் இயற்றினார் என்பதற்கு கீழ்க்கண்ட அடிகளே சான்று

"ஆதியும் அந்தமும் இலா அருட்பெரும் சோதி"
"கேழில் பரஞ்சோதி"
"மாலறியா நான்முகனும் காணாமலை"
"அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்

## மாணிக்க வாசகர் சம்பந்தப்பட்ட இடங்கள்

### திருவாதவூர்

மாணிக்கவாசகர் பிறந்தத் தலமான வாதவூர் மதுரைக்கு வடகிழக்கில் 14 மைலிலுள்ளது. இங்குள்ள தல விருக்ஷம் மகிழ மரம். இறைவன் பெயர் வாதபுரீஸ்வரர். இறைவி ஆரணவல்லி, மேற்கு பிராகாரத்தில் மணி வாசகருக்கு சந்நிதி இருக்கிறது. சிலா ரூபத்தில் கையில் சுவடி ஜபமாலையுடன் நிற்கிறார்.

எல்லா தலத்திலும் அம்பிகை சந்நிதி இறைவனின் இடப்புறம் இருக்கும். இங்கு வலப்புறம் இருப்பது ஒரு விசேஷம். மதுரையிலும் அவினாசியிலும் இப்படியே. கோவிலுக்கு இரண்டு பர்லாங் தூரத்தில் அவர் பிறந்த இடத்தில் ஒரு சிறு கோயில் கட்டப்பட்டுள்ளது.

### மதுரை

மாணிக்கவாசகர் வரலாறு பெரும்பாலும் நடைபெற்ற இடம் மதுரையே. அரசன் விரும்பியபடி அமைச்சர் பதவி ஏற்று அவனுக்காக குதிரைகள் வாங்கச் சென்று இவருக்காக இறைவன் நரிகளைப் பரிகளாக்கி வைகையில் வெள்ளம் வரச்செய்து பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படிபட்டு லீலைகள் நடத்தியதெல்லாம் மதுரை மண்ணில் தான்.

இவை மதுரையில் விழாவாக நடைபெறும் போது திருவாத வூரிலிருந்து மாணிக்க வாசகர் மதுரை வந்து நான்கு நாட்கள் தங்கி பின் ஊர் திரும்புகிறார்.

மதுரையில் பிட்டுத் தோப்பு என்றே ஒரு இடம் இருக்கிறது.

## திருப்பெருந்துறை
## (ஆவுடையார் கோவில்)

இங்குதான் குருந்த மரத்தடியில் குருவடிவமாக இறைவன் மணிவாசகரைத் தடுத்தாட் கொண்டான். அறந்தாங்கிக்கருகி லுள்ள இந்த ஊர் இப்போது புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்திருக்கிறது.

இங்கு ஆவுடையார் மட்டுமே இருக்கிறது. பாணம் என்ற லிங்கபாகம் கிடையாது. அதே மாதிரி அம்பிகை உருவத்திற்குப் பதில் பீடம் மட்டுமே இருக்கிறது. சுவாமி பெயர் ஆத்மநாதர் அம்பிகை பெயர் யோகாம்பாள். இறைவனும் இறைவியும் அருபமாக இருப்பதால் இங்கு நந்தி கிடையாது, கொடிமரம் கிடையாது. சண்டிகேஸ்வரரும் இல்லை.

இக்கோவிலில் பிரதான்யம் எல்லாம் மணிவாசகருக்கே. உத்ஸவம் கூட அவருக்குத்தான். தியாகராஜ மண்டபத்தில் எதிரும் புதிருமாக இரு மாணிக்க வாசகர்கள் இருக்கிறார்கள். ஒன்று அரச கோலம், மற்றொன்று துறவு கோலம். இம்மண்டபத்தின் கொடுங் கைகள் சிற்ப உலகில் மிகப்பிரசித்தமானவை.

இரண்டாவது பிராகாரத்தில் பஞ்சாக்ஷர மண்டபத்தின் தூண் கள் ஒன்றில்தான் குதிரைச்சாமி இருக்கிறார். இவருக்கு பூஜை உண்டு மாணிக்கவாசகர் சன்னிதிக்கு எதிரில்தான் அம்பிகை சன்னிதி இருக்கிறது.

---

இத்தலம் பற்றிய முழு விவரம் 'பிரதிபா' வின் "ஆறுதாரங் களில் அம்பிகை" யில் காணவும்.

# மாதுர்யம், நாயக-நாயகி பாவம் 8

பக்திமார்க்கத்தில் ஒரு முறையைப் பின்பற்றுபவர் இதர மார்க்கத்தை பின் பற்றக்கூடாது என்பதில்லை. மாதுர்யம் எனப்படும் நாயக நாயகி பாவத்தை ஆழ்வார்கள் நாயன்மார்கள் எல்லோருமே கடைபிடித்திருக்கிறார்கள்.

ஞானநிலை உயர்ந்தா? பிரேம நிலை உயர்ந்ததா? இரண்டும் உயர்ந்ததே. இரண்டின் மூலமும் இறை அருளைப் பெறலாம். ஞான நிலையில் தன் பேச்சு பிரேமை நிலையில் பெண் பேச்சு. கல்வியறிவு பெறாத கண்ணப்பரை ஞானத்தின் திருவுருவாய் நான் மறையின் தனித் துணையாய் விளங்கிய ஞானசம்பந்தர் திருக்காளத்தியில் பன்முறை விழுந்தெழுந்து வணங்கினார் என்றால் இவ்விரண்டில் எது பெரிது என்பதைப் புரிந்துக் கொள்ளலாம். ஞானம் ஈசன் பால் அன்பே என்றனர். ஞானம் உண்டார் என்று சேக்கிழார் கூறுவது இந்த உண்மையை வலிப்படுத்தும். திருநாவுக்கரசர் பிரேம நிலையில் பாடியபாட்டு இங்கு குறிப்பிடத்தக்கது.

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்.

பெயர் ஊர் முதலிய விவரங்களைத்தான் கேட்டாள். நேரில் இன்னும் பார்க்கக்கூட இல்லை. ஆனால்

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!

தலைவன் தலைவி சந்தித்து காதல் கொள்வது பற்றிய பாட்டுகளில் மக்களிடையே விருப்பு இருப்பதைக் கண்ட ஆழ்வார்களும் நாயன்மார்களும் தெய்வ காதலுக்கு பக்தியுணர்ச்சியை உரிய வகையில் பயன்படுத்தத் தொடங்கினார்கள்.

இதன்படி அடியார் காதலியாகிறார். இறைவன் நாயகன் ஆகிறான். இக்காதல் கவிதைகளில் பல துறைகள் உண்டு. தலைவனின் அன்பைப் பெற விழைதல், அன்பு கிட்டாமையால் ஏங்குதல் அதனால் உடல் மெலிந்து வாடுதல். மகளின் நிலை கண்டு தாயும் செவிலித்தாயும் கவலையுறுதல். பறவை முதலியவற்றை தலைவி தலைவனிடம் தூது அனுப்புதல். அன்பு வாய்க்காத ஏமாற்றத்தால் மடல் ஏற எண்ணுதல். இம்மாதிரி பக்தி காதல் கொண்டு ஞானசம்பந்தர்,

நற்பதங்கள் மிக அறிவாய்
　　நான் உன்னை வேண்டுகின்றேன்
பொற்ப மைத்தவாய் அலகின்
　　பூவை நல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ் சேர் மறையாளன்
　　திருத் தோணிபுறத் துறையும்
விற்பொலி தோள் விகிர்தனுக்கென்
　　மெய்ப்பயனை விளம்பாயே'

என்று கிளியைத் தூது விடுகிறார்.

மாணிக்கவாசகர் இறைவனிடம் குயிலைத் தூது விடுகிறார்.

கீதம் இனிய குயிலே
　　அந்த மிலான் வரக் கூவுவாய்
பெருந்துறை மேய தென்
　　பாண்டி நாடனைக் கூவுவாய்
தாவி வரும் பரிப்பாகன்
　　தாழ்சடையோன் வரக் கூவுவாய்

என்று இறைவன் நரியைப் பரியாக்கிய அற்புதத்தையும் மண் சுமந்த பொன் மேனியையும் குருந்த மரத்தடியிலே குருநாதனாக வந்து ஆட்கொண்ட தகைமையையும் நினைத்து நினைத்து உருகி குயிலை நோக்கி,

முந்தும் நடுவும் முடிவும் ஆகிய
　　மூவர் அறியா
சிந்தூரச் சேவடி யானை
　　சேவகனை வரக் கூவுவாய்

என்கிறார்.

**சிவாகமங்கள் வழி**

சிவாகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்கள் உடையன. இந்நான்கையும் இந்நால்வரும் வாழ்ந்து காட்டியிருக்கிறார்கள்.

சரியை

அறிவு கொஞ்சம் இருந்தால் போதும். உடல் வலிவு அதிகமாகத் தேவைப்படும். 75 சதவிகிதம் உடல் பலமும் 25 சதம் அறிவு பலமும் கொண்டதை சரியைத் தொண்டு எனலாம். தன்னை மோக்ஷத்திற்குத் தயார் செய்து கொள்ளும் நிலை.

கிரியை

உடலும் அறிவும் சமமாக இணைந்து செய்ய் வேண்டிய தொன்று அகத்தும் புறத்தும் பூஜை செய்தல். அறிவு வேலை செய்ய வேண்டும் உடலும் வேலை செய்ய வேண்டும்.

யோகம்

எழுபத்தைந்து சத விகிதம் அறிவு வேலை செய்ய வேண்டும். உடல் உழைப்பு யோக நிலையில் அதிகம் தேவைப்படுவதில்லை.

ஞானம்

பரம்பொருளோடு ஒன்றிய நிலை. அவன் வேறு நான் வேறு என்பது இல்லை. சரியையினல் வருவது அறிவு விளக்கம். கிரியையினல் வருவது அறிவு விளக்கம். யோகத்தினல் வருவதும் அதுதான்.

விரும்பும் சரியை முதல்
மெய்ஞ் ஞானம் நான்கும்
அரும்பு, மலர், காய்கனி
போல் அன்றோ பராபரமே

என்று தாயுமானவர் குறிப்பிடுகிறார்.

## சமயக் குரவர்கள்

நான்கு பேரும் பூதவுடலை நீக்காமலே (இறவாமலே) இறைவனடி சேர்ந்தனர். இதைப் பற்றி பாம்பன் சுவாமிகள் (குமரகுருதாச சுவாமிகள்) தன் பாடல் ஒன்றில் குறிப்பிடுகிறார்.

எடுத்த தூலத்தினை விடுத்தரிய பரகதியை
எய்து நெறி உண்டென்பதற்கு
ஏறுதி, மெய்ப்பொருள், பெருமிழலை யார்கரி
எடுத்த தூலத்தோடு அருள்தான்
அடுத்த முதம் உற்றதற்கு ஆரூரர் சோதியில்
அடைந்ததற்கு அமண சிங்கம்
அமல லிங்கத்துழி அடைந்தற்கு ஆள் அரையர்
ஆக்கை வேறு ஆயதற்கு

நடித்த திரு நந்தனர் சாட்சி முத்தாவரமும்
ஞாலமிசை விழாமலே
ஞானவெளி உற்றதற்கு ஏசில் சுசர் வாதவூர்
நாயகனர் கரியாம் உப
நிடதத்தின் முடிவான எம்
பெரும் இவைகளில் உனை
நினைக்கும் எற்கு ஏது வருமோ
நித்தநக ராலய சிதானந்த சோதியே
நிட்சளானந்த குகனே.

பூத உடலோடு இறைபருளில் கலந்தவர்
சுந்தர மூர்த்தி சுவாமிகள்
பூத உடலோடு சோதியில் கலந்தவர்
திருஞான சம்பந்தர்
பூத உடம்புடன் சிவலிங்கத்துடன்
ஐக்கியமானவர் திருநாவுக்கரசர்
பூதவுடலு டனேயே பரம்பொருளுடன்
ஐக்யப்பட்டவர் மாணிக்கவாசகர்

இப்படி பல்வேறு நெறிகளைச் சொல்லி அவற்றுள் தமக்கு ஏது வருமோ என்று ஏங்கி மரணமில்லாப் பெருவாழ்வே வேண்டும் என்கிறர் பாம்பன் சுவாமிகள்.

இதுவரை பலவகை பக்தி மூலம் இறைவனை வழிபட்டு ஞானம் பெற தகுதி ஏற்படுத்திக் கொள்ளும் வழிகள் சொல்லப்பட்டன. சமய குரவர்கள் நால்வர் தோத்திரங்கள் மூலம் காட்டியவழி இவை.

ஞானம் வந்தபின் அதை அனுபவித்து அறிய சாத்திரங்கள் கூறும் முறையை சந்தான குரவர்கள் நால்வர் கூறுகின்றனர். இனி அதைப் பற்றி அறிவோம்.

சமயாசாரியர்கட்குப் பின்னர் நம்பியாண்டார் நம்பிகளாலும் சேக்கிழாராலும் திருமுறை பன்னிரண்டும் நிரம்பி விளங்கின. அதனல் அவர்கள் காலம் வரையில் சமயாசாரியர்களது திருவருள் நெறி அவ்வண்ணமே இனிது நிகழ்ந்து வந்தது. ஆயினும் சேக்கிழார் காலத்தை அடுத்துத் தமிழ்நாட்டில் கேவலாத்துவிதம், விசிட்டாத்துவிதம் முதலிய தத்துவ வாதங்கள் மிகுந்து மதாசாரியார்கள் எனப்பெயர் பெற்றவர்கள் வேதவியாசர் செய்த பிரம்ம சூத்திரத்திற்கு எழுதிய பாஷ்யங்கள் சிறப்புற்று விளங்கித் தமிழ் நாட்டிலும் சைவ நன்னெறி பொலிவிழக்கும் நிலை உண்டாயிற்று. அப்பொழுது தோன்றி, பல சாத்திரங்கள் வாயிலாகவும், உபதேச வாயிலாகவும் சைவசமயத்தை நிலை நாட்டினர்கள் சந்தானசார்யர்கள்.

சமயக்குரவர் நால்வரைப் போல சந்தானக் குரவர்கள் நால்வர் உண்டு அவர்கள் மெய்கண்டார், அருள் நந்திசிவம். மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம்.

திருப் பெண்ணுடகத்தில் தோன்றிய மெய்கண்டார் பரஞ்ஜோதி முனிவரால் ஆட் கொள்ளப்பட்டவர். இவர் இயற்றிய நூல் "சிவ ஞான போதம்". சைவ சித்தாந்தத்தின் பொக்கிஷம் என்று இது போற்றப்படுகிறது.

40 வரிகளில் 216 சொற்களில் 624 எழுத்துகளில் சிவஞான போதம் அடங்கியுள்ளது. ஆகவே மிகமிக சுருக்கமான நூல், ஆனால் பொருள் விஷயத்தில் மிகமிக விரிந்த நூல். 12 சூத்திரங் கள் 40 வரிகளில் அடங்கி விடுகின்றன. இவை பதி, பசு, பாசம் இம்மூன்றையும் தெளிவாக விளக்குகின்றன.

மெய்கண்டார்

மலர் தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதை
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண்ணிருள் தீர்ந்த
தருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனி கணத்தளித்த
உயர் "சிவஞான போதம்" உரைத்தோன்

---

*சைவ சித்தாந்தத்தின் முதலாசிரியர் சிவபெருமானே இவர் நந்தி தேவருக்கு உபதேசித்தார். நந்தியின் சிஷ்யர் சனற்குமாரர் இவர் சிஷ்யர் சத்திய ஞானதர்சனிகள். இவர் மாணாக்கரே பரஞ் சோதி மகான். இவர்கள் எல்லோரும் திருக்கையிலையிலேயே இருப்பவர்கள். ஆகவே அகசந்தானுச்சார்யர் எனப்படுவர்.

மெய்கண்டார், அருள் நந்திசிவம், மறை ஞான சம்பந்தர், உமாபதிசிவம் இவர்கள் இவ்வுலகில் விளங்கினமையால் புற சந்தானுசார்யார்கள் எனப் பட்டனர்.

பெண்ணைப் புனல் சூழ் வெண்ணெய்ச் சுவேதனன்
பொய் கண்டகன்ற மெய் கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவராடி புனைந்த தலைமையோனே

—சிவஞான போதம்

(சிறப்புப்பாயிரம் மெய்கண்டார் துதி)

தில்லை 3000 கடந்தை 6000 என்பது பழமொழி. சிதம்பரம் 3000 தீக்ஷிதர்களைக் கொண்டது. கடந்தை என்ற பெண்ணாகடம் 6000 அந்தணர்களைக் கொண்டது. இவர்கள் வசித்த அழகர் ஏரி என்ற பகுதியில் மெய்கண்டார் அவதரித்தார். இப்போது அரியராவி என்று மாறிவிட்டது. நீவாநதி என்ற வெள்ளாறு கரையில் பெண்ணாகடம் உள்ளது. மறைஞான சம்பந்தர் வசித்தத் தலமும் இதுவே.

அச்சுத களப்பாளர் என்பவருக்கு பிறந்த மெய் கண்டார் திருவெண்ணெய் நெல்லூரில் தன் தாய் மாமன் வீட்டில் வளர்ந்து வந்தார்.

வானவழியே சென்ற பரஞ்சோதி முனிவர் வீதியில் விளையாடிக் கொண்டிருக்கும் மெய்கண்டாரின் பரிதாப நிலையை உணர்ந்து இறங்கி வந்து அவருக்கு உண்மை ஞானம் உணர்த்தி உபதேசம் செய்து மெய்கண்டார் என்ற தீக்ஷாநாமம் அருளினர். மெய் கண்டார் தான் பெற்ற சிவஞானத்தை சிவஞான போதமாக வகுத்து தம் சீடர்களுக்குப் போதித்தார்.

இவர் குலத்தின் குருவாக விளங்கியவர் அருள் நந்தி சிவம். சகலாகம பண்டிதர் என்று அனைவராலும் போற்றப் பெற்றவர். மெய்கண்டார் பெருமைகளைக் கேள்வியுற்று பொருமை கொள்கிறர். தன்னை மெய்கண்டார் காண வரவில்லையே என்று சினந்து தானே அவரைக் காணப் போகிறர். கண்டதும் அவர் காலடிகளில் விழுந்து தன்னை ஆட்கொள்ள வேண்டுகிறர். மெய்கண்டார் அவரைத் தன் சீடராக ஏற்று உபதேசம் செய்கிறர்.

தந்தைக்கு குருவாக விளங்கிய அருள்நந்தி சிவம் மைந்தர்க்கு சீடரானர்.

திருவெண்காட்டு ஈசன் திருவருளால் பிறந்ததால் மெய்கண்டாரின் பிள்ளைத் திருநாமம் சுவேதவனப் பெருமான் என்பது.

இவர் பிறவியிலேயே சாமுசித்தராக விளங்கினர். (சாமுசித்தர் என்பது முன் பிறவிகளில் சரியை கிரியை யோகங்களைச் செய்து தவ விசேடத்தால் பூர்வ ஞானத்தோடு பிறந்து வீடு பேறு ஒன்

றையே விரும்பி இருப்பது இத்தகையவர்க்கு சிவபெருமான் தானே நேரில் வந்து அருள் புரிவார்.)

(பெண்ணாகடத்திற்கு புஷ்பவனம் என்ற பெயரும் பள்ளி கொண்டான் பட்டணம் என்ற பெயரும் உண்டு. பள்ளி கொண் டான் பட்டணமே பெண்ணாகடம் என்றாகிவிட்டது. பள்ளி கொண்ட பெருமாள் பரிமளரங்கன் கோயில் இன்னும் பெண்ணாக டத்தில் இருக்கிறது.)

மெய்கண்டார் சுருக்கமான தன் நூல் சிவஞான போதத்தில் மாபெரும் விஷயங்களை வெளியிட்டிருப்பது கடுகைத் துளைத்து கடலைப் புகுத்தியுள்ள 'திருக்குறள்' யுக்தியே தான்.

திருவள்ளுவர் காணப்படும் பிரபஞ்சத்தைக் கொண்டு காணப் படாத பொருளின் உண்மையை விளக்குவது போல மெய்கண் டாரும் விளக்கியிருக்கிறார்.

'அ' என்ற எழுத்து இல்லை என்றால் வேறு எந்த எழுத்துமே இல்லை. அது போல பதி இல்லையாயின் வேறு எந்த உயிரும் உலகில் இயங்காது என்கிறார் மெய்கண்டார்.

ஒன்று என்றது ஒன்றே காண்
ஒன்றே பதிபசுவாம்
ஒன்று என்ற நீ பாசத்தோடு
உளை காண் ஒன்று இன்றால்
அக்கரங்கள் இன்றாம் அகர
உயிர் இன்றேல்
இக்கிரமத்துஎன்றும் இருக்கு

சிவஞான போதத்திற்கு திருவாவடுதுறை ஆதீனம் மாதவச் சிவஞான யோகிகள் 'மாபாடியம்' என்ற உரை எழுதியிருக்கிறார்.

இறைவன் நம்மை இந்த ஸ்திதியிலாவது வைத்திருப்பதற்கு நாம் அவருக்கு நன்றி சொல்ல கடமைபட்டவர்கள்.

தன் சிவஞான போதம் 12 வது சூத்திரத்தில் மெய்கண்டார் இதைக் குறிப்பிடுகிறார்.

தன்னை அறிவித்து தான் தானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானே தானாச் செய்தும் தைவமென்றும் தைவமே
மானே தொழுகை வலி

## சிவஞான போதம்

சிவஞானபோதம் விளக்கும் செம்பொருள் பெரிதும் சிறப்பு உடையது. சைவசித்தாந்தம் முப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டது. பதி, பசு, பாசம் என்பன. பதி பேரறிவுப்பொருள்: பிறர் அறிவிக்கவேண்டாது எல்லாவற்றையும் தாமே அறிவதோடு பிறருக்கு அறிவுக்கவும் வல்லது. பசுக்கள் எனப்படும் உயிர்கள் அறுதியானவை; அறிவித்தால் அறியுந் தன்மையுடையன. பாசம் என்பது தாமேயும் அறியாது; அறிவித்தாலும் அறியாது. இவை மூன்றும் நித்தியமாம், முதலும் முடிவுமின்றி, தோற்றமும் இறுதியு மின்றி விளங்குவன. பாசத்தை இறைவன் உயிர்களுக்குக் கருவி களாகத் தந்துள்ளான். தத்துவம் என்பது கருவிகளையே குறிப்பன. உயிர்கள் இக்கருவிகளைக்கொண்டு அறிவைப் பெருக்கி முடிவில் இறைவனை அடைந்து இன்புறும். இவற்றை எல்லாம் மெய்கண்டார் சுருங்கிய யாப்பில் 12நூற்பாக்களுள் விளக்கியருளுகின்றார். சிவஞான போதத்திற்கு இவர் மாணாக்கர் அருணந்தி சிவாசாரியார் வரைந்த பாடல் வடிவத்திலாகிய பேருரையே சிவஞானசித்தியார் என வழங்கப்பெறுவது.

### பன்னிரு சூத்திரங்கள்

முதல் சூத்திரம்: கடவுள் இருத்தலை உணர்த்தும் பதி உண்மைக்குப் பிரமாணம் கூறுகிறது.

2-ம் சூத்திரம்-ஆணவம் கன்மம் மாயை என்றும் மும்மலங் களாகிய பாச உண்மையை விளக்குகின்றது.

3-ம் சூத்திரம்-ஆன்மாவாகிய பசு உண்மைக்கு பிரமாணம் கூறுகிறது.

(இம்மூன்றும் பிரமாண இயல்)

4-ம் சூத்திரம் ஆன்மாவாகிய பசு இலக்கணத்தையும்

5-ம் சூத்திரம் மும்மலங்களாகிய பாச இலக்கணத்தையும்

6-ம் சூத்திரம் கடவுளாகிய பதி இலக்கணத்தையும் விவரிக் கின்றன, (இம்மூன்றும் இலக்கண இயல்)

7-ம் சூத்திரத்தில் ஞானத்தை உணர்வதற்கிணைய ஆன்மா வாகிய அதிகாரியின் இயல்பும்

8-ம் சூத்திரத்தில் ஞானத்தில் ஞானத்தினை உணரும் முறையும்

9-ம் சூத்திரத்தில் ஞானத்தை சாதிக்கும் முறையும் தெளி வாக்கப்படுகின்றன. (இம்மூன்றும் சாதன இயல்)

பத்தாம் சூத்திரம் பாச நீக்கம் பற்றியும்

பதினொன்றாம் சூத்திரம் சிவப்பேறு பற்றியும்

பன்னிரண்டாம் சூத்திரம் சிவன் முக்தராகிய அனைத்தோர் தன்மை குறித்தும் விளக்குகின்றன.

(இம்மூன்றும் பயன் இயல்)

இப்பன்னிரண்டு சூத்திரங்களில் ஒவ்வொன்றும் பல அதிகரணங்களைக் கொண்டதாக விளங்குகிறது.

நூலில் கூறப்படும் பொருள் அதில் ஏற்படும் சந்தேகங்கள் இதற்கு பிறர்கூறும் கருத்துக்கள் சித்தாந்தத்தின் முடிவான கருத்து இக்கருத்துக்களுக்கிடையேயுள்ளத் தொடர் இவ்வைந்தும் அதிகரணம் எனப்படும். இவ்வைந்தும் ஆங்கிலத்தில்

(Thesis) விஷயம் (Doubt) சந்தேகம் (Anti thesis)பூர்வ பட்சம்; (Symthesis) சித்தாந்தம் (Consistency) தொடர்பு.

இத்தகைய அதிகரணங்கள் 39உள்ளன. இதிலுள்ள விஷயங்கள்

(1) உலகம், தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலை உடையது; அம்முத் தொழிலும் செய்பவன் உருத்திரனாகிய அரனே; மும்மூர்த்திகளுள் ஏனைய இரு மூன்று அதிகரணங்கள் கொண்டது முதற் சூத்திரம்.

(2) இறைவன் உயிர்களின் பால் இரண்டறக் கலந்து நிற்பான்; உயிர்களுக்கு வினைப்பயன்களை ஊட்டுபவன் இறைவனே; உயிர்கள் அச்சு மாறியே பிறந்தும் இறந்தும் வரும்; இறைவன் எங்கும் எதிலும் பரவி நிற்கும் சர்வ வியாபகன் என்னும் நான்கு அதிகரணங்களைக் கொண்டது இரண்டாம் சூத்திரம்.

(3) இல்லை என்கின்ற அறிவுடனே சொல்லுகையால் அறிவாகிய உயிர் உண்டு; 'எனது உடல்' என்று பொருட் பிறிதின் கிழமையாகச் சொல்லுகையால் உடற்கு வேறாக உயிர் உண்டு; மெய், வாய், கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளையும் கொண்டு சுவை, ஒளி ஓசை, நாற்றம் என்னும் ஐந்து புலன்களையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் தனித்தனியே அறிகிற ஐம்பொறிகளுக்கும் வேறாக உயிர் உண்டு; கனவு உடலைவிட்டு நனவு உடலில் வருவதனால், அக்கனவு உடலாகிய சூக்ஷ்ம தேகத்திற்கு வேறாக உயிர் உண்டு; உறங்கும் பொழுதும் பிராணவாயு இயங்கா நிற்கவும், உடம்புக்கு நுகர்ச்சியும் தொழிலும் நிகழாமையால் உறங்காத பொழுது நுகர்ச்சியும் தொழிலும் உடையதாகப் பிராணவாயுவுக்கு வேறாக உயிர் உண்டு; மறந்து மறந்து, நினைந்து உணர்ந்து வருவதால் மறவாமலே எதனையும் அறிகின்ற பிரம்மத்திற்கு வேறாக

உயிர் உண்டு; எல்லாத் தத்துவங்களுக்கும் தனித்தனியே வேறு வேறு பெயர் வழங்கி வருவதனுல், அந்த அந்தத் தத்துவங் களுக்கும் வேருகத் தனியே ஓர் உயிருண்டு என, ஏழு அதிகாரங்களை உடையது மூன்ரும் சூத்திரம்.

(4) மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அகக் கருவி களாகிய அந்தக் கரணங்களுக்கு உயிர் உடன் கூடினுலன்றித் தொழில் நிகழாமையினுல், அவ்வந்தக் காரணங்களுக்கு வேருக உயிர் உண்டு; ஆணவ மல மறைப்பினுல்தான் உயிருக்கு அறி வில்லை; உயிர்கள் கேவலம் சகலம்' சுத்தம் என்றும் மூன்று அவஸ்தைகளைப்படும் என மூன்று அதிகரணங்களாக அமைந்தது நான்காம் சூத்திரம்.

(5) உயிரால்தான் தத்துவங்களெல்லாம் தொழில்படும்; இறை வனுல்தான் உயிர்களெல்லாம் அறியும் என்னும் இரண்டு அதி கரணங்களைக் கொண்டது ஐந்தாம் சூத்திரம்.

(6) உயிரின் அறிவினுல் சுட்டி அறியப்படும் பொருள்கள் எல்லாம் அழியும்; உயிர்களால் சுட்டிறந்து அப்பிரமேயமாக உணரப் படுபவனே இறைவன் என இரண்டு அதிகரணங்களை உட் கொண்டது ஆரும் சூத்திரம்.

(7) இறைவன் பாசத்தை அனுபவிக்க மாட்டான்; பாசம் இறைவனை அநுபவிக்காது; உயிரே இறைவனையும் பாசத்தையும் அநுபவிக்கும் என்னும் மூன்று அதிகரணங்களை உட்கொண்டது ஏழாம் சூத்திரம்.

(8) உயிருக்கு நல்லறிவு தவத்தினுல்தான் வரும்; உயிருக்கு ஞானுசிரியனுகப் போந்து அறிவுறுப்பவன் இறைவனே யாவான்; உயிர் ஐம்பொறிகளைப் பற்றிக் கொண்டு நிற்றலால் தன்னையும் தான் அறிய வல்லதன்று; உயிரானது ஐம்பொறிகளிலே பற்று அற்றல் தன்னையும் அறியவல்லதாகும் என நான்கு அதிகாரங்களைக் கொண்டது எட்டாம் சூத்திரம்.

(9) உயிரானது இறைவனின் ஞானத்தினுலேயே இறைவனைக் காணக்கூடும்; உயிர்க்குப் பாசமாகிய மலங்களில் பற்று அற்ருல் இறைவன் வெளிப்படுவான்; திருவைந்தெழுத்தைக் கணித்து இறைவனை வழிபடுவதனுல் மலவாதனை கழியும் என மூன்று அதிகா ணங்களை உடையது ஒன்பதாம் சூத்திரம்.

(10) இறைவனுடன் ஒன்ருகி நிற்க; உன்னுடைய தொழிலை எல்லாம் இறைவனுடைய பணி என்றே கருதிச் செய்க; என்னும் இரண்டு அதிகரணங்களாக அமைந்தது பத்தாம் சூத்திரம்.

(11) மெய்யுணர்வாளனாகிய சீவன்முத்தனுக்கு வருகிற இன்ப துன்பங்களை யெல்லாம் இறைவனே ஏற்றுக் கொண்டு அனுபவிப் பான்; இறைவனை மறவாமல் அன்புசெலுத்தி வந்தால் இறைவனோடு நாம் ஒன்று பட்டு இன்புறலாம் என இரண்டு அதிகரணங்கள் ஆக விளங்குவது பதினொன்றும் சூத்திரம்.

(12) ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் பற்றறக் களைக; சிவஞானச் செல்வர்களுடன் சேர்ந்து பழகி நலம் பெறுக; சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவபிரான் எனவே தெளிந்து நம்பி வழிபடுக; அங்ஙனம் வழிபடாமல் இருந்தால் வழி படாமையை விடுக என்னும் நான்கு அதிகாரங்களாகத் திகழ்வது பன்னிரண்டாம் சூத்திரம்.

இத்துணை அரும்பெரும் முடிவுகளையெல்லாம், இரு நூற்றுப் பதினாறு (216 சொற்களால், நாற்பது (40) வரிகளால், பன்னிரண்டு சூத்திரங்களில் வடித்தெடுத்துக் கூறும் சிவஞான போதம் என்னும் இவ்வரிய பெரிய தத்துவஞானத் தமிழ் நூலினைப் போன்று, சுருக்க மும் விளக்கமும் ஒருங்கே வாய்ந்த சிறந்ததொரு நூல், உலகில் வேறெந்த நாட்டிலும், வேறெந்த மொழியிலும் இல்லை என்பது தமிழர்களாகிய நாம் அனைவரும் நினைந்து மகிழ்ந்து பெருமிதம் கொள்ளுதற்குரியதாகும்.

## நூலின் அருமை

தத்துவ ஆராய்ச்சி நூல்கள் பெரும்பாலும் கடினமாகவே இருக்கும். அவ்வியல்பு நமது சிவஞானபோத நூலுக்கும் விலக்கு அன்று. இன்னோரன்ன நூல்களைச் சிறுகதை—தொடர்கதை—காதற் கதை முதலிய புதினக் கதைகள் போலக் கருதிப் படித்தல் இயலாது. “நூலாருள் நுல்வல்லார்” நுணுகி ஆராய்ந்து கற்றுணர்தற்குரிய நூலாகச் சிவஞானபோதம் திகழ்கின்றது. பல நூல்களையும் பயின்று ணர்ந்து கைவந்த பெரும் புலமை மிக்க அறிஞர் பெருமக்களே, அதனைக் கற்றுணர்தல் இயலும்.

சிவஞான போத நூற்பொருளை ஒரளவேனும் தெளிந்து உணர்ந்து கொள்ளுவதற்கு இலக்கியப் புலமை, இலக்கண அறிவு, தருக்கநூற் கல்வி, திருமுறைகளிற் செறிந்த சிந்தை, பல்வேறு சமய நுல்களிற் பயிற்சி, தத்துவ ஞானவேட்கை, பக்தியுணர்வு முதலியன பலவும் இன்றியமையாதனவாக உள்ளன.

பொய் கண்டார் காணுப்
புனித மெனும் அத்துவித

மெய்கண்ட நாதனருள்
மேவுநாள் எந்நாளோ?

என்கிறார் தாயுமானவ ஸ்வாமிகள். மெய்கண்டார் அமரரான நாள் ஐப்பசி சுவாதி திருநாளாகும்

## அருள் நந்தி சிவம்

மெய்கண்டார் குடும்பத்தின் குலகுரு. மெய்கண்டார் பிறக்க திரு வெண்காட்டீசன் வழிபட வழி சொன்னவர். சகலாகம பண்டிதர் எனப்பெயர் பெற்றவர்.

தன்னை வணங்க வேண்டிய பையன் தன்னிடம் பாராமுகமாக இருப்பது அவருக்கு என்னமோ போல் இருந்தது. ஒரே ஊரில் இருவருடைய பிரவசனமும் வெவ்வேறு இடத்தில் நடைபெற்றது.

ஒவ்வொரு நாளும் தன் வசனத்தைக் கேட்க வரும் கூட்டம் குறைந்து வருவதை அருள்நந்திசிவம் கண்டார். காரணம் மெய்கண்டார். பிரவசனத்திற்கு அவர்கள் போய் விடுவது தான் என்பது தெரிந்தது.

பல்லக்கைக் கொண்டு வரச் செய்து மெய்கண்டார் பிரவசனம் செய்யும் இடத்திற்குச் சென்றார். அப்போது மெய்கண்டார் ஆணவ மலம் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார். ஆணவமலம் பற்றி இவ்வளவு தான் விளக்கத் தெரியுமா என்று கேட்டார். ஆணவ மலமே நேரிடையாக என் முன் உங்கள் ரூபத்தில் வந்து நிற்கும் போது அதை இன்னும் நான் விளக்க வேண்டுமா? என்றார் மெய்கண்டார்.

சகலாகம பண்டிதருக்கு உடனே ஞானோதயம் உண்டாயிற்று. அச்சிறுவன் காலில் விழுந்து அவர் சிஷ்யர் ஆகி சிவதீக்ஷை பெற்று 'அருள் நந்திசிவம்' எனப் பெயர் பெற்றார்.

பரமேஸ்வரனே நெற்றிக் கண்ணையும் நீல கண்டத்தையும் மறைத்துக் கொண்டு தனக்கு குருவாக வந்தவர் என்று மெய்கண்டாரை இவர் தோத்திரம் செய்திருக்கிறார். மெய்கண்டாரின் ஆணைப்படி சிவஞான போதத்திற்கு உரையாகவும் வழி நூலாகவும் சிவஞான சித்தியாரை இயற்றினார்.

இந்நூல் பரபக்கம், சுபக்கம் என இரு பகுதிகளைக் கொண்டது. பரபக்கத்தில் உலகாயதம் முதல் பாஞ்சாராத்ரம் ஈறாக உள்ள பல் வேறு சமயங்களையும் அவ்வச் சமய நோக்கின் வழி நின்று ஆராய்ந்தும், சுபக்கத்தில் சித்தாந்த சைவ நோக்கின் வழி நின்று பிறசமயங்களின் ஐயங்களைப் போக்கியும் விளக்கியிருக்கிறார்.

சுபக்கம் — விருத்தப்பாவால் ஆன 328 பாக்களையுடையது இப் பகுதி. இப்பகுதிக்கு முன்னர் இரு தலைப்புக்கள் உள்ளன. ஒன்று பாயிரம்; பிரிதொன்று அளவையியல் என்பது. பாயிரம் ஆறு பாடல்களையுடையது. 'என்னை இப்பவத்தில் சேரா வகையெடுத்து' எனத் தொடங்கும் பாடல் இந்நூலாசிரியர் தம் குருமூர்த்தியாய மெய்கண்டாரிடத்துக் கொண்ட பேரன்பின் ஆழத்தை உணர்த்து வதாகும். 'கண்டநூல் ஓதிவீடு காதலிக்கும்' நம்மவர்க்கே இத் தகைய ஞானநூல்கள் தேவை என ஒரு பாடல் கூறுகின்றது. இதனால் 'ஞானசம்பந்தர், கண்ணப்பர் போன்ற அருளாளர்கள் எத்தகைய மெய்நூல்களைக் கற்று வீடுபேறு பெற்றார்கள்' என வினவுவார்க்கு விடையும் கிடைத்து விடுகின்றது. அடுத்துள்ள அளவையியல் பதினன்கு பாடல்களையுடையது. ஒரு பொருளை உண்டென்று தெளிவதற்குத் துணையாயினவற்றை அளவை என்பர். அவை காண்டல், கருதல், உரை முதலாகப் பலவகைப் படும். சைவ சித்தாந்தத்துள் கூறப்பெறும் முப்பொருள்களும் உண்டென உணர்வதற்கும் தெளிதற்கும் இவை கருவியாய் இருத் தலின் ஆசிரியர் இவற்றைக் கூறுவாராயினர்.

அடுத்துள்ள பகுதியே சுபக்கம் என்பதாகும். முதல் நூற் கருத் துக்களை எவ்வெவ்வாறு முகந்து நின்று விளக்கம் தரவேண்டும்' என்பதற்கு இலக்கணமாக அமைந்தது இப்பகுதியாகும். சிவஞான போத விளக்கவுரையாகவும், சுவை ததும்பும் ஓர் இலக்கியமாகவும் இப்பகுதி விளங்குகின்றது. பல பாடல்கள் படிப்போரை ஆழ நினையச் செய்து இறைவனிடத்து ஆற்றுப்படுத்தும் தகையன. இறைவன் உருமேனி தரித்துக் கொண்டு உய்விப்பதை விளக்கும் பகுதியும் அவையெல்லாம், 'நந்தம் கருமேனி கழிக்க வந்த கருணை யின் வடிவுகாணே' எனக் கூறும் பகுதியும், 'அண்டசம் சுவேதசங் கள்' 'நரர்பயில் தேயந்தன்னில்', 'வாழ்வெனும் மையல் விட' 'மானுடப் பிறவிதானும்', 'கருவினுள் அழிவதாயும்', 'அரிசனம் பூசி மாலை', 'பிணத்தினை ஒத்து வாழ்வோர்' என்றற்றொடக்கத்தன வாய முதற்குறிப்புடைய பாடல்கள் பலவும் இவ்வுண்மையை விளக்கும். 'வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச் சிப்பர், ஊனெடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ' என்பது போன்ற பகுதிகள் ஆசிரியரின் கழிவிரக்க மீதூர்வைக் காட்டுவனவாகும். உயிர் கருவிகளோடு கூடி ஐந்தவத்தைப் படு மாற்றிற்கு 'அமைச்சு அரசு ஏய்ப்ப' என முதலில் கூறியிருக்கும் உவமையை இவர் 'படை கொடுபவனி போதும்' எனத் தொடங் கும் திருப்பாடலில் விளக்கியிருக்கும் திறன் பன்முறையும் எண்ணி மகிழ்தற்குரியது. இதைப் போன்றே 'ஐம்புலவேடரின் அயர்ந்

தனை வளர்த்தென' என முதல் நூற்கண் உள்ள எட்டாம் நூற்பாவை இவர் 'மன்னவன் தன் மகன்' எனத் தொடங்கும் திருப்பாடலால் விளக்கியிருக்கும் திறமும் எண்ணி மகிழ்தற்குரிய தொன்றும்.

"சிவத்திற்கு மேலான தெய்வமில்லை. சித்தியாருக்கு மேலான சாஸ்திரமில்லை."

## மறைஞான சம்பந்தர்

சந்தான குரவர்களில் மூன்றாவதாக விளங்கியவர் மறைஞான சம்பந்தர். இவர் அனுபவ ஞானத்தோடு மறைகளை நன்குணர்ந்த காரணத்தினால் இப்பெயர் பெற்றார். அருள் நந்திசிவத்தின் மாணாக்கரில் இவர் முதன்மையானவர். இவர் வைதிக அந்தண மரபினர். இவர் மாணவர்களுக்கு உபதேசம் செய்து வந்ததன்றி நூல் எதுவும் எழுதவில்லை.

## உமாபதி சிவாச்சாரியார்

மறைஞான சம்பந்தரின் முக்கிய மாணாக்கர் கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியாரியார். இவர் தில்லை வாழ் அந்தணர்களில் ஒருவர். இவரை தில்லை அந்தணர்கள் விலக்கி விட்டார்கள். ஆதலால் இவர் தில்லைக்கு அருகிலுள்ள கொற்றவன்குடியிலேயே மடம் அமைத்துக் கொண்டு தில்லை வாழ் அந்தணர்கள். வியக்கும் படி பல அற்புதங்களை நிகழ்த்தினார். நடராஜப் பெருமான் உமாபதி சிவத்தைக் கொண்டே தன் விழாவுக்கு கொடியேற்றச் செய்திருக்கிறார்.

### சிவப்பிரகாசம்

இவர் சிவஞான போதம் சிவஞான சித்தியார் இவ்விரு நூல்களையும் சார்ந்து விளங்க 'சிவப்பிரகாசம்' என்ற நூலை 100 விருத்தப்பாக்களால் செய்தார். இந்நூல் 100 பாடல்களையுடையது. பொது இயல்பு, உண்மை இயல்பு என இரு பிரிவுகளை உடையது. நூலின் தொடக்கத்தே பாயிரம் என்ற பகுதியுள்ளது. இதன் கண் காப்பும் கூத்தப்பெருமான், உமையம்மை, விநாயகர், முருகர் ஆகியோருக்கு வணக்கமும் கூறப்பெற்றுள்ளன. அடுத்துத் தமக்கு முன்னிருந்த ஸ்ரீ கண்டர், நந்தியம்பெருமான், சனற்குமாரர், சத்திய ஞான தரிசினிகள், பரஞ்சோதி முனிவர், மெய்கண்டார், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர் ஆகிய அகப்புறச் சந்தான குரு முதல்வர்களுக்கும், அடுத்துத் தமக்கு நேர்முக ஆசிரியரான மறைஞான சம்பந்தருக்கும் வணக்கம் கூறுகின்றார் ஆசிரியர். இவ்

வாறு வணக்கம் கூறப்பெற்றுள்ள முறை இந்நூற்கே அமைந்த சிறப்பாகும். நுவலும் பொருள் உணர்த்துதற்கு முப்பத்தொன்பது அதிகரணங்களையும், எண்பத்தொரு வெண்பாக்களையும் ஆசிரியர் அருளியுள்ளார். நூற்பாக்களும் வெண்பாக்களும் சுவையுடையன. 'அமைச்சு அரசு ஏய்ப்ப' 'விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண் மூக்கு அளந்தறிந்து அறியா ஆங்கவை போல' உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவர்', 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல்' என வரும் உவமைகள் மிக எளிமையும் இனிமையும் உடையன. இவை நூற்பாக்களில் உள்ளன. இவை போன்றே பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும் எண்ணும் சுவையும் போல்', அரக்கொடு சேர்த்தியணைத்த அக்கற்போல், பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும் என்பன போன்ற உவமைகள் வெண்பாக்களிலும், ஊசல் கயிற்றால் தாய் தரையேயாந்துணை யான்' 'வேம்பு தின்ற புழுப்போல' என்பன போன்ற உவமைகள் அதிகரணங்களிலும் இருந்து அணி செய்கின்றன. தத்துவக் கூறுகளை இத்தகைய உவமைகளின் மூலம் விளக்கும் ஆசிரியரின் அருளுள்ளம் அறிதற்குரியது. 'ஐம்புலவேடர்', (தண்ணிழலாம்பதி, எனவரும் உருவகங்கள் மிகவும் நுட்பம் வாய்ந்தன.

இது தவிர திருவருட் பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மை நெறி விளக்கம் சங்கற்ப நிராகரணம் என்னும் ஏழு நூல்களைச் செய்தார். இவரது 8 நூல்களும் சித்தாந்த அஷ்டகம் எனப் பெயர் பெற்றவை.

## சைவ சித்தாந்தம்

சிவனைப் பற்றியும் சைவ நூல்களைப் பற்றியும் சிவனடி சேர்வதற்குரிய வழியையும் சொல்வது.

சித்தாந்தம்—சித்த—அந்தம் சைவ சாஸ்திரங்களின் முடிந்த முடிபைக் கூறும் நூல்கள்.

நம் வாழ்க்கையின் லட்சியம் இறைவனை அடைதலே. இதற்கு சாதகமாயுள்ளது. சமயம் கடவுள், உயிர், உலகம் இவை பற்றிய அறிவு சமயம் மூலம் ஏற்பட்டது. இம்மூன்றும் கடவுள் பொருளே முதன்மை பெற்று மற்றவற்றை இயக்குகிறது. இடம் மூன்று தான் பதி, பசு, பாசம். இவை அறிவனுபவத்திற் சிறந்த ஆன்றோர்களால் அநாதியாகவே உள்ள நித்ய பொருள்கள் என முடிவு செய்யப்பட்டன.

பதி பசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல் பசு பாசம் அநாதி
பதியினை சென்றணுகாப் பசு பாசம்
பதியணுகிற் பசுபாசம் நிலாவே

—திருமூலர்.

சைவ சித்தாந்தத்தில் பதி, பசு, பாசம் முக்கிய இடம் பெறுகின்றன. ஆதிசங்கரரும் தன் சௌந்தரிய லகரியில் பதி பசு பாசம் (பிரும்மம் ஜீவன் மாயை) என்கிற பதங்களையே உபயோகித்திருக்கிறார்.

சிரம் ஜீவந்நேவ க்ஷபித
பசு பாச வ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி
ரஸம் த்வத் பஜனவான்.

அம்பிகே உன்னை எவன் பஜிக்கிறானோ அவன் பசு பாசம் என்கிறவற்றின் சேர்க்கையால் உண்டாகிற விபரீதத்தைப் போக்கி கொண்டு சதா காலமும் பரமானந்தம் என்ற ரஸத்தையே ருசித்துக் கொண்டிருக்கிறான்.

பதி—இறைவன், பசு—உயிர் பாசத்தால் கட்டுப்பட்டு விளக்கம் பெறாது இருப்பது உயிர். ஆதலால் உயிரைப் பசு என்பர். இறைவன் பாசம் என்றும் அணுகப் பெறாததூய அறிவுள்ளவன். அதனால் தான் திருவள்ளுவரும் இறைவனை 'வாலறிவன்' என்கிறார் வாலறிவு என்பது மெய்யறிவு. பாசத்தால் கட்டுப்படாத அறிவு. இறைவனே செம்பொருள் என அழைக்கப்படுகிறான். செம்மை என்றால் குற்றமின்மை. ஆகவே சிவம் யாதொரு குறையுமற்றது. இச்சிவனை வழிபடும் சமயமே சைவசமயம்.

செம்பொருள் என்று சிவத்தை சொல்வானேன்?

1) கடவுள் உயிர்களின் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட பொருளாயினும் மெய்யுணர்வு நிலையில் தூய பேரின்பப் பொருளாய் அனுபவிக்க வருவது.

2) இத்தகைய உண்மை அனுபவத்தை இம்மையிலேயே அடைந்த, அடையும் பெருமக்கள் உள்ளனர் என்பது சைவத்தின் சிறப்பான அடிப்படை உண்மைகள்

குறைவிலா மங்கலக்
குணத்தன் ஆதலின்
நிறைமலம் அறுதியின்
நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென
அறிவின் மேலவர்

—காஞ்சிப் புராணம்

(மங்கலகுணம்—தோற்றக் கேடுகள் இன்றி நித்யமாக விகாரமின்றி செம் பொருளாக நிற்றல்)

தமிழ் நாட்டில் சமண பௌத்த மதங்கள் அரசரது ஆதரவால் செல்வாக்குப் பெற்ற காலத்தில் வேதநெறியும், அதன் துறைகளாகிய பல சமயங்களும் மறையும் நிலை அடைந்த பொழுது—திருஞானசம்பந்தர் முதலிய சமயாசாரியர் நால்வரும் சிறப்பாக—சம்பந்தரும், அப்பரும் வேதத்திற்குப் புறம்பான சமயங்களைக் களைந்து முன்போல வேத நெறி தழைத்தோங்கவும் மிகு சைவத்துறை விளங்கவும் செய்தார்கள். ஆகவே, வேத நெறியாகிய இந்து சமயத்தின் துறைகள் பலவும் சம்பந்தரையும் அப்பரையும் சிறப்பாகப் போற்றக் கடமைப் பட்டவை.

சமயாசாரியர்கள் வேத நெறி தழைத்தோங்கவும், மிகு சைவத்துறை விளங்கவும் செய்த பல்லாண்டுகளுக்குப் பின்னர் வேதாந்த சூத்திரத்தின் வழியும், அதன் உரைகளின் வழியும் தமிழ் நாட்டில் வேதநெறியில் சில குழப்பங்கள் தோன்றலாயின. அந்தச்சமயத்தில் தான் மெய்கண்டதேவர் தோன்றி அருணந்திதேவர், திருவதிகை மனவாசகங்கடந்தார் முதலிய மாணுக்கர்கட்கு உண்மையை உபதேசித்தும், 'சிவஞானபோதம்' என்னும் அரிய தத்துவ நூலைச் செய்து அதன் பொருளை விளக்கியும் வேத நெறி மிகு சைவத்துறை என்பவற்றின் உண்மைத் தத்துவங்களை இனிது விளங்கச் செய்தார். அங்ஙனம் விளக்கப்பட்ட சமயமே இன்று 'சித்தாந்த சைவம்' எனப் படுகின்றது. மெய் கண்ட சமயமாகிய இது சமயாசாரியர்கள் விளக்கியருளிய மிகு சைவத்துறையேயன்றி வேறன்று. ஆகவே, உண்மை வேத மதம் சித்தாந்த சைவமே ஆகையால், இதுவே உண்மை இந்து மதமாகும்.

மெய்கண்டாரிடமிருந்து அருணந்தி சிவம் முதலாக மெய்கண்ட சந்தானம் வளர்ச்சியுற்று, சித்தாந்த ஞானேபதேசமும் சித்தாந்த ஞான நூல்களும் பெருகின. இந்நூல்கள் சமயங்களை புறப்புறம், புறம், அகப்புறம், அகம் எனக் கொள்ளத்தக்க வகையில் வைத்து அவற்றில் உள்ள பொருந்தாக் கொள்கைகளை மறுத்து, சித்தாந்தத்தை நிலைநாட்டுகின்றன. புறப்புறம் முதலிய நான்கில் ஒவ்வொன்றிலும் ஆறு ஆறுக இருபத்துநான்கு மதங்கள் சொல்லப் படுகின்றன. அவை அனைத்திற்கும் அப்பாற்பட்டது மெய்கண்ட சமயமாகிய சிந்தாந்த சைவம்.

# சாத்திரங்களும் தோத்திரங்களும் 10

இச் சைவ சமயத்தின் இரு கண்களாக விளங்குவது சாத்திரங்களும் தோத்திரங்களும்.

சாத்திரங்களை இயற்றியவர் சந்தான குரவர் நால்வர்—மெய் கண்டார், அருள் நந்தி திவம், மறைதிருஞான சம்பந்தர், உமா பதிசிவம்.

தோத்திரங்களை இயற்றிய சமய குரவர் நால்வர்—திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க வாசகர்.

சாத்திரங்கள்

உந்திகளிறு உயர் போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றி
கொடி பாச மிலா நெஞ்சுவிடு
உண்மை நெறி சங்கற்பம் உற்று.

இவை மெய்கண்ட நூல்கள் என வழங்கப்படும். இவை பதினுன்கு. சிவஞானபோதம், திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார், சிவஞானசித்தியார், இருபா இருபது, உண்மை விளக்கம். சிவப் பிரகாசம் திருவருட் பயன், வினு வெண்பா, போற்றி பஃறொடை உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, சங்கற்ப நிராகரணம் இவைகள் எல்லாமே உபதேச நூல்கள்.

1) சிவஞான போதம்: மெய்கண்டார் அருளியது. 12 சூத்திரங்கள். அளவிற் சிறிது ஆனுல் அறிவு நூல்களின் முடிபெல்லாம் அறிவிப்பது. வேதாகமங்களின் முடிந்த முடிபை இந்நூல் ஒன்ருலே உணர முடியும்.

2) திருவுந்தியார்: திருவியலூர் உய்ய வந்த தேவநாயனர் இயற்றியது. ஞானுசிரியன் உபதேசத்தை கேட்டல், சிந்தித்தல் தெளிதல், நிஷ்டை, என்கிற நான்கு திறத்தால் அறிவதை விளக்குகிறது.

3) திருக்களிற்றுப்படியார்: ஆளுடைய தேவநாயனார் இயற்றியது. திருவுந்தியாரின் வழிநூல் இது. உபநிஷதம், பிரும்ம ஸூத்திரம், பகவத்கீதை இம்மூன்றுமே பிரதான நூல் என்கிறது

இறைவன் அருள் கிடைப்பதற்கான சாதனங்களை சிவதன்மம், சிவயோகம், சிவஞானம் என்று மூன்றாக வகைப்படுத்திக்கூறுகிறது

4) சிவப்பிரகாசம்: உமாபதி சிவம் இயற்றியது. சிவஞான போதத்தின் சார்பு நூல். திருக்கயிலாய பரம்பரையில் வழிவந்த சந்தான குரவர்கள் பற்றி பாயிரத்தில் குறிப்பிடபட்டுள்ளது. முதல் நூலாகிய சிவஞான போதத்திலும் வழி நூலாகிய சிவஞான சித்தியாராலும் எடுத்து விளக்காமல் குறிப்பாக கூறப்பட்ட பல பொருள்களை இது விளக்குகிறது.

5) திருவருட்பயன்: இது சைவ சித்தாந்த ஞான நெறியைத் தெள்ளத் தெளிய இனிது விளக்குவது. 100 குறட்பாக்களால் ஆனது.

மெய்கண்ட நூல்களில் இது ஒன்றே குறளால் ஆனது சைவ சித்தாந்த நுண் பொருளை அறிய வழிகாட்டுவது.

10 அதிகாரங்கள் பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருள் மல நிலை அருளதுநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிரவை விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை— இவை அவ்வதிகாரத் தலைப்புகள்.

6) கொடிக்கவி: உமாபதி சிவத்தால் தில்லையிலே கொடியேறும் பொருட்டுப் பாடப்பட்டது. ஞானதீக்ஷையின் பயனும், திருவைந்தெழுத்தின் ஓது முறைகளும் பொருளும் உரைப்பது.

7) வினாவெண்பா: பதின்மூன்று வெண்பாக்களால் ஆனது.

காண்பானும் காட்டுவதும் காண்பதும் நீத்துண்மை
காண்பார்கள் தன் முக்தி காணார்கள் காண்பானும்
காட்டுவதுவும், காண்பதுவும், தன் கடந்தைச் சம்பந்தன்
வாட்டு நெறி வாராதவர்

இது சுத்தாத்வைத சித்தாந்த முக்தியினியல்பை எடுத்துரைக்கிறது.

8) போற்றி பஃறொடை: உயிர்களுக்கு திருவருள் தோன்ற செய்து வரும் உபகாரங்களை நினைத்துப் போற்றுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

9) நெஞ்சு விடுதூது: உமாபதிசிவம் தன் ஞானாசிரியரான மறை திருஞான சம்பந்தரிடம் தன் நெஞ்சை தூது அனுப்புகிறார்.

கலிவெண்பாவில் அமைந்தது. இறுதியில் உள்ள தனிவெண்பா நூற் பொருளின் சாரமாக அமைந்துள்ளது.

10) உண்மை நெறிவிளக்கம்: ஞானச் செய்திகளை பத்து செயல்களாக விளக்குவது. தத்துவ உருவம், தத்துவக்காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம உருவம், ஆன்மக்காட்சி, ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம். உமாபதிசிவம் இயற்றியது.

11) சங்கற்ப நிராசரணம்: இதர சமயங்களை, மாயாவாதம்: ஐக்கியவாதம், பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சக்கிரந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், நிமித்த காரண பரிணாம சைவவாதம் என முறைப்படுத்தி அச்சங்கற்பங்களை நிராகரிப்பது.

சங்கற்பம்—கொள்கை, நிராகரணம்—மறுப்பு

12) சிவஞான சித்தியார்: அருள் நந்திசிவம் இயற்றியது. சிவாகமார்த்தங்களுக்கெல்லாம் உரையாணியாகும். சுபக்கம், பரபக்கம என இரு பிரிவுகளைக் கொண்டது.

சுபக்கம், 12 சூத்திரங்களைக் கொண்டது. முதல் மூன்று சூத்திரம் பிரமாணவியல், அடுத்த மூன்று இலக்கணவியல் அதற் கடுத்த மூன்று சாதனவியல் கடைசி மூன்று பயனியல் பரபக்கம்—பிறருடைய கொள்கைகளைக் கண்டித்தல். இதில் 14 சமயவாதிகளின் கொள்கைகள் எடுத்துக் கூறப் பெற்று மறுக்கப்படுகின்றன. அச்சமய வாதிகள் – உலகாயதர், சௌந்திராந்திகர், யோகசாரர், மாத்யமிகர், வைபாடிகர், நிகண்டவாதி, ஆசீவகர், பட்டாச்சாரியார், பிரபாகரர், சத்தப்பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியன், நிரிச்சுரசாங்கியர், பாஞ்சராத்ரியர்.

சமயங்களும் சாத்திரங்களும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் பல வாக இருப்பினும் இவற்றுள் "இது ஆகும், அது அல்ல எனும் பிணக் கின்றி நீதியினால் இவை எல்லாம் ஓரிடத்தே காண நின்றது யாதொரு சமயம் அது சமயம்" என்று சிவஞானசித்தியார் கூறுவது சைவத்தின் பரந்த நோக்கத்தைப் புலப்படுத்தும்.

தோத்திரங்கள்

சிவன் அவரது மெய்யடியார்கள் பற்றியும் ஸ்தோத்திரமாகவும் சரித்திரமாகவும் பேசும் இனிய தமிழ் பாடல்கள் அனைத்தும் 12 பிரிவு களாகப் பிரிக்கப்பட்டு 'திருமுறைகள்' எனப் பெயரிடப்பட்டுள்ளன.

1—3 முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தர் அருளிய தேவாரம்.

ஓதாதுணர்ந்து கருவிலே
திருவுரை காதியர் கோன் வந்தான்

4—6 அடுத்த மூன்று திருமுறைகள் திருநாவுக்கரசர் இயற்றிய தேவாரம்.

7—ம் திருமுறை சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது.

8—ம் திருமுறை மாணிக்கவாசகரின் திருவாசகமும் திருக்கோவையாரும்.

9—ம் திருமுறை — திருமாளிகை தேவர், சேந்தனர், கருவூர் தேவர், பூந்துருத்து காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்படிகள், திருவாலி அமுதனர், புருஷோத்தமநம்பி, சேதிராயர் ஆகிய 9 பேர் பாடிய பாடல்கள் ஒன்று சேர்ந்தது. ஒன்பதாம் திருமுறைக்கு ஒன்பது ஆசிரியர்களே அமைந்தது ஒரு பொருத்தம். சேந்தனர் பல்லாண்டு பாடியவர்.

10—ம் திருமுறை — திருமூலர் திருமந்திரம். இவர் வரலாறு 12-ம் திருமுறையான பெரிய புராணத்தில் 30-வது புராணமாக 28 பாடல்களைக் கொண்டு விளங்குகிறது.

11—ம் திருமுறை (40 வகை நூல்கள்) ஆசிரியர் பன்னிருவர். ஒருவர் இறைவனே!

12—ம் திருமுறை — சேக்கிழார் இயற்றிய பெரிய புராணம் என்கிற திருத்தொண்டர் புராணம்.

## திருமாமறையும் திருமாமுறையும்

திருமாமறை என்பது செந்தமிழ் வேதம். திருமாமுறை என்பது செந்தமிழ் ஆகமம்.

மூவர் ஓதிய தேவாரம் திருமாமறை மணிவாசகர் இயற்றிய திருவாசகம் திருமாமறை முடிபு (வேதாந்தம்) சிற்றம்பலக் கோவையார் திருவடிப் பேருகும்.

திருமூலர் இயற்றிய திருமந்திரம் திருமாமுறை. ஐந்தெழுத்தின் விரிவே அருமறையும் ஆகமமும் என்பர்.

சம்பந்தர் பாடிய திருக்கடைக்காப்புத் தேவாரப் பாக்கள் யாவும் ரிக் வேத சாரம்.

நாவுக்கரசர் இயற்றிய தேவாரம் யஜுர் வேத சாரம். சுந்தரமூர்த்திகளின் தேவாரப் பாக்கள் சாமவேத சாரம்

மாணிக்கவாசகர் திருவாசகத்தை அதர்வண வேதசாரம் என்பர்.

## நால்வர் காட்டிய வழியில் செல்வோம்

வினைகள் சுருங்க வேண்டும்
மன நிறைவு வேண்டும்
கசிந்துருக வேண்டும்
தொண்டருக்குப் பணிபுரிதல் வேண்டும்.

நால்வர் உபதேசித்ததும், வாழ்ந்து காட்டியதும் மேற்கண்ட இந்த நான்கு விஷயங்களே.

வினைகள் சுருங்க வேண்டும் : வினைகள் இல்லாமல் போனால் மறுபிறப்பு இராது. பிராப்தத்தை அனுபவிக்கும்போது புதிய வினைகளைச் செய்து கொண்டிருக்கிறோம். அனுபவித்து கழிக்க கழிக்க வினை சுருங்கிவிடும் இறைவன் திருவருள் இல்லையேல் புதிய வினைகள் சேர்ந்து பெருகிவிடும். ஆகவே இறைவன் அருளை வேண்டுகிறார் சம்பந்தர்,

ஆடினை நறு நெய்யோடு பால்தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினையிடமா நறுங்
கொன்றை நயந்தவனே
பாடினாய் மறையோடு பல கீதமும்
பல்சடைப்பணி காய்கதிர் வெண்திங்கள்
சூடினாய்! அருளாய் சுருங்க
எம் தொல் வினையே

மன நிறைவு வேண்டும் : அரசியல் மற்றும் பொருளாதார விடுதலையால் பொன்னும் பொருளும் பெற்று வாழலாம். ஆனால் உள்ளார்ந்த மகிழ்ச்சியும் மன நிறைவும் இதனால் கிட்டாது.

அப்பரடிகள் கூறுகிறார்,

நாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண்குழையோர் காதில்
கோமார்க்கே நாம் என்றும்மீளா ஆளாய்க்
கொய்மலர் சேவடியிணைக் குறுகினோமே

நாம் ஒரு மனிதனுக்கும் அடிமையில்லை ஆனால் சுதந்திரனுக்கே அடிமை என்கிறார்.

இதையே பாரதியார்,

பூமியில் எவர்க்குமினி அடிமை செய்யோம்
பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்

என்கிறார்.

நமக்கு வேண்டுவது ஆன்ம விடுதலை

எல்லாம் உனது பதம் எல்லாம் உனது செயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால்—பொல்லாத
மாதுயரம் நீங்கும் மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநாதா

—சொக்கநாத வெண்பா, ஸ்ரீ குருஞான சம்பந்தர்

கசிந்து உருகும் உள்ளம் வேண்டும் : நெகிழ்ச்சியுள்ள உள்ளம் எங்கும் பரவி நிற்கும். எல்லாப் பொருள்களையும் ஒன்றாக நோக்கும் எல்லாவற்றையும் விருப்பு வெறுப்பில்லாமல் கொள்ளும்.

உயிர்கள் இன்பத்தை விரும்பும், துன்பத்தை வெறுக்கும். இன்பமும் துன்பமும் மாறிமாறி வரும். முதலில் துன்பம் உண்டானால் பின்னர் இன்பம் ஏற்படும். சிந்தித்துப் பார்த்தால் துன்பம் காரணமாகவும் இன்பம் காரியமாகவும் காணப்படும். காரியம் காரணத்தை விட்டு வேறாவதில்லை. காரியமான இன்பமும் அதன் காரணமான துன்பத்தை விட்டு வேறாவதில்லை. இவ்வாறாகும்போது இன்பம் துன்பமாகவே முடிகிறது. இவ்வகையாக எல்லாவற்றையுமே துன்பமாகக் கொண்டு பலர் திகைத்துக் கலங்குகின்றனர்.

இந்த திகைப்பு நிலைதான் உள்ளம் கல்லாய்ப் போன நிலை. இந்த திகைப்பு ஒழிய வேண்டுமானால் கல்லுள்ளம் கசிந்துருக வேண்டும்.

துன்பம் காரணமாகவும் இன்பம் காரியமாகவும் கொள்ளலாம். அப்படி கொள்பவர் உள்ள நெகிழ்ச்சியுள்ளவரே. இவர்களுக்கு துன்பமும் இன்பமேயாகத் தோன்றும். எல்லாம் இன்பமயமாகத் தோன்றும்.

எல்லாம் [இன்பமயம் என்ற உணர்வை அளிக்கவல்லது திருவாசகம். இதை இயற்றிய மணிவாசகர் முழு வாழ்க்கை வாழ்ந்தவர் பிறவாநிலை எய்தியவர். தத்துவப் படிகளில் கீழேயிருந்து ஒழுங்காக ஏறிச் சென்றவர். அச்சம் உள்ள போதெல்லாம் அழுதழுது அவனருளைப் பெற்று அச்சம் நீங்கியவர்.]

## தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே

இறைவனை அடியார்க்கு அடியவன் என்று சொல்வதுண்டு.

ஞானத் தாயாகிய ஔவை பாட்டியிடம் ஞானப்பண்டிதனான முருகன், "உலகிலேயே பெரியது எது?" என்று ஒரு கேள்வியைக் கேட்டான்!

ஔவை பதில் சொல்கிறாள்:

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்
பெரிது பெரிது பெரிது புவனம் பெரிது

புவனமோ நான்முகன் படைப்பு!

நான்முகனோ கரிய மால் உந்தியில் வந்தோன். கரிய மாலோ அலைகடல் துயின்றோன். கடலையும் குறுமுனி உண்டார். குறு முனியோ கலசத்தில் பிறந்தான். கலசமோ புவியிற் சிறு மண். புவியும் உலகைத் தாங்கும் அரவுக்கு ஒரு பாரம்தானே. அரவும் உமையவள் சிறு மோதிரம். உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்.

"அவ்வாறாயின் இறைவன்தானே பெரியவர்" என்று கேட்டான் குமரன்.

"இல்லை. இறைவரோ தொண்டர் உள்ளத்து அடக்கம். தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்றாள் ஔவை.

ஆகவே அடியார் பெருமை அளவிட முடியாதது.

பெரிய பெரிய கவிகள் இயற்றிய நூல்களுக்கெல்லாம் பெரிய புராணம் என்ற பெயர் ஏற்படவில்லை. சுமார் 4000 பாடல்கள் கொண்ட திருத்தொண்டர் புராணமே "பெரிய புராணம்" என்ற பெயரைப் பெற்றது.

அடியார்கள் இறைவனிடம் "அதைக் கொடு, இதைக் கொடு" என்று கேட்பதில்லை. அவர்கள் நாடியதெல்லாம் 'கூடும் அன்பினில் கும்பிடுதலே'

"எச்சுவை தரினும் வேண்டேன். இந்திர லோகமாளும் அச்சுவையும் வேண்டேன்" என்கிறார் ஒரு ஆழ்வார். குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாய் குமின் சிரிப்பு...எடுத்த பொற்பாதம் இவைகளைக் காண மனிதப்பிறவியே வேண்டும் என்கிறார் நாவுக்கரசர்.

இறைவனே அடியவர்கள் பெருமையை சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் கூறியிருக்கிறார்.

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எந்மைப் பெற்ருர்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனமேல் ஒன்றும் இல்லார
அருமையாம் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்ருர்
இவரை நீ அடைவாய்

நம் அடியவர்களை வணங்கி அவர்கள் மீது பதிகம் பாடு என்று இறைவனே உத்தரவிடுகிருர். இறைவனுல் ஆட்கொள்ளப்பட்டு அவனருளாலே சிவனருட் செல்வர்க்கு ஆட்பட்டதை

ஆட்பால் பட்டமையால்
அடியார்க்குத் தொண்டு பட்டு

என்றும்

பண்டே நின்னடியேன்
அடியாரடியார்கட்கெல்லாம்
தொண்டே பூண்டொழிந்தேன்

என்று சுந்தரர் கூறியுள்ளார்.

பகவானுடைய அடியார்களின் பாத தூசிக்கே மிகவும் மகிமை யுண்டு என்பதை அறிந்த விப்ர நாராயணர் தன் பெயரை தொண் டரடிப் பொடியாழ்வார் என்று வைத்துக் கொண்டார்.

பெரியாழ்வார் தன் திருமொழியில்,

பூதமைந்தோடு வேள்வியைந்து
புலன்களைந்து பொறிகளால்
ஏதமொன்றில்லாத வண்கையிஞர்கள்
வாழ் திருக் கோட்டியூர்
நாதனை நரசிங்கனை நவின் றேத்து
வார்களுழக்கிய
பாததுளி படுலாலிவ்வுலகம்
பாக்கியம் செய்ததே

என்கிருர். இதிலிருந்து அடியார்களின் பாததுளிகள் நமக்கு ரக்ஷை யாக விளங்கி வருவது புலனுகும்.

இறை வழிபாட்டை ஆராதனை என்றும் அடியார்க்கு அன்ன மிட்டு வழங்குவதை சமாராதனை என்றும் சொல்வர்.

இறைவன் தன் தொண்டர்கள் வழிபடுவதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைகிருனும்.

இதை ஞானசம்பந்தர்,

மண்ணில் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்

என்கிறார்

இளையான்குடி மாற நாயனார் அடியார்க்கு அன்னமிடுதலையே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டவர்.

பசுவினிடம் பால் கறக்க வேண்டுமானால் அதற்கு பிரியமான கன்றைத் துணை அழைத்துச் செல்ல வேண்டும். அதுபோல சிவ பெருமானின் அருளைப் பெற அவரது அடியார் துணை மிக அவசியம். சிவபக்தியிலும் அடியவர்களிடம் பக்தி புரிவதே திருவருளைப் பெற எளிய வழி.

ஒரு குழந்தையினிடம் சிறியதொன்று பெரியதொன்று கற்கண்டு கட்டிகளைக் காட்டி உனக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள் என்றால் அது பெரியதைத்தான் எடுத்துக் கொள்ளும். அது போல கபீர்தாஸர் தன்னைத்தானே கேட்டுக்கொண்டு பக்தர்களுக்கு நித்ய இன்பம் காட்ட வழி சொல்கிறார். "அப்பா! நீ ஆண்டவனை வழிபடாதே. ஆண்டவன் அடியார்களை வழிபடு. அவன் அருள் பெற அதுவே சுருக்கு வழி".

நீரானது மண்ணை நிலை குலையச் செய்யும். நீர்ப்பெருக்கை வடவைக் கனல் வற்றச் செய்யும். அக்கனலை சண்ட மாருதம் அவித்து விடும். இறுதியில் அக்காற்று உயர்ந்த விண்ணில் ஒடுங்கி அடங்கும். இப்படி ஐம்பூதங்கள் நிலைகுலையும்போது கலங்காதவர் பரமனடி மறவாதவர். பல் உயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்கும் தெய்வக் கடவுள் தொண்டர் என்று 11-ம் திருமுறை தொண்டர் பெருமையை குறிப்பிடுகிறது.

## முப்பொருள் பற்றி குலார்ணவம்

ஸ்தூலம், ஸூக்ஷ்மம் காரண ஜீவன் சரீரங்களில் அபிமானம் கொண்டிருப்பதால்தான் பரப்பிரும்மாவாக இருந்தும் அதிலிருந்து வேறுபட்டவனாக நினைக்கிறான். இம்மாதிரியான அபிமானம், அக்ஞானம், அவித்யைதான் 'பாசம்'

இதனால் கட்டுப்பட்ட ஜீவன் 'பசு'

இவைகளுக்குக் கட்டுப்படாமல் இவைகளுக்கு எஜமானனாக இருக்கும் ஈஸ்வரன் 'பதி'

பசுவாகிய ஜீவன் பாசத்திலிருந்து விடுபட்டு விட்டால் பதியாகி விடுகிருன்

பாசபந்தே பவேத் ஜீவ: பாசமுக்த: சாதசிவ: குலார்ணவம்

## சேர வாரும் ஜெகத்தீரே

சைவ சமயம் காலம் கடந்தது. சமரசத்தைப் போதிப்பது, அன்பு நெறியை விளக்குவது, உயிர்கள் வழிபாட்டை அறிவுறுத்துவது. இது எல்லா சமயங்களுக்கும் தாயகமாக இருப்பதைக் கருதியே தாயுமானவர் "சேர வாரும் ஜெகத்தீரே" என்று உலகத்தினரையே அழைக்கிருர்.

பிறா அறியாமையை ஒழிக்க முயல்வது ஜீவகாருண்யமேயாகும். சமய குரவர்கள் தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களை ஏன் அருளிச் செய்தனர்?

மெய்கண்டார் முதலியவர்கள் ஞானநூல்களை எவருக்காக இயற்றினர்? பின் வருவோர் உய்ய வேண்டும் என்கிற கருணையால்தான்.

நான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெற வேண்டும் எனகிருர் திருமூலர். இவ்வளவு பரந்த கொள்கையைத் தாங்கியுள்ள சைவ சமய நூல்களை எல்லோரும் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை ஏற்படுத்துவதே இந்த நூல் எழுதியதன் நோக்கம்.

—சுபம்—

## இறைவன் அறிவிக்கும் பக்தி இலக்கணம்

இந்த பக்தியை பலர் பலவிதங்களில் கையாண்டிருக்கிருர்கள். கண்ணப்பனைப் போல பக்தி செலுத்த நம் யாராலும் முடியாது. பக்தனின் இலக்கணமே இறைவனலேயே அறிவிக்கப்படுகிறது.

"அவனுடைய வடிவெல்லாம்
நம்பக்கலன் பென்றும்
அவனுடைய அறிவெல்லாம்
நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம்
நமக்கினிய வாழ் என்றும்
அவனுடைய நிலை இவ்வாறறி நீ" என்றருள் செய்தார்

இது இறைவன் சிவகோசரியருக்குக் கூறியது. "கண்ணப்பன் வடிவமே என்பால் வைத்த அன்பின் வடிவம். அவன் அறிவெல்லாம் என்னை அறியும் அறிவு. அவன் என்ன செய்தாலும் அவை எனக்கு இனியவையே. அவன் நிலை இத்தகையது என்பதை அறிவாய்.

## நால்வர் வணக்கம்

பூழியர் கோன் வெப்பொழித்த
புகலியர் கோன் கழல் போற்றி
ஆழிசைக் கண் மிதப்ப லணைந்த
பிரானடி போற்றி
வாழி திரு நாவலூர் வன்றொண்டர்
பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர்
திருத்தாள் போற்றி

—சேக்கிழார்

## நால்வர் பெருமை

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம் சுந்தரரும்
சிற்கோல் வாதவூர் தேசிகனும் முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே? மாமறை நூல்தான் எங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுத்து எங்கே?

## நால்வர் பாட்டின் பெருமை

தேவர் குறளும் திரு நான்மறை முடிபும்
மூவர் தமிழும் முனி மொழியும் — கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்று உணர்

—ஔவை

## நால்வர் திருநக்ஷத்திரம்

சித்திரை சதயம் அப்பர் சிறந்தவை காசிமூலம்
அத்தரைப்பணி சம்பந்தர் ஆனி மாமகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர் முதிய நல் ஆடி தன்னில்
சுத்தமாம் ஜோதி நாளில் சுந்தரர் கைலை சேர்ந்தார்.

## நால்வர் வயது

அப்பருக்கு எண்பத்தொன்று அருள் வாதவூரருக்கு
செப்பிய நாலெட்டினில் தெய்விகம் இப்புவியில்
சுந்தரருக்கு மூவாறுதொல் ஞான சம்பந்தர்க்கு
அந்தம் பதினாறு அறி.

ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

## ஆஸ்திக பெருமக்களுக்கோர் அரிய செய்தி!

ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்
ஸ்ரீ சிருங்கேரி மகா சந்நிதானம், திருமுருக கிருபானந்தவாரியார்
ஸ்வாமிகளின் ஸ்ரீமுகமும், ஆசியும் அருளப் பெற்று
நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும்



# பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ மகா மேரு (பஞ்சலோகம்) | 1½"X1½" | விலை ரூ. 250—00 |
| 2. | ஸ்ரீ சக்ரம் (தாமிரம்) | 8cm X 8cm | விலை ரூ. 115—00 |
| 3. | ஸ்ரீ மகாலக்ஷ்மி சக்கரம் | ,, | விலை ரூ. 115—00 |
| 4. | ஸ்ரீ மகா கணபதி சக்கரம் | ,, | விலை ரூ. 115—00 |
| 5. | ஸ்ரீ சுதர்சன சக்கரம் | ,, | விலை ரூ. 115—00 |
| 6. | ஸ்ரீ நவக்கிரக மகா சக்கரம் | ,, | விலை ரூ. 115—00 |

கண்திருஷ்டி நிவர்த்தி சக்கரமும், டாலரும்:—
(வீடு, வியாபார நிலையம், தொழிற்சாலைகளில்
வைக்க, விபத்துக்களைத் தடுக்கக் கூடியது)

| | |
|---|---|
| சக்கரம் | விலை ரூ. 45—00 |
| டாலர் | விலை ரூ. 37—00 |
| விவாக ப்ராப்தி டாலர் | விலை ரூ. 45—00 |

(விவாகம் தடையின்றி நடக்க, நட்சத்திரத்
துடன் விண்ணப்பிக்கவும்)

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ஐயப்பன் டாலர் | | ரூ. 35—00 |
| தனப்பிராப்தி டாலர் (சொத்துக்கள் சேர்க்க) | | ரூ. 45—00 |
| ஒரிஜினல் ருத்திராக்ஷமாலை, 54 மணி வெள்ளியில் செய்தது | | ரூ. 250—00 |
| ,, தாமரைமணி மாலை | ,, | ரூ. 100—00 |
| ,, ஸ்படிகமணி மாலை | ,, | ரூ 250—00 |
| ,, துளசிமணி மாலை | ,, | ரூ. 60—00 |

மற்றும் பல சக்கரங்கள், டாலர்கள் விபரம் வேண்டுவோர் இலவச விலைப்பட்டியலுக்கு 0-25 பை. தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பிக்கவும்.





ஸ்ரீ ... முருகபூஷணம்
ஸ்ரீ ...ா உபாசகர், தலைவர்

நவசக்தி நிலையம்
...லாயிட்ஸ் ரோடு,
ஸ்டேட் பாங்க் எதிரில் (தேனாம்பேட்டை)
சென்னை - 600 086

போன்: 812012

எங்கள் லட்சியம். லோகா சமஸ்தாஸ் சுகினோபவந்து